அமரர் **கல்கி**யின்

நூல்களைச் சலுகை விலையில் கையடக்கப் பதிப்பாகத் தருகிறோம் !

# பொன்னியின் செல்வன்



6 தொகுதிகள் – 2728 பக்கங்கள் விலை ரூ.390.00

**சலுகை விலை ரூ.150.00**

தபாலில் பெற , தபால் மற்றும் கட்டுச் செலவு ரூ. 35.00 சேர்த்து ரூ.185.00 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலினைப் பெறலாம்.

# சிவகாமியின் சபதம்

4 தொகுதிகள் – 1242 பக்கங்கள் விலை ரூ.175.00

**சலுகை விலை ரூ.100.00**

தபாலில் பெற, தபால் மற்றும் கட்டுச்செலவு ரூ. 25.00 சேர்த்து ரூ.125.00 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலினைப் பெறலாம்.

# அலைஓசை

4 தொகுதிகள் – 1064பக்கங்கள் விலை ரூ.160.00

**சலுகை விலை ரூ.90.00**

தபாலில் பெற, தபால் மற்றும் கட்டுச்செலவு ரூ. 25.00 சேர்த்து ரூ.115.00 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலினைப் பெறலாம்.

**கடைசி வாய்ப்பு**
ஸ்டாக் உள்ள வரை
அல்லது
31.1.2001 வரை

# பார்த்திபன் கனவு

424 பக்கங்கள் விலை ரூ.50.00

**சலுகை விலை ரூ.35.00**

தபாலில் பெற, தபால் மற்றும் கட்டுச்செலவு ரூ. 10.00 சேர்த்து ரூ.45.00 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலினைப் பெறலாம்.

நான்கு நூல்களையும் ஒரே சமயத்தில் தபால் மூலம் பெறுவது மிக மிகச் சிக்கன முறையாகும். அதாவது நான்கு நூல்களின் சலுகை விலை ரூ. 375.00 + தபால் மற்றும் கட்டுச்செலவு ரூ. 50.00 சேர்த்து ரூ.425.00 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறலாம்.

தபாலில் பெற : தேவையான நூல்களுக்குக் கடிதம் எழுதுக. (பணம் அனுப்ப வேண்டாம்) நூல்கள் VPPயில் அனுப்பப்படும். முகவரி : **வர்த்தமானன் பதிப்பகம்** ஏ. ஆர். ஆர். வளாகம், 141, வடக்கு உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை-17. (பனகல் பார்க் அருகில்) ☎ : 8257995. நேரில் பெற : எமது அலுவலகத்தில் தேவையான நூல்களின் சலுகை விலையினை மட்டும் கொடுத்து நூல்களை உடனே பெறலாம். நேரம் : காலை 9.30 முதல் மாலை 6.30 வரை. உணவு இடைவேளை யின்றி. ஞாயிறு வார விடுமுறை.




# ஒரே பக்க காலண்டர்

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஏப் | ஜன | மே | ஆக | | | | | | பிப் | ஜூன் | செப் |
| ஜூலை | அக்டோ | | | | | | | | மார்ச் | | டிச |
| | | | | | | | | | நவ | | |
| ஞாயிறு | திங்கள் | செவ் | புதன் | 1 | 8 | 15 | 22 | 29 | வியா | வெள்ளி | சனி |
| திங் | செவ் | புதன் | வியா | 2 | 9 | 16 | 23 | 30 | வெள்ளி | சனி | ஞாயிறு |
| செவ் | புதன் | வியா | வெள்ளி | 3 | 10 | 17 | 24 | 31 | சனி | ஞாயிறு | திங்கள் |
| புதன் | வியாழன் | வெள்ளி | சனி | 4 | 11 | 18 | 25 | ** | ஞாயிறு | திங்கள் | செவ் |
| வியாழன் | வெள்ளி | சனி | ஞாயிறு | 5 | 12 | 19 | 26 | ** | திங்கள் | செவ் | புதன் |
| வெள்ளி | சனி | ஞாயிறு | திங்கள் | 6 | 13 | 20 | 27 | ** | செவ் | புதன் | வியாழன் |
| சனி | ஞாயிறு | திங்கள் | செவ் | 7 | 14 | 21 | 28 | ** | புதன் | வியாழன் | வெள்ளி |

தொகுப்பு:
டி.ஆர். நடராஜன்,
பெங்களூர்

"ஏசு கிறிஸ்து பிறந்து இரண்டாயிரம் ஆண்டுகள் நிறைவடைகின்றன. இந்த இருபது நூற்றாண்டு காலத்தில், பல நல்ல விஷயங்கள் நடந்திருக்கின்றன. பல துக்ககரமான சம்பவங்களும் நிகழ்ந்துள்ளன" என்கிறார் பால் தினகரன்.

"மனித மனம், மெய் ஞானத்திலிருந்து விலகிக் கொண்டே வருவதால் இன்று எதையும் விஞ்ஞான பூர்வமாக நோக்கும் மனப்பான்மை ஏற்பட்டுள்ளது. உச்ச கட்டமாக, உலகெங்கும் குறிப்பாக அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் கடவுள் மீது நம்பிக்கை குறைந்து வருகிறது. இதன் விளைவுகள் மிக அபாயகரமானவை என்பதை அவர்கள் உணரவில்லை என்பது வருத்தமளிக்கும் உண்மை.

"கடவுளின் மீது அவநம்பிக்கை கொண்டவர்கள், பிரச்னை என்று வரும்போது, 'யாரை நாடி உதவி கேட்பது என்று தடுமாறுகிறார்கள். மன நிம்மதி இழக்கிறார்கள்; தற்கொலையை நாடுகிறார்கள். இது பரிதாபமில்லையா?

"கடவுள் நம்பிக்கை இருப்பவர்களுக்கும்தான் எத்தனை விதமான பிரச்னைகள்? துருவத்துப் பனிக்கட்டி உருகி, உலகின் இயற்கையை மாற்றிக் கொண்டிருக்கிறது. ஓசோன் படலத்தில் ஓட்டை. இது போன்ற இயற்கை மாறுபாடுகளால் ஏற்படும் பிரச்னைகள் ஒருபுறம்; இன்னொரு புறம் மனிதநேயம் குறைந்து, பயங்கரவாதம் அதிகரித்து வருகிறது. பணம், பணம் என்று வாழ்க்கையின் அரிய அம்சங்களை மறந்து விடுகிறார்கள். நிம்மதி குறைந்து, பயத்துடன் வாழ வேண்டிய சோகமான சூழ்நிலை.

"மக்களின் தனிப்பட்ட வாழ்க்கையிலும் துன்பங்கள், துயரங்கள், மனக்கலக்கம். எனவே, இன்றைய கட்டத்தில் இறைவன் தான் துன்பங்களிலிருந்து நமக்குத் விடுதலையளிப்பவன் என்று அனைவரும் இறைவனை நாட வேண்டிய கட்டாயமும் ஏற்பட்டுள்ளதாக நான் கருதுகிறேன்.

"இறைவன், நமக்குத் துன்பமே வராமல் தடுத்து, நம்மை இன்பத்திலேயே மூழ்க வைப்பார் என்று நீங்கள் அர்த்தம் பண்ணிக் கொள்ளக் கூடாது. துன்பங்கள் வரவே செய்யும். அந்தச் சமயங்களில் துன்பங்களை, தைரியத்துடன் சந்திக்க அவசியமான மனோ பலத்தை ஆண்டவன் அருளுவார். அந்த மனோபலம், நம்மை பிரச்னைகளிலிருந்தும், சிக்கல்களிலிருந்தும் மீட்கும். இந்தத் தருணத்தில்தான் பிரார்த்தனை என்பது முன்னெப்போதையும் விட அதிக முக்கியத்துவம் பெறுகிறது" என்றார்.

"நீங்கள் தொலைபேசி மூலம் பிரார்த்தனை செய்கிற சேவையையும் செய்து வருகிறீர்களாமே? என்று கேட்டபோது, "தொலைபேசி மூலம் மட்டுமில்லை, இன்டர்நெட் மூலம் கூட எமது பிரார்த்தனை சேவை நடைபெறுகிறது" என்று சொல்லி விளக்கினார் பால் தினகரன்.



# இன்டர்நெட் மூலம் பிரார்த்

"இருபத்தி நாலு மணிநேரமும், நான்கு ஷிப்ட்களில் எங்கள் பிரார்த்தனை வீரர்கள் சேவையில் இருக்கிறார்கள். பிரார்த்தனை என்கிற ஆயுதம் ஏந்திப் போரிட்டு, துன்பத்தை வென்று, சந்தோஷத்தையும், நிம்மதியையும் நிலைநாட்டுவதால் பிரார்த்தனை சேவைப் பணியில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு இந்தப் பெயர். இவர்கள் தமிழ், தெலுங்கு, கன்னடம், இந்தி, ஆங்கிலம் என்று பல்வேறு மொழி

களில் பிரார்த்தனை செய்கிறார்கள்.

"மன நிம்மதி இன்றித் தவிப்பவர்கள் 4937722 என்ற எண்ணுக்கு டெலிபோன் செய்து, தங்கள் பிரச்னையைப் பகிர்ந்து கொள்ளலாம். பிரார்த்தனை வீரர்கள், அவர்கள் சொல்வதைப் பொறுமையுடன் கேட்டுக் கொள்ளுவார்கள். அப்போதே டெலிபோன் செய்பவருக்குப் பாதி பாரம் குறைந்து விட்டது போன்ற உணர்வு ஏற்பட்டுவிடும். கடன் தொல்லை, பணப் பிரச்னை, நோய், மனநிம்மதி இல்லாமை, குடும்பப் பிரச்னைகள், அடங்காத பிள்ளை, கொடுமைப்படுத்தும் கணவன், பிரிந்த மனைவி என்று இந்த மாதிரி என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாதபடி பற்பல விதமான பிரச்னைகள் கொண்டவர்கள் தொடர்பு கொள்கிறார்கள்.

அவர்களுக்குத் தொல்லை தீர்ந்து, நிம்மதி ஏற்படுத்தும் விதமாக நூற்று இருபது விதமான பிரார்த்தனைகள் உண்டு. அவற்றிலிருந்து, குறிப்பிட்ட நபரின் பிரச்னைக்குப் பொருத்தமான

தனை!

பிரார்த்தனையைப் பிரார்த்தனை வீரர் சொல்லி, மனக் கலக்கத்தைப் போக்குவார். கடவுள் எப்போதும் உங்களுடன்தான் இருக்கிறார் என்பதை எடுத்துச் சொல்லி, பிரார்த்தனையைத் தொடரும்படி கூறுவார்.

"இந்த டெலிபோன் சேவை தவிர, தினமும் சுமார் ஐயாயிரம் பேர் தங்கள் பிரச்னைகளைக் கடிதம் மூலம் தெரிவிக்கிறார்கள். அவர்களுக்காகவும் பிரார்த்தனை செய்யப்படுகிறது. அவர்களுக்குத் தவறாமல் பதில் எழுதப்படுகிறது. கடிதங்களை அனுப்புவதற்கு முன் நானோ, என் தந்தையோ, தாயாரோ பிரத்யேகப் பிரார்த்தனை செலுத்துகிறோம்.

நேரடியான பிரார்த்தனை, கடிதம், தொலைபேசி வரிசையில் லேட்டஸ்ட் தான் இன்டர்நெட் மூலம் பிரார்த்தனை. எங்களுடைய இணையத் தளம் www.prayertoweronline.org.

இதில் பலவிதமான பிரார்த்தனைப் பகுதிகள் உள்ளன. இந்த இணையத் தளத்துக்கு வருபவர்கள், தங்களுக்குத் தேவையான பிரார்த்தனைப் பகுதிக்குச் சென்று பிரார்த்தனை செய்யலாம். பிரச்னையை இன்டர்நெட் மூலம் தெரிவிக்கிறவர்களுக்கு, நாங்களும் பிரார்த்தனை செய்து, இன்டர்நெட் மூலமாகவே பதில் தருகிறோம்" என்றார் பால் தினகரன்.

சந்திப்பு:
**எஸ். சந்திரமௌலி**

# 2000



• நெய்வேலி சந்தான கோபாலன்

**'மால்குடி' சுபா :**
நான், என் கணவர் இரண்டு பேருமே ரமண பக்தர்கள். ரமணாசிரமத்துக்குப் பக்கத்திலேயே, ஒரு கெஸ்ட் ஹவுஸ் இருந்தா வசதியா இருக்குமேனு ரொம்ப நாளா நினைச்சுக்கிட்டிருந்தோம். அது இந்த வருஷம்தான் கைகூடி வந்திருக்கு.

அடி அண்ணாமலையில, அழகான வீட்டைக் கட்டிக்கிட்டிருக்கோம். என் கணவர் சுரேஷ் கைலாஷ் ஒரு ஆர்க்கிடெக்ட் என்பதால், பக்தன் ஒருவன் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து மலையை வணங்குவது போல அந்த வீட்டை வடிவமைத்திருக்கிறார். வீட்டின் பெயர் 'சரணாகதி'!



• விசாலி

**கமலா காமேஷ் :**
சினிமாவுல எனக்கு இது வெள்ளி விழா ஆண்டு. சிப்ரெஸ் ப்ளூ கலர்லே மாருதி 800 கார் வாங்கியிருக்கோம். ரொம்ப நாள் ஆசை நிறைவேறியிருக்கு. நீண்ட இடைவெளிக்குப் பிறகு நிறைய சினிமா சான்ஸ் வர ஆரம்பிச்சிருக்கு. 'ஆண்டான் அடிமை', 'ஆளவந்தான்', 'கே. பாலசந்தரின் சின்னத் திரை'ன்னு மறுபடி பிஸியாயிட்டேன்.

**பட்டுக்கோட்டை பிரபாகர் :**
2000த்திலே நிறைய நல்ல விஷயங்கள் நடந்திருக்கு. நான் எழுதி, இயக்குற 'கோபுரம்'



• அஜித்



• சுகன்யா

# ...ப்படி?

மெகா சீரியலா, சன் டி.வியிலே வரப் போகுது. பெயரிடப்படாத பிரசாந்த் படம், 'சாமுராய்' இரண்டுக்கும் வசனம் எழுதியிருக்கேன். என்னுடைய 80 சிறுகதைகளைத் தொகுத்து 'கலைஞன்' பதிப்பகம் புத்தகமா வெளியிடறாங்க. எனக்கு மருமகன் பொறந்திருக்கான்.



• சுஜாதா



• புஷ்பவனம் குப்புசாமி

**டைரக்டர் வசந்த் :** 'கேளடி கண்மணி'க்குப் பிறகு 'ரிதம்' நிறைய பாராட்டுகளை வாங்கிக் கொடுத்தது. அதுல சந்தோஷம். தீபாவளி அன்னிக்கு சிவானந்த குருகுலம் போய், அங்கிருப்பவர்களுடன் பழகியது நெகிழ்ச்சியான அனுபவம்.



• சுபா

**விசாலி மனோகரன் :** அரசியல், டி.வி, இலக்கியம் மூன்றிலும் எனக்கு நல்ல ஆரம்பம் இந்த வருஷம்தான் கிடைச்சுது. புரட்சித் தலைவியைப் பார்த்து, அவங்க ஆசியோட, அ.இ.அ.தி.மு.க. கட்சியிலே சேர்ந்தேன். 'வானமே எல்லை' டாக்-ஷோ ரொம்ப பிரபலமாயிருக்கு. அப்பா கண்ணதாசன் எழுதிய 'ஏசு காவியம்' போலவே, நானும் என்னுடைய பாணியில் கிறிஸ்துவின் கதையைக் கவிதைகளில் எழுதியிருக்கேன். இந்த நூல் நான் கண்ணதாசனின் வாரிசு என்பதை நிரூபிக்கும்.

**சுகன்யா :** என்னோட டி.வி. பிரவேசம் 'க்ளிக்' ஆனதுதான் இந்த வருஷத்து சந்தோஷம்.



• வசந்த்

• கிரேஸி மோகன்



**ஸ்வர்ணமால்யா :**
ஏதோ கையைக் காலை ஆட்டிக்கிட்டு ஜாலியா காம்பியரிங் பண்ணிக்கிட்டிருந்த எனக்கு சினிமா சான்ஸ் அடிச்சது இந்த வருஷம்தான். அதுவும் மணிரத்னம் இயக்கத்தில். ஹௌ லக்கி! 'புன்னகை' மூவி. சீரியலுக்குப் பிறகு எனக்கு ரசிகர்கள் எண்ணிக்கை அதிகமாயிடுச்சு. சாட்சி, தினமும் கட்டுக்கட்டாய் வரும் கடிதங்கள். அப்புறம், 'யுவகலா பாரதி'னு பட்டம் கிடைச்சிருக்கு. கலர் கலரா டிரஸ் வைக்க புது பீரோ வாங்கியிருக்கேன். புதுசா மேடிஸ் கார் வாங்கி ஓட்டிக்கிட்டிருக்கேன். கஷ்டப்பட்டு ஏழு கிலோ எடை குறைச்சிருக்கேன். பாங்க் பேலன்ஸ் கணிசமா ஏறியிருக்கு. எல்லாமே இந்த வருஷத்துலதான். தாங்க்யூ கிருஷ்ணா, தாங்க்யூ ஜீசஸ், தாங்க்யூ அல்லா!

**நெய்வேலி சந்தானகோபாலன்:**
2000 எனக்குத் தெளிவைக் கொடுத்திருக்கு. சங்கீத உலகம் ஏதோ ஒரு ஃபீல்டு மாதிரியும், அதுல நம்ப இடம் எதுன்னும், பிரபலமா மின்னணும்னும் சில எண்ணங்களோட குழப்பமா இருந்தது. ஆனா இப்ப பரமாச்சாரியார் அனுக்ரஹத்துல ஒரு தெளிவு வந்திருக்கு. இசையின் துணையால், ரசிகர்களுக்கு தெய்வீக அனுபவம் தரணும். அதுக்கு என்னைத் தயார் பண்ணிக்கணும்னு முடிவு பண்ணியிருக்கேன். கச்சேரிகளில் பாபநாசம் சிவன் போன்றோரின் தமிழ்ப் பாடல்களை நிறைய பாட ஆரம்பிச்சிருக்கேன்.

• ஸ்வர்ணமால்யா

**புஷ்பவனம் குப்புசாமி :**
எங்கள் மகள் பல்லவிக்கு ஐந்து வயதாகிறது. அனிதா மீண்டும் கர்ப்பமாக இருக்கிறார். இந்த வருஷத்து சந்தோஷமான விஷயம்னா இதுதான்!

**அஜீத் :**
ஷாலினி கிடைச்சாங்க. என் படங்கள் பாக்ஸ்-ஆபீஸ் ஹிட்டாச்சு. எனக்கு கலைமாமணி அவார்டு கிடைச்சது. இந்திப் படத்துல நடிக்கிறேன். இரண்டாயிரம் ரொம்ப லக்கி.

**கிரேஸி மோகன் :**
என்னோட 21வது நாடகமான 'ஜுராசிக் பேபி' சூப்பர் டூப்பர் ஹிட். 'தெனாலி' நல்லா போயிட்டிருக்கு. வெளிநாட்டுக்காரர் ஹீரோவா நடிக்கிற 'லிட்டில் ஜான்' படத்துக்கு நான் வசனம் எழுதியிருக்கேன். இது போதாதா கொண்டாட!

— அனுராதா


• கமலா காமேஷ்



# தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

# பவர்ஃபைனான்ஸ்

நடத்தும்

## டெபாசிட் திரட்டும் முகாம்

உள்ளூர் காசோலை ஏற்றுக்கொள்ளப்படும்

| | |
|---|---|
| **காரைக்குடி** | **நாள் : 3 ஜனவரி, 2001.**<br>**சேம்பர் ஆஃப் காமர்ஸ் & இண்டஸ்ட்ரி**<br>34, மேலஊரணி வாய்க்கால் தெரு,<br>காரைக்குடி - 630 001. தொலைபேசி : 437297 |
| **சிவகங்கை** | **நாள் : 4 ஜனவரி, 2001.**<br>**சிவகாமி முத்துகாமாட்சி திருமண மண்டபம்**<br>3, மதுரை சாலை, சிவகங்கை. தொலைபேசி : 44606 |
| **மதுரை** | **நாள் : 5 & 6 ஜனவரி, 2001.**<br>**YMCA**<br>மெயின் கார்ட் ஸ்கொயர் (மீனாட்சி அம்மன் கோயில் அருகில்),<br>மதுரை - 625 001. தொலைபேசி : .746649 / 740591 |

**நேரம் : காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை**

## எங்களின் அடுத்த டெபாசிட் திரட்டும் முகாம்கள்

| | | |
|---|---|---|
| பெங்களூர் | ஆசீர்வாத், ஆசீர்வாத் ஜங்ஷன் | நாள் : 21 & 22 ஜனவரி, 2001 |
| மும்பை | வாஷி : நவி மும்பை தமிழ் சங்கம் ஹால் | நாள் : 26 & 27 ஜனவரி, 2001 |
| | மாதுங்கா : பம்பாய் ஆர்ய வைஷ்ய சங்கம் ஹால் | நாள் : 28 & 29 ஜனவரி, 2001 |

| **12.12%** | **16.34%** |
|---|---|
| 12 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 10.59%.<br>24 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 11.10%<br>36, 48, 60 மாதங்களுக்கு மாதத்திற்கு வட்டி 12.00%,<br>காலாண்டிற்கு வட்டி 12.12%. | 60 மாதங்களுக்கு<br>(மாதாந்திர கூட்டுவட்டி<br>ஆண்டிற்கு 12.00%) |

*மேலும் விவரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :*




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம்**

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண் 84, டிடிகே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.

தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894.

Visit us at : www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com / www.southindia.com / www.webulagam.com

# அப்பல்லோவில் காளிமுத்து



• நிர்மலா காளிமுத்து-டேவிட் அண்ணாதுரை

கரை வேட்டி கட்டிய தொண்டர்கள் குறைந்தது ஐம்பது பேராவது தினமும் அப்போலோ மருத்துவமனை வருகிறார்களாம். காளிமுத்துவின் அறை இருக்கும் வார்டு வரை சென்று, அங்கே கொஞ்ச நேரம் நின்றுவிட்டு, அவரை நேரிலேயே பார்த்துவிட்டது போன்ற திருப்தியோடு திரும்பிப் போகிறார்களாம்!

வட்டம், மாவட்ட அளவிலான நிர்வாகிகளுக்கும், நெருங்கிய நண்பர்களுக்கும் நேரடியாகப் பார்க்க டோக்கன் தரப்பட்டபோதும், அனுமதிக்கப்பட்ட பகுதியில் நின்றுதான் காளிமுத்துவைப் பார்த்து விட்டுப் போகிறார்கள். இப்படி வந்து போகும் எல்லோருடைய ஏக்கமும், காளிமுத்து தேர்தல் களத்திற்குப் பேச வருவாரா, தீப்பொறிப் பேச்சு அனல் பறக்குமா? என்பதுதான்.

"காளிமுத்துவின் உடல் நிலை எப்படி இருக்கிறது?" என்று அவரது குடும்பத்தாரிடம் விசாரித்தோம்.

"பொதுப் பிரிவுக்கு வந்த பிறகு உடல் நலம் தேறியிருக்கிறார். உயிர் காற்று இயந்திரம் நீக்கப்பட்டு, சுயமாக சுவாசிக்கிறார். ஒன்றிரண்டு வார்த்தை பேசுகிறார்" என்று சந்தோஷப்பட்டார் திருமதி நிர்மலா காளிமுத்து.

"மதுரையில் நடந்த சித்தப்பா மகளின் திருமண வரவேற்பில் கலந்து கொண்டு விட்டு, சென்னை திரும்பிய போதே, அப்பாவுக்கு மாரடைப்புக்கான அறிகுறிகள் இருந்திருக்கின்றன. ஆனால் அதை அவர் பொருட்படுத்தவில்லை. 'சென்னை சென்றுவிடலாம்' என்று தம் உதவியாளரிடம் சொல்லியிருக்கிறார். இங்கே வந்து சேர்ந்ததும் வலி குறைந்து விட்டது என்று அலட்சியமாக இருக்க நினைத்தவரைக் கட்டாயப்படுத்தி ஜுபைதா நர்ஸிங் ஹோமுக்கு அழைத்துச் சென்றிருக்கிறார்கள்.

"நான் நார்மலாத்தான் இருக்கேன். ஈ.சி.ஜி. எல்லாம் தேவையில்லை என்று மறுத்திருக்கிறார் அப்பா. ஆனால் டாக்டர் தேவராஜ் சற்றும் தாமதிக்காமல் பரிசோதனைகள் செய்ததில், இதய அடைப்புப் பிரச்னைத் தெரிய வந்தது. உடனே அப்பல்லோ மருத்துவமனைக்குக் கூட்டிச் சென்று, தீவிர சிகிச்சைப் பிரிவில் சேர்த்து விட்டார்கள்.



"இங்கே டாக்டர் நஜீம், டாக்டர் தேவராஜ் தலைமையிலான மருத்துவக் குழு அப்பாவுக்கு மிகச் சிறந்த சிகிச்சை அளித்து வருகிறார்கள். முதலில் ஆஞ்சியோ கிராம் செய்து இதயக் குழாய்களில் எங்கெல்லாம் அடைப்பு என்று கண்டறிந்து சிகிச்சை அளித்து வருகிறார்கள். ஏற்கெனவே அப்பாவுக்குச் சர்க்கரை வியாதி உண்டு. அதைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்க, சாப்பாடு விஷயத்திலும் கட்டுப்பாடாக இருந்தார். நிறைய தேநீர் குடிப்பார். இதனால் அவருக்கு வயிற்றுப்புண் இருந்தது. இதயக் குழாய் அடைப்பிற்கு மருந்து கொடுக்கும் அதே நேரத்தில் வயிற்றுப் புண்ணிலிருந்து கசியும் இரத்தத்தை நிறுத்தவும் மருந்து கொடுக்க வேண்டியதாகி விட்டது. இரத்தக் கசிவை நிறுத்த, இரத்தத்தை உறைய வைக்கும் மருந்து கொடுக்கலாம் என்றுதான் டாக்டர்கள் முதலில் முடிவு செய்தனர். ஆனால் இரத்த அடைப்பிற்கு இது மேலும் காரணமாகி விடும் என்பதால், வேறு வழியை யோசித்தார்கள். அதற்குள் கடவுள் அருளால் இரத்தக் கசிவு தானாகவே நின்று விட்டது. தற்போது தொண்ணூறு சதவிகித இதய அடைப்பைச் சரி

செய்து விட்டார்கள். இப்போது அப்பா சகஜ நிலைக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறார். ஆனாலும் பைபாஸ் அறுவை சிகிச்சையைத் தவிர்க்க முடியாது என்று டாக்டர்கள் கூறியிருக்கிறார்கள். பூரணமாய் குணமானதும், இந்த மாத இறுதிக்குள் அறுவை சிகிச்சையை முடித்து விடுவார்கள். அதற்குப் பிறகு இரண்டுமாத ஓய்வு போதுமாம். பிறகு வழக்கம் போல் பணிகள் செய்யலாம் என்று டாக்டர்கள் நம்பிக்கை தெரிவித்திருக்கிறார்கள்'' என்றார் மதுரை சட்டக் கல்லூரியில் பயின்று வரும் காளிமுத்துவின் மகன் டேவிட் அண்ணாதுரை. இவரும் தந்தை வழியில் அரசியலில் ஈடுபட்டிருக்கிறார்.

"ஒரு மாதத்திற்குக் குறைந்தது இருபத்தைந்துக் கூட்டங்களாவது பேசி விடுவார். 'தேர்தல் வரப் போகிறது, பம்பரமாய்ச் சுழல வேண்டியிருக்கும். போதிய ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்' என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். அவர் கேட்கவில்லை. கட்சித் தொண்டர்கள், நிர்வாகிகள் மனம் நோகக் கூடாது என்பதால், தொடர்ச்சியாக தேதிகள் கொடுத்து விடுவார். ஒப்புக் கொண்ட கூட்டம் எதையும் ரத்து செய்ய மாட்டார்'' என்றார் நிர்மலா காளிமுத்து ஆதங்கத்தோடு.

**கா**ளிமுத்துவுக்கு மாரடைப்பு என்று செய்தி வந்ததும், ஹைதராபாதில் இருந்த ஜெயலலிதா உடனடியாக சென்னை திரும்பினார். நேரே அப்பல்லோவுக்கு விரைந்து, காளிமுத்துவின் உடல்நலம் விசாரித்தார். மீண்டும் ஒருமுறை மருத்துவமனைக்கு வந்து, மருத்துவக் குழுவோடு தீவிர ஆலோசனை நடத்திச் சென்றிருக்கிறார்.

" 'இனி, அதிகம் பேசக் கூடாது. நல்லா ரெஸ்ட் எடுக்கணும்' என்று அம்மாவே சொல்லிவிட்டார். விரைவில் குணமாயிடுவார்'' என்று நம்பிக்கை தெரிவித்தார் நிர்மலா காளிமுத்து.

'கழகத்தில் காளிமுத்துவின் இடம், ஒரு பேச்சாளர் என்ற மட்டத்தோடு நின்று விட்டது. துணைப் பொதுச் செயலாளர் பதவியெல்லாம் அவர் கழக 'ரோபோ'வாக பவனி வர தலைவி தந்த ஊக்கப் பரிசு மட்டுமே' என்றெல்லாம் கோஷ்டிகானம் பாடிய இரத்தத்தின் இரத்தங்களின் வாயை, காளிமுத்து மீது ஜெயலலிதா காட்டியிருக்கும் பரிவு, அடைத்து விட்டது.

— ஜெயன்

படங்கள்: ராஜன்



# பெண்கள்

— எதிர்காலம் பற்றிக் கவலைப்படாமல், முதல் படத்திலேயே ஒரு தீவிர சமூகப் பிரச்னையைக் கையிலெடுத்திருக்கிறார் இயக்குனர் ராஜ் மருது.

– காலம் காலமாகத் தொடரும் பாலியல் விற்பனைக்கு மும்பை சிவப்பு விளக்குப் பகுதியைப் போல, பலியாகிவிடுகிறது ஒரு வறண்ட கிராமம். ஆண் குழந்தை பிறந்தால் கள்ளிப்பால் புகட்டி, கணக்கை முடித்துவிடும் அந்தக் கிராமத்தின் 'மண் வாசனை'யிலிருந்து தன் மகளை மறைத்து விடுகிறான் ஒரு விலைமாது.

– அனாதை ஆசிரமம் ஒன்றில் படித்து மனசாட்சியுள்ள பெண்ணாக வளரும் அவளுக்கு, தன் ஊரைப் பற்றித் தெரிய வந்ததும் இதயம் உறைந்து போகிறாள்.

– உயிரைக் கொடுத்தாவது ஊரை மாற்றியே தீருவேன் என்று தன் கிராமத்திற்கு வரும் கதாநாயகி காவிரியின் போராட்டம்தான் கதை.

– காவிரியாக நடித்திருக்கும் புதுமுகம் திவ்யாஸ்ரீயின் தோற்றத்தில் ஒரு போராளிக்கான கம்பீரம் நஹி! நடிப்பிலாவது கொஞ்சம் ஆக்ரோஷம் காட்டுவார் என்று எதிர்பார்த்தால் க்ளைமாக்ஸ் வரை எல்கேஜி ரகம்.

– அடிக்கொரு அசத்தல் பழமொழியைப் பொருத்தமாக டெலிவரி செய்தபடி கிராமத்தின் ஏக போக ஏஜென்டாக வலம் வரும் வலசம்மா பாத்திரத்தில் பிரமாண்டமாய் மிளிர்கிறார் ஷர்மிலி.

– ஆகாஷ் – திவ்யாஸ்ரீ காதலுக்கு நியாயமான ஸ்கோப் இருந்தும் அதை டம்மியாக்கிவிட்ட நிலையில் டூயட் மட்டும் எதற்கு?

– தன் கிராமத்தின் மறுபக்கத்தை, மீடியாவின் பார்வைக்கு எடுத்துச் செல்லும் காவிரியின் போராட்டத்தில் அழுத்தம் காணோம்!

– கலைச்சினிமா, டாகுமெண்டரி ஆகியவற்றின் சாயலும் அங்கங்கே கண் சிமிட்டுகிறது.

– காரணம், பாலியல் தொழிலாளர்கள், வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் சந்திக்கும் எல்லா பிரச்னைகளையும் ஒரே படத்தில் சொல்லிவிட நினைத்திருக்கும் இயக்குனர்.

– இதனால் இடைவேளைக்குப் பிறகு இரண்டாவது பாகம் போல ஆகிவிட்டது படம். (தற்போது படத்தின் நீளத்தைக் குறைத்து விட்டதாகத் தகவல்)

– இத்தனை ஓட்டைகளையும் அடைத்து விடுவது கூர்மையான வசனங்களும், பரத்வாஜின் இசையும்தான்.

— விஷ்வல்தாசன்

**கலைச்சினிமா, டாகுமெண்டரி ஆகியவற்றின் சாயல் அங்கங்கே கண் சிமிட்டுகிறது.**

ஸ்ரீ மாத்ரே நம :

# ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா

ஸற்குணேஸ்வரபுரம் : கருவிலி. (Via)எரவாஞ்சேரி – 609 501.

## ஸ்ரீ சதசண்டி ஹோமம்

அன்புடையீர்,

ஸ்ரீ ஸற்குணேச்வர கைங்கர்ய ஸபா பல நற்பணிகளை ஆற்றி வருகிறது. இவற்றின் தொடர்ச்சியாக தை மாதம் 13-ஆம் தேதி முதல் 15 -ஆம் தேதி முடிய (26.01.2001 முதல் 28.01.2001 முடிய) மூன்று தினங்கள் **ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரி ஸமேத ஸ்ரீ ஸற்குணேச்வரர் திருக்கோயில்** வளாகத்தில் உலக நலனை முன்னிட்டு **ஸ்ரீ சதசண்டீ ஹோமம்** நடைபெற இருக்கின்றது. இவை நாட்டின் அமைதியற்ற சூழ்நிலையைக் கருதியும், ஸநாதன தர்மத்தில் மக்களுக்கு மாறுபாடில்லாத நம்பிக்கை உண்டாக விரும்பியும் தினசரி வேத பாராயணங்களும், ஸங்கல்ப பூர்வகமாக ஸுந்தர காண்ட பாராயணங்களும் நடைபெற இருக்கின்றன.

மேலும் தினசரி ஸ்ரீ ருத்ரத்ரிசதி, லலிதா ஸஹஸ்ரநாம, ஸ்ரீலலிதா த்ரிசதி பாராயணங்கள் மற்றும் அர்ச்சனைகள், ஸ்ரீசிவ கவச, இந்திராக்ஷி, விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர பாராயணங்களும் ஸங்கல்ப பூர்வகமாக நடைபெற இருக்கின்றன.



பரப்பிரும்ம தத்துவத்திற்கு ஈச்வரத் தன்மையை அருளும் அருட் சக்தியை, பிரும்ம விஷ்ணு ருத்ரர்களால் எல்லா காலங்களிலும் வணங்கப்படும் மஹா சக்தியை வழிபடும் பேறு, புண்ணியம் மிகுந்தவர்களுக்கே கிடைக்கும். நமக்கு இந்தப் பேறு கிடைத்திருக்கிறது. ஆபத்துக்களையும், துன்பங்களையும் அப்போதே நீக்குவது **சண்டீ பாராயணம்**. அம்பிகையின் அருளொளியை உணரச் செய்வது **சண்டீ பாராயணம்**. பல பிறவிகளில் சேர்ந்த பாவங்களை நீக்குவது **சண்டீ பாராயணம்**.

இவை சிறப்பாக நடந்தேற அனைவரும் தங்களால் இயன்றதை பொருளாகவோ பணமாகவோ கீழ்க்கண்ட ஸபாவின் பெயருக்கு அனுப்பக் கோருகிறோம்.

ரூ. 500/-ம் அதற்கு மேலும் நன்கொடை அளிப்பவர்களுக்கு பூஜையில் வைத்து **அபிமந்திரிக்கப்பட்ட 10 கிராம் வெள்ளி டாலர் பிரசாதத்துடன் வழங்கப்பட உள்ளது.**

குடந்தை பூந்தோட்டம் நெடுஞ்சாலையில் குடந்தையிலிருந்து 21 கி.மீ. தொலைவில் உள்ள **கருவிலியில்**, அரசலாறு நதிக்கரையில் பாவம் தீர்க்கும் யமதீர்த்தத்தின் மேற்புறத்தில் **ஸ்ரீ சர்வாங்க ஸுந்தரி சமேத ஸ்ரீ சற்குணேச்வரர்**, திருக்கயிலாயம் துறந்து கோயில் கொண்டு அருள்பாலித்து வருகின்றார்கள். தன் கருணைக் கடாக்ஷத்தால் அப்போதே துயர் துடைக்கும் **ஸ்ரீ ஸர்வாங்க சுந்தரியின்** திருவடிவாரத்தில் இவை நடைபெறுவது கூடுதலான அரிய சிறப்புப் பொருந்தியதாகும். இந்த ஞான வேள்வியில் அனைவரும் பங்கேற்க வேண்டுகிறோம்.

சிறப்புப் பேருந்து வசதிகளும், உணவு மற்றும் இருப்பிட வசதிகளும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

**கருவிலி**
*20.11.2000*

இங்ஙனம்,
ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா நிர்வாகிகள்

---

பி.கு : பொருளாகவோ, பணமாகவோ நன்கொடைகள் அனுப்ப வேண்டிய முகவரிகள் :

ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா

1. ஸ்வாமி ஸ்ரீ ஸச்சிதானந்தா,
ஸ்ரீ ஸற்குணேச்வரர் திருக்கோயில்
ஸற்குணேச்வரபுரம்,
எரவாஞ்சேரி (வழி) – 609 501.

2. G. குஞ்சிதபாதம், F.C.A.,
G. நடேசன் & Co.,
டபீர் மேலத் தெரு,
கும்பகோணம் – 612 001.

3. G.கண்ணன், D/127-A, ராஜமன்னார் சாலை, கே. கே. நகர், சென்னை – 78.

# நாலாயிரமும் நாலு 'நச்' கேள்விகளும்



2001ம் ஆண்டு புத்தாண்டு தினத்தன்று எஸ்.வி.சேகர் தனது 4001வது நாடகத்தை நடத்துகிறார். அவருக்கு 'நாடக ரத்னா' என்ற பட்டம் வழங்குகிறது நாடக அகாடமி. 4000 நாடகம் முடித்துள்ள எஸ்.வி.சேகரிடம் 'நச்'சென்று நாலு கேள்விகள்.



**உ**ங்களை 'நாடக உலக சூப்பர்' ஸ்டார் என்று குறிப்பிடுகிறார்கள். இந்தப் பட்டத்துக்கு நீங்கள் உண்மையிலேயே தகுதியானவர்தானா?

"நாடகம் போடுகிறவர்களும், விழாவுக்கு அழைப்பவர்களும் 'உங்கள் பெயரை எப்படிப் போடுவது?' என்று கேட்டால், 'எஸ்.வி.சேகர்' என்று போடுங்கள். அதுதான் என் பெயர்.' என்று சொல்லுவேன். இந்த சூப்பர் ஸ்டார் பட்டமெல்லாம் நான் கேட்காதது. இன்று எனக்குக் கொடுப்பார்கள். நாளை இதைத் தூக்கிவேறு யாருக்காவது கொடுத்து விடுவார்கள். ஆக, என்னை எஸ்.வி.சேகர் என குறிப்பிட்டாலே போதும்."

நீங்கள் நாடகத்தின் மூலம், பெயரும், புகழும், பணமும் சம்பாதித்துவிட்டீர்கள். சரி! சாதித்தது என்ன?

"என் நாடகத்தைக் கேசட்டில் போட்டால்

ஒரு லட்சம் கேஸட் விற்கிறது. ஜெயலலிதா முதல்வராக இருந்தபோது, அவரை என் நாடக விழாவுக்கு அழைத்து, நாடகக் குழுவினருக்கு எந்த ஊருக்கும் பஸ் கட்டணத்தில் ஐம்பது சதவிகித சலுகை கிடைக்கச் செய்தேன். அதேபோல கலைவாணர் அரங்க கட்டணத்திலும் ஐம்பது சதவிகித சலுகை தந்தார். (இப்போது அது தரப்படுவதில்லை). பள்ளிக் கூடத்தில் நாற்பது மாணவர்கள் படிப்புக்கு உதவி, ரத்ததானம், கண்தானம், முதிய கலைஞர்களுக்கு உதவி இதெல்லாம் என்னால் செய்ய முடிகிறது என்றால், அதற்கு நாடகம் தானே காரணம்."

**உங்கள் நாடகத்தைப் பார்க்கிறபோது, ரசிகர்கள் சிரிக்கிறார்கள். முடிந்தபின் எதற்காக சிரித்தோம் என்பதே மறந்து போகிறது. தப்பித்தவறி, ஞாபகம் வந்தாலும், இதற்**



**காகவா சிரித்தோம் என்று எண்ணத் தோன்றுகிறதே. இது ஏன்?**

"எதற்காக சிரித்தோம் என்பது மறந்து போய்விடுவதால்தான் திரும்பத்திரும்ப வருகிறார்கள் போலும். நான் ரசிகர்களைப் போய் கிச்சு கிச்சு மூட்டுவது இல்லை. நான் பேசுவதைக் கேட்டவுடன், சிரிக்க வேண்டும் என்ற எண்ணம் முதல் வரிசையிலிருந்து, கடைசி வரிசை வரை இருக்கிற எல்லாருக்கும் ஏற்படுகிறதே அதுதான் முக்கியம். அன்றன்றைக்கு நடப்பதை, நான் நாடகத்தில் சேர்த்துக் கொள்வதை எல்லாரும் ரசிக்கிறார்கள். அமெரிக்க ஜனாதிபதி தேர்தல் முடிவு இழுபறியை நான் நாடகத்தில் குறிப்பிட்டபோது, அரங்கமே கைதட்டி ரசித்தது. நான் நூறு ஜோக்குகள் தருகிறேன். அதை வைத்து யாராவது நாடகம் எழுதி விட முடியுமா?"

**உங்களால், சினிமாவில் ஜெயிக்க முடியாமல் போனது ஏன்?**

"நான் நாடகத்துக்குத் தேதி கொடுத்துவிட்டால், சினிமா சான்ஸ் வந்ததும் நாடகத்தைக் கேன்ஸல் செய்வதே இல்லை. சினிமா ஷூட்டிங் நாளில் நாடகம் இருந்தால், ஆறு மணிக்குக் கிளம்பி வந்துவிடுவேன் என கண்டிஷன் போடுவேன். பணத்தைவிட, கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவது எனக்கு முக்கியம். யார் கூப்பிட்டாலும், அட்வான்ஸ் வாங்குவது என் பழக்கமில்லை. கதை கேட்டு, கம்பெனி பார்த்து தான் ஒப்புக் கொள்ளுவேன். நான் வேணாம் என்று சொன்ன படங்களில் நூற்றுக்கும் அதிகமானவை பூஜையுடன் நின்று போயிருக்கின்றன. ராமநாராயணனின் முதல் படத்திலும் நான் நடித்தேன். நூறாவது படத்திலும் நான் நடித்தேன். வருடத்துக்கு அதிகபட்சம் நாலு, குறைந்த பட்சம் இரண்டு என்பதுதான் என் கணக்கு. இதே ரீதியில் என்னால் இன்னும் பத்து வருடங்களுக்குக் கூட தாக்குப் பிடிக்க முடியும்.

சந்திப்பு :

**எஸ். சந்திரமௌலி**



கைக்குழந்தை அழுதுகொண்டே இருக்கிறது. எதற்காக குழந்தை அழுகிறது என்று அதன் தாய் கண்டு பிடித்து விடுகிறாள். அடுத்தபடியாக, அதன் அழுகையை நிறுத்த என்ன வைத்தியம் என்பதையும் முடிவு செய்து விடு கிறாள். அதை ஒரு நாட்டுப்புறப் பாடலாகவே பாடுகிறாள்.

உடம்பெல்லாம் நோகுதாம்மா கண்ணே!
உனக்கு ஒத்தடம் தரட்டுமா?
ஏலமும் இஞ்சிச் சாறும் உனக்கு
எட்டுச் சொட்டுத் தரட்டுமா?

இதில் வீட்டு வைத்தியத்தின் அடிப்படைத் தத்துவமே அடங்கிவிட்டது. குழந்தைக்கு வாயுத் தொல்லையால் உடம்பு வலி. அதனால் அழுகிறது. உடம்பு வலிக்குப் புறச் சிகிச்சையாக, ஒத்தடம் தவிர, உள்ளுக்கும் மருந்து கொடுத்து, வாயுவை, வெளியேற்ற வேண்டியது அவ சியம். என்ன மருந்து கொடுப்பது?

மூன்று ஏலக்காயைத் தட்டி அரை டம்ளர் தண்ணீரில் போட்டுக் கொதிக்க வைத்து, அதில் எட்டுச் சொட்டு இஞ்சிச் சாறு கலந்து, குழந்தை என்பதால், அதுவும் உடம்பு வலியால் அவதிப்படுகிற குழந்தை என்பதால் ஒரு ஸ்பூன் தேன் கலந்து சுவையூட்டி, குழந்தைக்குக் கொடுத்துப் பாருங்கள். சிறிது நேரத்திலேயே, குழந்தையின் அழுகை நின்று, அமைதியாகத் தூங்க ஆரம்பித்துவிடும்.

இது ஒரு நாட்டுப்புறப் பாடல் என்றாலும்கூட, பொது வாக மருத்துவக் குறிப்பினைக் கொடுக்காமல், குழந் தைக்கு என்பதால், அளவையும் எட்டுச் சொட்டு இஞ் சிச் சாறு எனறு சொல்லப்பட்டிருப்பதை கவனியுங்கள். இந்த இஞ்சி சிகிச்சை பெரியவர்களுக்கும் கூடத்தான்.

அன்றாடம் உணவில் சேர்த்துக் கொள்ளப்படும் இஞ்சி, உடம்பில் வாயு சேராமல் தடுத்து, உடல்வலி வராமல் இருக்கச் செய்கிறது. அடுத்தபடியாக, உணவு செரிப்பதற்குத் தூண்டுதலாகவும் இருக்கிறது.



இன்னொரு முக்கியமான விஷயம். உடம்பில் எங்காவது காயம், ரணம் இருந்தால், அதை இஞ்சி, சீக்கிரமாக ஆறவைக்கும் ஆற்றல் கொண்டது. இஞ்சியைத் தங்கள் ஆராய்ச்சிக் கூடத்தில் வைத்து ஆராய்ச்சி செய்த அமெரிக்க விஞ்ஞானிகளின் முடிவு என்ன தெரியுமா? இஞ்சி ஒரு ஆன்டி செப்டிக் என்பதுதான்.

இஞ்சியை ஆன்டி - செப்டிக் என்ற அடிப்படையில் எப்படிப் பயன்படுத்துவது? ஒரு வருக்கு ஆபரேஷன் நடக்கிறது. அவருக்கு ஆபரேஷன் செய்த ரணம் விரைவில் ஆற வேண்டும், செப்டிக் ஆகாமல் இருக்க வேண்டும் என்றால், டெடனஸ் இஞ்ஜெக்ஷன் போடுவார்கள். ஆன்டி பயாடிக் மருந்து கொடுப்பார்கள். இவற்றுக்கு இணையாக - சொல்லப் போனால் இன்னும் ஒரு படி மேலே என்று கூடச் சொல்லலாம் - சக்தி வாய்ந்தது இஞ்சி.

அரை தம்ளர் தண்ணீரில், நாலு இஞ்சித் துண்டுகளை நசுக்கிப் போட்டு, நன்றாகக் கொதிக்க வைத்து, அதில் பாலும், தேனும் கலந்து காபி போல குடிக்கலாம். இது விரைவில் ரணங்களை ஆற்றும். இஞ்சியைப் பயன்படுத்துகிறபோது, ஒரு விஷயத்தை கவனத்தில் கொள்ள வேண்டும். இஞ்சியை அப்படியே ஒரு போதும் பயன்படுத்தக் கூடாது. அதன் புறத் தோலை அகற்றி விட்ட பின்னரே பயன்படுத்த



மூலிகை மணி
டாக்டர் க. வேங்கடேசன்
டாக்டர் க.வே. அபிராமி

# இஞ்சி இடுப்பழகின் ரகசியம்!

வேண்டும். சித்த வைத்தியத்தில் இஞ்சி மருந்து என்றால், அதன் புறத்தோல் நஞ்சு! எதிர்மறை விளைவுகளை ஏற்படுத்தும்.

இஞ்சி இடுப்பழகி என்று ஒரு சினிமாப் பாட்டு மிகப் பிரபலம். இதை எழுதிய கவிஞர் 'இ'னாவுக்கு 'இ'னா என்று திட்டமிட்டு, இஞ்சி இடுப்பழகி என்று எழுதினாரா? இல்லை இஞ்சியின் குணாதிசயங்களை அறிந்திருந்ததால் இப்படி எழுதினாரா என்பது தெரியவில்லை. ஆனால், அவர் எழுதியது உண்மைதான். மனிதனின் உடம்பில் அதிகப் படியாய்ச் சேருகிற கொழுப்பும் புரோட்டீனும் படிவது இடுப்புப் பகுதியில் தான். அந்த உபரியான கொழுப்பைக் கரைக்கிற திறன், இஞ்சிக்கு உண்டு. தினசரி உணவில் இஞ்சியைச் சேர்த்துக் கொண்டு வந்தால், இடுப்பில் சதை விழுவதைத் தடுக்க முடியும். தொப்பை விழாது. அல்லது இருக்கிற தொப்பை கரைந்து விடும். இடையழகு ஏற்படும். இஞ்சி இடுப்பழகுதான்!

அதுபோலவே சளித் தொல்லைக்குக் கண் கண்ட மருந்து இஞ்சி. நுரையீரல்களில், 'சளி சேரவிடாமல் தடுக்கிற போர் வீரர்' என்று இஞ்சியைக் குறிப்பிட லாம். பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐ.கூட சதி செய்து சளியை நுரையீரலுக்குள் ஊடுருவச் செய்துவிட முடியாது. இஞ்சி சாப்பிட்டால் அதீத சளித் தொல்லையால் அவதிப்படுகிறவர்கள் நாலைந்து துண்டு இஞ்சியை நன்கு நசுக்கிப் போட்டு அரை தம்ளர் தண்ணீரில் நன்கு கொதிக்க வைத்து, வடிகட்டினால் பழுப்புநிற டிகாஷன் இருக்கும். இதனுடன் சமஅளவு பால் கலந்து, ஒரு ஏலக்காய்த் தட்டிப் போட்டுத் தேன் கலந்து காலை எழுந்தவுடன், ஒரு மாதம் போல சாப்பிட்டு வந்தால், எத்தனை மோசமான சளி என்றாலும், மொத்த சளியும் வெளியேறி நிம்மதி கிடைக்கும்.

சில பேருக்கு பஸ் பயணத்தின்போது தலை சுற்றும். வாந்தி வரும், மயக்கமாக இருக்கும். இதற்கும் ஒரு நல்ல மருந்து உண்டு. கிச்சனிலிருந்துப் புறப்பட்டு பஸ் ஸ்டாண்டிலேயே அது உலவிக் கொண்டிருக்கும். அது வேறு எதுவுமில்லை. இஞ்சி முரப்பாதான். ஆம்! இஞ்சி முரப்பா, கபத்தையும், பித்தத்தையும் குறைக்கும். தலை சுற்றல், வாந்தி மயக்கத்திலிருந்து விடுதலை அளிக்கும்.

இஞ்சி முரப்பா செய்வது ஒன்றும் பெரிய வித்தையில்லை. ரொம்ப எளிதாய் நீங்களே செய்யலாம். சர்க்கரைப் பாகு தயாரித்து அதனுடன் இஞ்சிச் சாறு கலந்து இளஞ்சூடாக இருக்கிறபோதே ஒரு தட்டில் ஊற்றிவிட வேண்டும். மைசூர் பாகு கிளறுவதுபோலத்தான் இதுவும். வில்லை போட்டு அப்படியே ஆறவிட்டால் இஞ்சி முரப்பா ரெடி.

சில பேர், பஸ் ஸ்டாண்டில் விற்கிற இஞ்சி முரப்பா, சுகாதாரமாக இருக்குமா? என்று தயங்குவார்கள். அவர்கள் இனி வீட்டிலேயே இஞ்சி முரப்பா செய்து, பிரயாணத்தின்போது, கைவசம் வைத்துக் கொண்டால், தலைவலி, வாந்தி, மயக்கத்திலிருந்து விடுதலை பெறலாம்.



சர்க்கரைப்பாகு + இஞ்சிச்சாறு கலவையுடன் இன்னும் சிறிது தண்ணீர் கலந்து பாட்டிலில் ஊற்றி ஃபிரிட்ஜில் வைத்துக் கொள்ளலாம். தேவைப்பட்ட போதெல்லாம். பாலுடன் சேர்த்து காபி போல தயாரித்துச் சாப்பிடலாம்.

இஞ்சிச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு இரண்டையும் கலந்து பருகினாலும் பித்த மயக்கம் தலை கிறுகிறுப்புக்கு நிவாரணம் கிடைக்கும். இஞ்சி காய்ந்தால் சுக்கு! அது அடுத்த வாரம்...



# 100% திருப்தி

## நியாயமான விலையில் அற்புதமான வீட்டு மனை

**கிருஷ்ணா நகர்** (அரசு அங்கீகாரம் பெற்ற மனைகள் DTP/LPDM-16-74)

**மேடவாக்கம்** சென்னை - 601302 (வேளச்சேரி அருகில்)

### சிறப்பு அம்சங்கள்

• மாநகருக்கு மிக அருகில் • கவர்னர் மாளிகையிலிருந்து 20 நிமிட பயணம் • அடையாறு, திருவான்மியூர், வேளச்சேரி, கிண்டி மற்றும் தாம்பரத்திலிருந்து ரயில் மற்றும் பஸ் வசதி

• நன்கு திட்டமிட்ட மனைப்பிரிவு, சுற்றிலும் வேலி • சுற்றிலும் நல்ல வீடுகள்

• 12' ஆழத்தில் சுவையான நீர் • அருகாமையிலேயே நல்ல பள்ளிகள், கல்லூரிகள், மருத்துவமனைகள், கடைகள் போன்ற அனைத்து வசதிகள்

• சுத்தமான பத்திரம், நம்பகமான நிறுவனம் • 5 வருட மனை பாதுகாப்பு சேவை

**சுந்தரம் ஹோம் பைனான்ஸ் லிட்**

அவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட பத்திரங்கள்; நிதி உதவியும் உண்டு.

Tel : 4357721/31 Telefax : 4353183 Cell : 98400 44018 e-mail: blbestmail@vsnl.net
http://business.vsnl.com/blbestates



## BLB Estates (P) Ltd.

S-3,"Ramana Flats" 27, Rathna Nagar, Off Anna Salai,
(Behind Apollo Cancer Hospital), Teynampet, Chennai - 18.

நன் மதிப்பில் முதலீடு.

---

# பெண்கள் தெய்வீக ஜோதிட கலையை கற்று இலவசமாக வெளிநாடு செல்ல ஓர் அரிய வாய்ப்பு!

ஜோதிடக் கலையைக் கற்ற, பரம்பரையாகக் கற்றறிந்த, கற்க உண்மையான ஆர்வமுள்ள பெண்கள் கீழ்க்கண்ட முகவரியில் தொடர்பு கொள்ளவும்.

ஆன்மீக ஈடுபாட்டுடன் தமிழ் ஆற்றல் அவசியம் தேவை, ஓரளவு ஆங்கில ஆற்றலும் அவசியம்.

20 வயதிற்குமேல் 30 வயதிற்குட்பட்ட குடும்பப் பொறுப்பு இல்லாத, சேவையும், தொண்டுள்ளமும் கொண்ட பட்டதாரிப் பெண்களிடம் இருந்து விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

சென்னையில் புகழ் பெற்ற ஜோதிட ஆராய்ச்சி மையங்கள் மூலம், ஜோதிடக்கலையின் பல நுட்பங்களைத் தருந்த ஜோதிட வல்லுநர்களைக் கொண்டு இலவசமாக பயிற்றுவிக்கப்படும்.

பயிற்சிக் காலத்தில் உணவு, தங்குமிடம், ஜோதிட சம்பந்தமான புத்தகங்கள் ஆகியவற்றை இலவசமாக நிறுவனமே அளிக்கும்.

நன்கு பயிற்சி பெற்றவர்கள் ஜோதிடக்கலையின் சிறப்பையும், அதன் பெருமையையும் பரப்பவும், பயிற்றுவிக்கவும் நிர்வாகத்தின் சார்பாக வெளிநாடுகளுக்கு அனுப்பப்படுவார்கள்.

ஆர்வமுள்ள பெண்கள் புகைப்படத்துடன் விண்ணப்பிக்கவும்.

# ஆன்மீகம்

68, நடுத்தெரு, மயிலாப்பூர், சென்னை-4.

Tel : 4959302, 4616466/67 Fax : 4616311 E-mail:siva siva @ vsnl.net

கலைகளுள் உயர்ந்த ஜோதிட கலையை மதித்து, காத்து போற்றிப் பரப்ப பெண்களுக்கு ஓர் உன்னத வாய்ப்பு!









2000 டிசம்பர் 31
விக்ரம மார்கழி 16
மலர் : 59
இதழ் : 22

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## முகத்தில் அறைந்த கண்டனத் தீர்மானம்!

**பா**ப்ரி மஸ்ஜித் தகர்ப்பு வழக்கில் குற்றம் சாட்டப்பெற்ற மூன்று அமைச்சர்களும் ராஜினாமா செய்ய வேண்டும் என்று ராஜ்யசபாவில் காங்கிரஸ் கொண்டுவந்த தீர்மானம் வெற்றி பெற்றுள்ளது. இவர்கள் ராஜினாமா செய்ய அவசியமில்லை என்று பிரதமர் வாஜ்பாய் வாதாடியதற்காக கண்டனத்துக்குள்ளாகியிருக்கிறார்.

நியாயத்துக்கு மூன்று அமைச்சர்களும் இந்தத் தீர்மானம் நிறைவேறியதைத் தொடர்ந்தாவது தார்மிக அடிப்படையில் ராஜினாமா செய்திருக்க வேண்டும். அவர்கள் ராஜினாமா செய்யாத பட்சத்தில், பிரதமர் அவர்களுடைய ராஜினாமாவைக் கோரியிருக்க வேண்டும். ஆனால் பிரதமர் செய்தது என்ன..? தார்மிக அடிப்படையில் தாம் ஏற்கெனவே வேறு அமைச்சர்களின் ராஜினாமாக்களைக் கோரிப் பெற்றதுண்டு என்பதை மறந்தார். மறந்துவிட்டு, 'என்னென்ன சந்தர்ப்பங்களில் ஓர் அமைச்சர் ராஜினாமா செய்வது அவசியம் என்று திட்டவட்டமாக நன்னடத்தை விதிகளை வகுக்க எதிர்க்கட்சிகளை அழைக்கிறேன்...' என்றொரு அறிவிப்பு செய்தார்! இப்படி தனக்கு மட்டும் ஒரு தனி தர்மம் வகுத்துக் கொண்டவர், அன்று மாலையே தமது




வீட்டில் இஃப்தார் விடுத்தும் அளித்த முரண்பாடை எங்குபோய்ச் சொல்வது!

நாட்டில் தலைக்குமேல் பிரச்னைகள் குவிந்துள்ளன. கல்வி இன்னும் பரவலாக்கப்பட வேண்டும்; தொழில் வளம் பெருகியாக வேண்டும்; பொருளாதார முன்னேற்றம் துரிதப்படுத்தப்பட்டு, அன்னியக்கடன் சுமை குறைந்தாக வேண்டும்; விவசாயமும் விவசாயிகளும் மேம்பட வேண்டும்; ஏழைமை ஒழிய வேண்டும் - என்று போட்டி போட்டுக் கொண்டு வாழ்வா - சாவா பிரச்னைகள் காத்திருக்க, பிரதமருக்கு அயோத்தியில் ராமர் கோயில் கட்டுவதுதானா தேசிய முக்கியத்துவம் வாய்ந்ததாகத் தோன்ற வேண்டும்!

பிரச்னையை மேலும் சிக்கலாக்கி, வெறுப்புக்கும் வன்முறைக்கும் வழிவகுப்பதைத் தவிர வேறெதை இந்த அணுகுமுறையினால் சாதிக்க முடியும்?

நாட்டை எதிர்நோக்கியுள்ள ஏராள பிரச்னைகளை மறந்துவிட்டு, எதிர்க்கட்சியான காங்கிரஸ், 'வரலாறு காணாத இந்தக் கண்டனத் தீர்மானத்தின் வெற்றிக்கு நாங்களே காரணம்!' என்று மார்தட்டிக் கொள்கிறது.

பி.ஜே.பி.யின் கூட்டணி கட்சியான தெலுங்கு தேசம் பிரதமரை மிரட்டாத குறைதான். இதன் மறுபக்கமாக, மஹாராஷ்டிரத்திலுள்ள பா.ஜ.க.வின் தோழமை கட்சியான சிவசேனையின் தலைவர் பால் தாக்கரேயோ, முஸ்லிம்களின் வாக்குரிமை பறிக்கப்படவேண்டும் என்று ஒரு புதுப் புயலைக் கிளப்புகிறார்!

குற்றம் சாட்டப்பெற்ற அமைச்சர்கள் உமாபாரதியும் அத்வானியும் தங்களைக் குற்றம் சாட்டும் சி.பி.ஐ.யையே சந்தேகித்து அறிக்கை விடுகிறார்கள்! தாங்கள்




வஞ்சிக்கப்பட்டுள்ளதாகச் சொல்கிறார்கள். லிபர்ஹான் கமிஷன் முன்பு சாட்சி சொல்லுகையில் உமாபாரதி பேசுவதோ முற்றிலும் முரணாக இருக்கிறது. பாப்ரி மசூதியைத் தகர்க்கத் துணிந்த கூட்டத்தினரைத் தடுக்க முயன்றும் முடியவில்லை என்று சொன்னவர், 'இதுபோன்ற சந்தர்ப்பங்களில் என் அறிவை என் உணர்ச்சிகள் வெற்றி கொண்டுவிடும்' என்றும் அதே மூச்சில் பேசுகிறார்.

மொத்தத்தில், கடந்த இரு வாரங்களாக நாடாளுமன்றத்தில் நடந்தவையும் அதற்கு வெளியே பேசப்பட்டவையும் நாட்டுக்கே தலைகுனிவை ஏற்படுத்தும் விஷயங்கள்.

இச் சந்தர்ப்பத்தில் ஆளுங்கட்சியினர் சப்பைக்கட்டு கட்டுவதோ எதிர்க்கட்சியினர் வெற்றிக் கொக்கரிப்புச் செய்வதோ ரசாபாசம்.

நாட்டைப் பிடித்தாட்டும் பிரச்னைகள் பல இருக்க, அயோத்தியை எதற்காகக் கிளறவேண்டும் என்ற பக்குவம் எதிர்க் கட்சியினருக்கு வரவேண்டும். உணர்ச்சியைத் தூண்டி ஆதாயம் தேடாமல் கண்ணியமான, யோக்கியமான ஆட்சி மற்றும் செயல்திட்டங்கள் மூலம் மக்களை ஈர்க்கும் திறமையும் நெஞ்சுரமும் ஆளுங்கட்சியினருக்கு வந்தாக வேண்டும்.

இல்லையேல் ஹிந்து - முஸ்லிம் வேறுபாடுகள் நிரந்தரமாகிவிடும். விளைவுகள் பயங்கரமாக இருக்கும். இதே ரீதியில் வாஜ்பாயி வட்டாரத்தின் நடவடிக்கைகள் தொடர்ந்தால் இந்த பா.ஜ.க. கூட்டணி ஆட்சியினால் நாட்டுக்கு ஏற்படக்கூடிய இழப்புகளை ஈடு செய்ய, அடுத்து வரும் ஆட்சியினால்கூட முடியாமல் போய்விடும். ○

# KALKI SHOPPING PAGE



## "கல்கி ஷாப்பிங்"

பக்கங்களில்
விளம்பரம்
செய்ய ரூ.1250/-
மட்டுமே. செய்து
பயனடைவீர்!

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை – 97.
போன்: 2345622, 2345623

---

பருக பருக ஆனந்தம்
அதிக ஆனந்தம்

## சுத்தமான தஞ்சாவூர் டிகிரி காப்பிக்கு

# ஜீவா காபி

**100% பியூர் பில்டர் காபி பவுடர்**

தயாரிப்பாளர்கள் :

**ஜீவா காபி ஒர்க்ஸ்**

28, பி.வி. நாயக்கன் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை – 600 005.

இலவச டோர் டெலிவரிக்கு
தொடர்பு கொள்ளவும் : 8444725

---

திருக்கைலாயம்
ஓர் புனிதப்பயணம்



P.S. ராமமூர்த்தி

## திருக்கைலாயம்

**ஓர் புனிதப்பயணம்**

இந்நூல் கைலாய யாத்திரை செல்பவர்களுக்கு உதவும் பொருட்டு வெளியிடப்பட்ட புத்தகம். கைலாய யாத்திரை செல்ல விரும்புகிறவர்களுக்கு இது ஓர் உற்ற துணைவன். புத்தகம் தேவைப்படுவோர் கீழ்க்கண்ட முகவரியில் ரூ. 35/- M.O. செய்து பெற்றுக் கொள்ளலாம்.

ஆசிரியர்
**P.S. இராமமூர்த்தி B.A.B.T.,**

மானஸ் கைலாஷ் பதிப்பகம்,
பிள்ளையார் கோயில் தெரு,
குஞ்சாண்டியூர்,
மேட்டூர் அணை – 636 404
Ph: 04298-30158

# அல்கோரைச் சந்தித்த லூசு

“இப்படி அநியாயமா கோட்டை விட்டுட்டீங்களே, அல்கோர் சார். 'நான் என் தோல்விய ஒத்துக்கறேன். இனிமே புஷ்தான் அமெரிக்க ஜனாதிபதி'ன்னு அறிக்கை விட்டுட்டீங்களே! எனக்கு ஒரு ஈ-மெயில் கொடுத்திருந்தீங்கன்னா நான் வந்து ஐடியா கொடுத்து உங்க தேர்தல் முடிவுகளை இன்னும் தாமதப்படுத்தி, தேர்தல் கமிஷன், கோர்ட், மக்கள் எல்லாரையும் குழப்பியிருப்பேனே! ஏன் இப்படி அவசரப்பட்டு வர்ற பதவிய கோட்டை விட்டீங்க?”

“யாரு லூசா? வந்தவுடனேயே உளற ஆரம்பிச்சிட்டியா? நான் எப்படி தோல்விய ஒத்துக்காம இருக்க முடியும்? அதான் சுப்ரீம் கோர்ட் இனியராச் சொல்லிருச்சே?”

“கோர்ட் தீர்ப்பு சொல்லிட்டா ஆயிருச்சா? எங்க ஊர்ல எல்லாம் கோர்ட் தீர்ப்பு எங்களுக்கு எதிரா வந்துதுன்னா நாங்க என்ன பண்ணுவோம் தெரியுமா? பஸ்ஸைக் கொளுத்துவோம். சில சமயம் ஸ்பெஷல் எஃபெக்ட் வேணும்னா பஸ்ஸுக்குள்ள ஆளோட கொளுத்திருவோம். நீங்க என்னடான்னா...”

“ஏய், இப்ப என்னை பஸ்ஸை கொளுத்துங்கறியா?”

“அப்படி சொல்லவேனா. நாங்க ஏழை நாடு. உலக வங்கி கொடுக்கற கடன்லதான் நாங்க ரோடு போடறோம். பஸ் வாங்கறோம். நாங்களே பஸ் கொளுத்தினா, நீங்க சும்மா முந்நூறு பேரோட ஒரு ஜெட் விமானத்தையே கொளுத்த வேண்டாமா? ப்ளேன் ஜிகுஜிகுன்னு எரியும்போது வீடியோ எடுத்து டிவில காமிச்சா நீங்க எங்கேயோ போயிருவீங்க.”



“வேற எங்கேயும் போகமாட்டேன். நேர ஜெயிலுக்குள்ள போயிருவேன். ஏய் லூசு, இது உங்க ஊர் இல்லை. அப்படியெல்லாம் பண்ணினா, ஒண்ணு எலக்ட்ரிக் சேர்ல உக்காத்தி பரலோகத்துக்கு அனுப்பிருவாங்க. இல்லைன்னா நூத்திவிருப்பத்தஞ்சு வருஷம் ஜெயில் தண்டனைன்னு கொடுத்து வாழ்க்கையையே நரகமாக்கிருவாங்க. தெரியும்ல?”

“சரி, பஸ் கொளுத்தறது வேணாம். இன்னொரு சாத்வீக வன்முறை இருக்கே. பேசாம ரோட்டோரம் இருக்கற மரத்த எல்லாம் வெட்டிப் போட்டிருங்க. எங்க ஊர்ல ஒருத்தர் அப்படிப் பண்ணித்தான் தன்னோட கண்டனத்தைத் தெரிவிப்பாரு. அதே மாதிரி உங்களுக்கு எதிரா தீர்ப்புக் கொடுத்த கோர்ட் மேலே இருக்கற வெறுப்ப மரத்து மேலே காமிங்க.

'ஆறாயிரம் மரத்தை வெட்டித் தள்ளிய ஆற்றல் வீரர் அல் கோர்'னு போஸ்டர் அடிச்சி நாடு பூரா ஒட்டிருவோம்."

"அவ்ளோதான். என்னைக் கண்டம் துண்டமா வெட்டிக் கடல்ல போட்ருவாங்க. இங்க சுற்றுச் சூழலப் பாதுகாக்கற இயக்கங்கள் அரசாங்கத்தவிட சக்தி வாய்ந்தது. லூசு, ஏதாவது உருப்படியா சொல்றதுன்னா சொல்லு இல்ல, இடத்த காலிபண்ணு. நீ சொல்ற மாதிரி நான் கோர்ட் தீர்ப்பை மதிக்கலேன்னா எனக்கு மக்களோட அனுதாபம் கிடைக்காதே. அதுக்கு என்ன பண்றது?"

"ரொம்ப சிம்பிள். எங்க நாட்டுல ஒரு விளையாட்டு வீரர் இப்படித்தான் தப்பிச் சார். அதே மாதிரி நீங்களும், 'நான் சிறு பான்மை சமூகத்தைச் சேர்ந்தவன். அதனால தான் என்னை இப்படி வேணும்னே பழிவாங்கறாங்கன்னு சொல்லிடலாம்.' இது எப்படி?"

"எனக்கு ஒண்ணும் புரியலையே லூசு? நான் எப்படி சிறுபான்மை சமூகத்தச் சேர்ந்தவன்னு சொல்ல முடியும்? உங்க நாடு மாதிரி இல்லை. இங்க எல்லாருக்கும் சம உரிமை தெரியும்ல?"

"சும்மா கதை கட்டாதீங்க அல்கோர் சார். எல்லாருக்கும் சம உரிமைன்னு சொல்றது எல்லாம் கப்சா. கடந்த நூத்தம்பது வருஷத்துல அமெரிக்கால கருப்பர் இனத்தச் சேர்ந்தவரோ யூத சமூகத்தச் சேர்ந்தவரோ அவ்வளவு ஏன் ஒரு பெண்மணியோ ஜனாதிபதியா வந்திருக்காங்களா சொல்லுங்க, பாப்போம்."

அல்கோர் அசடு வழிய சிரித்தார்.

"சரி அதை விட்ருங்க. நீங்க ஃப்ளாரிடா மாகாணத்து மொத்த வோட்டையும் கையால எண்ணணும்னு சொன்னீங்கல்ல?"

"ஆமா. அதான் முடியாதுன்னு சொல்லிட்டாங்களே."

"நீங்க தப்புப் பண்ணிட்டீங்க. நீங்க என்ன சொல்லணும்னா, எனக்கு சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு முக்கியமில்லை. எனக்கு மக்கள் தீர்ப்புதான் முக்கியம். மக்கள் தான் எனக்குத் தெய்வம். அதனால வோட்டு மறு எண்ணிக்கையைக் கோர்ட் மூலமா நடத்தக்கூடாது. மக்கள் முன்னிலையிலதான் நடத்தணும்னு சொல்லிருங்க."

"ஏன் லூசு இப்படிப்பேத்தற? அது எப்படி முடியும்? லட்சக்கணக்கான மக்களை ஒரு இடத்துல கூட்டறதே கஷ்டம். அப்புறம் அவங்க முன்னால எப்படி வோட்டை எண்ண முடியும்?"

"அது பண்ண முடியாதுன்னுதானே அந்த ஐடியாவத் தரேன். இத வச்சி எலக்ஷன் முடிவை இன்னும் ஒரு ஆறு மாசம் தள்ளலாம்ல? அதுக்குள்ள லூசு, நான் இருக்கேன். நூறு ஐடியா கொடுத்துர மாட்டேனா?"

"ஒரு பேச்சுக்கு நீ சொல்ற மாதிரி அப்படியே வச்சிக்கிட்டாலும், அந்த எண்ணிக்கை வேலையும் எப்படியும் ஒரு நாள் முடிஞ்சிருமே?"

"அப்ப சுத்தி வளச்சி எண்ணச் சொல்லுங்க. ஒண்ணு, ரெண்டு, மூணுன்னு யாரும் எண்ணக்கூடாது. நூறு, தொண்ணுத் தொம்பது, தொண்ணுத்தியெட்டு, அப்படித்தான் எண்ணணும்னு சொல்லுங்க. யாரும் கால்குலேட்டர், கம்ப்யூட்டர் இந்த மாதிரி எதையும் பயன்படுத்தக் கூடாதுன்னு சொல்லிருங்க. அப்புறம் வர எண்ணிக்கைய ரோமன் நம்பர்லதான் எழுதணும்னு ஒரு கண்டிஷன் போடுங்க. இதெல்லாம் முடிய சத்தியமா நாலு வருஷம் ஆயிரும். அதுக்குள்ள அடுத்த தேர்தல் வந்துரும்."

"ஏய் செக்யூரிட்டி எங்க போய்த் தொலைஞ்சே? இந்த லூசு இன்னும் கொஞ்ச நேரம் இருந்ததுன்னா எனக்கு நிஜமாவே பைத்தியம் பிடிச்சிரும்."

"அல்கோர் சார், கோச்சுக்காதீங்க. இன்னும் ரெண்டே ரெண்டு சூப்பர் ஐடியா



பாக்கியிருக்கு. அத மட்டும் சொல்லிட்டுப் போயிடறேன்."

"எனக்கு நேரம் லூசு. சரி சட்புட்னு சொல்லிட்டு ஓடிரு."

"எங்க ஊருல எதிர்க்கட்சி ஆள் ஜெயிச்ச வுடனே நாங்க வுடற முதல் ஸ்டேட்மென்ட் என்ன தெரியுமா? எதிர்க்கட்சிக்காரங்க கள்ள வோட்டுப் போட்டுட்டாங்கன்னு ஒரு போடு போட்ருவோம்."

"உங்க ஊர்ல அது நடக்கும். அமெரிக்கா வுல கள்ள வோட்டு பாட்சாவெல்லாம் பலிக்காது தெரியும்ல? இங்க எல்லாருக்கும் போட்டோவோட ஐ.டி.கார்ட் கொடுத்துட றோம். அதனால யாரும் கள்ள வோட்டுப் போட முடியாது."

"அப்ப ஐடி கார்டே கள்ள கார்டுன்னு சொல்லிருவோம். நிறைய போலி கார்ட் தயாரிச்சி புஷ் கட்சிக்காரங்க புழக்கத்துல விட்டுட்டாங்கன்னு சொல்லிருவோம்."

"லூசு. எலக்ஷன்ல தோத்ததுகூட அவ் வளவு கஷ்டமாத் தெரியல. உன் ஐடியாக்கள கேட்டுக்கிட்டு இருக்கறதுதான் பெரிய கொடுமையா இருக்கு. உன்னைக் கையெடுத் துக் கும்பிடறேன். இடத்தக் காலி பண்ணு."

"இன்னும் ஒரே ஒரு சூப்பர் ஐடியா இருக்கு. எங்க நாட்டுல இதைத் திசை திருப் பறதுன்னு சொல்லுவாங்க. எங்க நாட்டுல ஆளுங்கட்சி, எதிர்க்கட்சி, தேர்தல்ல தோத்த வங்க, ஜெயிச்சவங்க எல்லோருமே அத யூஸ் பண்ணுவாங்க."

"நான் எப்படி திசை திருப்ப முடியும்?"

"அப்படிக் கேளுங்க. நான் சொல்றேன். உங்க நாட்டுல சுதந்திரதேவி சிலை இருக் குல்ல. அந்தச் சிலைக்கு நேர் கீழ ஒரு பெரிய மகானோட பிறந்த இடம் இருக்குன்னு ஒரு போடு போடுங்க. நேத்து வந்த சுதந்திரதேவி சிலையவிட அந்த மகானோட பிறந்த இடம் ரொம்ப புனிதமானது. அதனால சுதந்திர தேவி சிலைய இடிக்கணும். இல்லே அத வேற இடத்துக்கு மாத்தணும்னு ஒரு பிரச்னையைக் கிளப்புங்க. அந்த மகான் பேரு ராபர்ட்னு வச்சுப்போம். சிலைக்கு கீழே இருக்கறதுதான் ராபர்ட் ஜன்ம பூமின்னு சொல்லுங்க. ராபர்ட் ஜன்ம பூமி பிரச்னை விஸ்வரூபம் எடுத்துரும். பாதிப் பேர் சிலைய இடிக்கணும்னு சொல்லு வாங்க. மீதிப் பேர் எங்களுக்குச் சிலைதான் முக்கியம்னு சொல்லுவாங்க. கர் சேவா நடக் கும். குண்டு வெடிக்கும். ஆக மொத்தத்துல இந்த எலக்ஷன் ரிசல்ட்டை சும்மா நாலு வருஷத்துக்கு மறந்துருவாங்க. இது எப்படி?"



"இன்று மத்திய, மாநில அரசு பந்த் எதுவும் இருக்கா சார்?"

"இல்லை"

"ஊர்வலம், பேரணி?"

"இல்லை"

"வேலை நிறுத்தம், கடையடைப்பு?"

"இல்லை"

"பஸ், இரயில் மறியல் போராட்டம்?"

"இல்லை"

"ஆட்டோ, லாரி ஸ்டிரைக்?"

"இல்லை"

"ஏதாவது ஊழல் வழக்கில் தீர்ப்பு?"

"எதுவுமில்லை... ஆமாம். இதையெல்லாம் எதுக்குக் கேட்கறீங்க பெரியவரே?"

"ஒரு நாலணாவுக்கு வெற்றிலை வாங்க வீட்டைவிட்டு வெளியில் வர வேண்டியிருக்கு!"

- புளியரை கணேசன்

அல்கோருக்கு இந்த ஐடியா மிகவும் பிடித்துப் போயிருக்க வேண்டும். உடனே போனைக் கையில் எடுத்து நம்பர்களை வேகமாக அழுத்தினார். நான் ஆவலுடன் காத்திருந்தேன்.

"மிஸ்டர் புஷ், நான் தான் அல்கோர் பேசறேன். நான் என் தோல்விய ஒத்துக் கிட்டதுக்குப் பிரதியுபகாரமா என்ன வேணாலும் பண்றேன்னு சொன்னீங்கல்ல? இப்ப அதுக்கு வேளை வந்துருச்சி. எஃப். பி.ஐ.ல. சொல்லி துப்பாக்கியோட நாலஞ்சு ஆபீசர்கள உடனே இங்க அனுப்புங்க. இந்தியாலேந்து ஒரு லூசு என்னைப் பாடாப் படுத்துது..."

அதற்கு மேல் அங்கு இருக்க நான் என்ன பைத்தியமா? 'நம்ம ஊர்னாலும் போலீஸ் காரங்க வரதுக்கு மணிக்கணக்குல ஆகும். இது அமெரிக்கா. சொன்ன உடனே வந்துரு வாங்களே' என்ற எண்ணம் கொடுத்த உதறலில் விட்டேன் ஜூட்.

- வி.ஆர்

❑ ரூ. 50 பரிசு பெறுபவர்:
தி. மகாராசன்
545 - பிபி காலனி,
சங்கம்பட்டித் தெரு,
கடமலைக்குண்டு
625 579

● ரூ. 25 பரிசு பெறுபவர்:
ஆர். ரமணி,
3/332, ஒன்பதாவது தெரு,
சத்தியா நகர்,
கோவிலம்பாக்கம்
சென்னை 600 117

● ஏ.கே. ரமேஷ், பள்ளிப்பாளையம்.

? 'அரசியல்தான் என் தலைவிதி என்று ஏற்றுக் கொண்டேன். அதிலிருந்து விலகுவதாக அறிவிக்கும் தவறை இனி செய்ய மாட்டேன்' என்று உமாபாரதி கூறியுள்ளாரே?

! அவருடைய தலைவிதி இந்திய அரசியலின் துரதிர்ஷ்டம். இல்லாவிட்டால் சி.பி.ஐயையே சந்தேகிக்கிறேன்; கிரிக்கெட் ஊழலை விசாரித்ததில் ஊழல் என்று ஒரு மத்திய அமைச்சரே பேசுவாரா? அரசியலிலிருந்து விலகும் தவறை உமாபாரதி மறுபடி செய்யக் கூடாதா என்று ஏங்க வைக்கும் பேச்சு!

● கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு.

? 'என்னைப் போலீஸ் சுட்டுக் கொன்று விடும். அதனால்தான் பயப்படுகிறேன். இல்லையெனில் சரணடைந்து விடுவேன்' என்று ராஜ்குமாரிடம் வீரப்பன் சொன்னானாமே!

! அவனது உயிருக்கு உத்தரவாதம் தந்தால் சரணடைந்து விடுவானல்லவா...? அவன் சரணடைகிறானோ இல்லையோ, சரணடைய ஒரு வாய்ப்பு தந்து அறிவித்துவிட்டு பின்னர் தீவிர வேட்டையைத் தொடங்கியிருக்க வேண்டும்.



• வயதும் விருதும்!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? வயதான பிறகு 'விருது' வழங்குவதால் என்ன பயன் என்று கேட்டுள்ளாரே குன்னக்குடி வைத்தியநாதன்.

! அது வழங்கப்படும் விருதைப் பொருத்த விஷயம். சில விருதுகள் ஊக்கத்துக்காக வழங்கப்படுகின்றன; சில ஆக்கத்துக்காக.

● கே. துரைசுவாமி, மங்களப்பட்டி.

? நல்லதுக்கு காலமில்லை என்கிறார்களே? நல்ல செயல்களை ஆரம்பிக்க பஞ்சாங்கம் பார்க்க வேண்டாம் என்ற அர்த்தமாக இருக்கலாம் அல்லவா?

! மோசமான காரியங்களை ஆரம்பிக்க பஞ்சாங்கம் பார்த்தும் பயனில்லை என்பதும் உள்ளர்த்தம்.

● நீ.க. பத்மநாபன், நீடாமங்கலம்.

? பா.ஜ.கவின் உலகமயமாக்கல் கொள்கையை ஆதரிக்கும் கட்சியான காங்கிரஸ், தேசியமயமான வங்கிகளின் மீது அரசின் பிடியைத் தளர்த்தும் முயற்சியை மட்டும் எதிர்ப்பது முரண்பாடு அல்லவா?

! வங்கிகளை தேசியமயமாக்கியது இந்திரா காந்தி என்பதால் அவற்றை மீண்டும் அரசுப் பிடியிலிருந்து தளர்த்துவதைக் காங்கிரஸ் அப்பட்டமாக வரவேற்க முடியாது. மேலும், லட்சக்கணக்கான வங்கி ஊழியர்களின் வாக்கு வங்கியையும் மனத்தில் கொண்டு தானே பேசுவார்கள்!

# பாபர் மசூதியைக்



• விடாது பதவி!

● ஜி. ராம்தாஸ், திருப்பூர்.

? உலகில் நம்பர் ஒன் அமெரிக்கா. அந் நாட்டு ஜனாதிபதி தேர்தலில் ஏன் இவ்வளவு குழப்பங்கள்?

! உண்மையைச் சொல்லுங்கள்! அமெரிக்காவைப் பார்த்துப் பெருமூச்சு விடாமலிருக்க ஒரு விஷயமாவது கிடைத்ததே என்று உள்ளுக்குள்

• தற்காலிக தப்பிப்பு!

# கட்டிக் கொடுத்து விட்டால்..?



• வழங்காத வாய்ப்பு!



• எழுத்தும், பிழைப்பும்...



• 'தலைவிதி' அரசியல்!

சந்தோஷமாக இல்லை?

● வீ. முத்தையா, திருநெல்வேலி டவுன்.

? அனேக அரசு அதிகாரிகளும், அரசு ஊழியர்களும் நல்ல சம்பளம் வாங்கியபோதிலும் வேலையில் தன்னார்வமின்றி, ஒருவித அலட்சியப் போக்குடன் வேலை செய்கிறார்களே, ஏன்?

! தட்டிக் கேட்க வேண்டியவர்களே தட்டிக் கேட்கப்பட வேண்டிய நிலையில் இருப்பது ஒரு காரணம். மற்றது over-crowding. எப்போது வேலை இல்லாத திண்டாட்டத்தை நீக்க அரசுப் பணிக்கு ஆள் எடுப்பது என்று ஆரம்பித்தார்களோ, அப்போதே அபாயம் தொடங்கிவிட்டது. தீர்வு: ஐந்து ஆண்டுகளுக்கு அரசுப் பணிகளுக்கு ஆள் எடுப்பது கூடாது என்ற உத்தரவு. வீக்கம் தன்னால் வடிந்து, நிலைமை சீர்ப்படும். அதேசமயம் தனியார்த் துறையில் வேலை வாய்ப்புகள் பெருக ஏதுவாகப் புதுக் கொள்கைகள் அமுல்படுத்தப்பட வேண்டும். அசாத்தியமில்லை.

● ப. லக்ஷ்மி நரசிம்மன், கோவை – 11

? இளங்கோவன் பதவி தப்பியது பற்றி...?

! தற்காலிகமாகத் தப்பியிருக்கிறார். இன்னும் பத்து நாட்கள் கழித்து மீண்டும் பிரச்னை தலை தூக்குகிறதா இல்லையா பாருங்கள்.

● ஜெயஸ்ரீ, சென்னை – 41.

? 91 வயதாகும் நமது முன்னாள் குடியரசுத் தலைவர் ஆர். வெங்கட்ராமன் குறித்து...?

! இந்த வயதிலும் நிம்மதியாக இருக்க விடாமல் பாரதிய வித்யாபவன் தலைவராமே!

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை – 84.

? 'தமிழகத்தில் எழுத்தை மட்டும் நம்பி வாழ முடியாது' என்று எழுத்தாளர் பிரபஞ்சன் வருத்தத்துடன் தெரிவிக்கிறாரே? இந்த நிலைக்கு யார் காரணம்...?

! நல்ல எழுத்து, சிறந்த கலைகளுக்கு நிறைவான ஆதரவு அளிக்காத ரசிகர்கள் காரணம். மக்களையும் பெருவாரியாகக் கவர்ந்து கலைத்திறனையும் சிறப்பாக வெளிப்படுத்தும் ஆற்றல் சிலருக்கு மட்டுமே உண்டு.

● ஆர். ரமணி, சென்னை – 117 *

? நான்கு ஆண்டுக்காலம் எம்.பி.யாக இருக்கும் ஒருவருக்கு 'பொலிடிகல் பென்ஷன்' வழங்கும் மத்திய அரசு, ஈ.டி (E.D) ஊழியர்களுக்கு பென்ஷன் மறுப்பது ஏன்?

! முன்னது சுயநலம். பின்னது சட்டச் சிக்கல் என்பது ஒன்று; இரண்டாவது தபால் இலாகாவுக்கு இந்தச் சலுகை வழங்கப்பட்டால் மற்ற துறையினரும் கேட்கப் போக, பொருளாதாரம் அம்பேல் ஆகிவிடும்.

● இ. மகராசன், கடமலைக்குண்டு ❐

? அயோத்தியில் இடிக்கப்பட்ட பாபர் மசூதியைக் கட்டிக் கொடுத்துவிட்டால், டிசம்பர் ஆறாம் தேதியன்று நாட்டின் பாதுகாப்புக்காக நாம் மடியில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருக்க வேண்டாமே?

! பெருந்தன்மை, தீர்க்க தரிசனம் – இவற்றை தேசிய செயல் திட்டமாக அறிவிக்கும் பிரதமர் வரும்போது நீங்கள் நினைப்பது நடக்கும். தற்போது நமக்குக் கிடைத்துள்ள பிரதமர், பாபர் மசூதி இடத்தில் ராமர் கோயில் கட்டுவதையல்லவா தேசிய செயல் திட்டம் என்கிறார்!

**நீங்கள் கேட்டவை – தராசு**

# நாற்காலி தந்த வலி!

✉ அஞ்சல் துறையின் வாரம் கடந்த வேலை நிறுத்தம், பார்லிமெண்டில் அவசரப்பட்டுப் பேசிவிட்ட பிரதமர், எதிரொலியாகக் கிளம்பியிருக்கும் கூச்சல், இது போதாது என்று தொலை தொடர்பு அமைச்சரின் கட்சி உதயம்... இதில் பொருளாதார முன்னேற்றமாம்! தலையங்கம் நல்ல சவுக்கடி.

**விருதுநகர்,**
**இரா. சந்திரசேகரன்.**

✉ சிதா ரவியின் 'ஸ்வரஜதி' கதைக்கு கோபுலுவின் கைவண்ணம் வெகு அழகு. பஞ்சு சாரின் சிரித்த முகமும் பல்லியைக் கண்டு மிரளும் மாணவியின் முகமும்... இப்படிப்பட்ட படங்களை 40 ஆண்டுகளுக்கு முன்னால் தான் பார்த்திருக்கிறோம்!

**சிதம்பரம், தி. கபீர்தாஸ்.**

✉ வினோத் ஓசைப்படாமல் கல்கியின் 'ரிமோட்'ஐக் கையில் எடுத்துக்கொண்டு இருக்கிறாரே! ஒவ்வொரு விஷயத்தையும் துவைத்து அலசியபின் அவர் எழுதும் ஒரு வரி, இரண்டு வரி இங்கிலீஷ் கொட்டேஷன், ... the cherry in a pudding!

**சென்னை - 78,**
**கே.எஸ். நாராயணன்.**

✉ தலைமை ஆசிரியரின் நாற்காலி ஈகோ, கவுன்சிலரின் ஈகோவினால் அடிபடும் விதத்தை தா.பி. வரதராசன் சித்திரித்த விதம் உண்மையாகவே மனத்தில் வலியை ஏற்படுத்தியது. கதிரவனின் ஓவியம் சிறுகதைக்குக் கூடுதல் சிறப்பு.

**நெய்வேலி, சாந்தி சுந்தர்.**

✉ 'புகைப்படம் எடுப்பவர் தமது திறமையைக் காண்பித்தால் அழகில்லாதவரைக்கூட 'ஆகா' என்று சொல்ல வைக்கிற மாதிரி படம் எடுக்க முடியும்" என்ற ராஃபின் கருத்து ரொம்பவே ப்ரொஃபெஷனல்!

**சேலையூர்,**
**கே.வி. ராமன்.**

✉ தமிழ்நாடு சமூக நலத்துறை அமைச்சர் எஸ்.பி. சற்குணபாண்டியனின் தொகுதி மற்றும் பணிகள் குறித்த செய்தியைப் (மக்கள் போடும் மதிப்பெண்கள்) படித்தேன். குறைகளைத் தெரிவிப்பதற்கு வசதியாக அவரது தொகுதியில் ஒரு அலுவலகம் இல்லை என்று கூறப்பட்டிருக்கிறது– இது தவறு. அமைச்சரின் வீடே அவரது அலுவலகமாய் இயங்குகிறது. அமைச்சரே வருபவர்கள் எல்லோரையும் சந்தித்துச் செயல்படுகிறார்.

**சென்னை-40, கருப்பையா.**

✉ 'இசை விழா சிறப்பிதழ்'ல் சுதா ரகுநாதனிடம் 'இசை'யைப் பற்றிக் கேட்காமல் 'அழகு பராமரிப்பு' பற்றி கேட்டிருக்கிறீர்களே? இருந்தாலும் 'இசைக் கலைஞர்களுக்கு வயசு கூடாது. கூடினாலும் வெளியே தெரியாது' என்று அழகாக 'பஞ்ச்' அடித்து விட்டார்.

**மதுரை, என். கப்பு**

✉ 'நீங்கள் கேட்டவை - தராசு'வின் பதில்கள் எனக்குப் பிடித்தவை. காரணம், அவற்றில் உள்ள நடு நிலைமை + புத்திகூர்மை. உதாரணம்: "ஜெயேந்திரர் அரசியல் பேசினால் எதிர்க்கலாம்!" என்ற பதில்.

**சென்னை - 5, பிரியா ஷாந்தகுமார்.**

✉ அன்புள்ள சுதிக்ஷாவுக்கு, நீங்கள் நேத்ராவுக்கு எழுதிய கடிதத்தைத் திருட்டுத்தனமாக எடுத்துப் படித்ததால் 'அமரர் கல்கியின் நினைவு நாள் கொண்டாட்டத்தில் கலந்து கொள்ள முடியவில்லையே' என்ற குறை நீங்கியது. பிறந்த நாள் போன்ற விழாவிற்குக் கல்கியின் நூல்களைப் பரிசாகக் கொடுக்கலாம் என்ற ராகவனின் யோசனையை இனிமேல் அமுல்படுத்தலாம் என்று நினைக்கிறேன்.

**மதுரை,**
**பாலா.**

பயன்படுத்த வேண்டும். இங்கே நான் சொல்ல வருவது உதட்டிலுள்ள கோடுகளை அல்ல! உதட்டு அமைப்பைப் பற்றித் தான் சொல்கிறேன்.

# சிவப்பாகிப்போன ஸ்ரீபெரும்புதூர்!

நான் தூங்குவதற்கு முன் பி.பி.சி. செய்திகளைத் தொலைக் காட்சியில் பார்த்துவிட்டுத் தூங்குவேன். இப்படித் தான் சற்று ரிலாக்ஸ் டாக 1991ம் வருடம் மே மாதம் 21ம் தேதியன்று இரவு பதினொறு மணிக்கு பி.பி.சி. செய்தியைக் கேட்டேன். தலைப்புச் செய்தியே தூக்கி வாரிப் போட்டது.

* ராஜீவ்





* ராஜீவ் பேச இருந்த மேடை

"சென்னை அருகே, இந்திய பிரதமர் ராஜீவ் காந்தி குண்டு வெடிப்பில் இறந்து போனார்" என்பதே அந்தச் செய்தி.

உடனே குற்றப்பிரிவு உயர் அதிகாரி பெருமாள்சாமிக்கு போன் செய்தேன். "ஸார்.. உடனே சம்பவம் நடந்த இடத்துக்குப் போயாக ணும். இல்லையென்றால் தடயங்கள் அழிந்து விடும். அல்லது அழிக்கப்பட்டு விடும்" என்று பதற்றமாகச் சொன்னேன். "நாம இப்ப அங்கே போக முடியாது. காரணம் போகிற வழியெல் லாம் கலவரம் நடக்கிறது. அப்புறம் நம் உயிருக்கும் ஆபத்து ஏற்பட்டுவிடும். காலையில் தக்க பாதுகாப்புடன் நாம் போகலாம். ஸ்பாட்டில் ஆர்.கேராகவன் (தற்போது சி.பி.ஐ.இயக்குனர்) பொறுப்பில் இருக்கிறார். கவலை வேண்டாம்." என்றார் அவர். இருந்தாலும் எனக்கு நிலை

குற்றம் செய்பவன் தலையில் தொப்பி போட்டுக் கொண்டு, முகமூடி அணிந்து வந்தால் முக லட்சணங்கள் எப்படித் தெரியும்? அப்புறம் அடையாளம் சொல்வது எப்படி? இதற்கும் ஒரு வழி இருக்கிறது. என்னதான் முகமூடி போட்டாலும், கண்கள் மற்றும் வாய் பகுதியில் முகமூடி திறந்தே இருக்கும். வாய்ப் பகுதியிலுள்ள உதடுகள் பளிச்சென்று தெரி வதற்கான வாய்ப்பு உண்டு. எனவே உதடுகளை, அடையாளம் காண்பதற்கு ஒரு தடயமாகப்



• மனித வெடிகுண்டு!

கொள்ளவில்லை. படுத்தால் தூக்கம் வரவில்லை. பல நினைவுகள்.

ஒரு முறை தில்லியிலிருந்து உளவுத்துறை உயர் அதிகாரி ஒருவர் என்னைச் சந்தித்தார். "இரும்பால் ஆன சில துண்டு களைக் கொடுத்து இந்தத் துண்டுகளெல்லாம் எதனுடைய பாகங்கள் என்று கண்டுபிடித் துத் தர முடியுமா? என்று கேட் டார். பொதுவாக இதுபோன்று யாராவது கண்டுபிடிக்குமாறு கேட்டால் 'ஏன்? எதற்காக?' என்றெல்லாம் கேள்வி கேட்பேன். அன்றும் அதுபோல கேட் டேன். "ஸார், இது ரொம்ப டாப் ஸீக்ரெட் மேட்டர். உங்களுக்கு விவரம் அவசியம் தேவை என்றால் பிரதமர் சொல்லச் சொன்னார்" என்றார் அவர். 'பரவாயில்லை' என்று நான் அவர் கொடுத்த இரும்புத் துண்டுகளை ஆராய்ச்சி செய்து அவை எதனுடைய பாகங்கள் என்று கண்டுபிடித்துச் சொன்னேன். தில்லிக்குப் போய்விட்டு மீண்டும் திரும்பிய அந்த அதிகாரி 'ஸார், பிரதமர் உங்களுக்கு நன்றி சொன்னது மட்டுமல்லாமல் எதற்காக அந்த உதிரி பாகங்கள் ஆராயப்பட்டது என்பதையும் சொல்லச் சொன்னார்" என்றார். விவரம் இதுதான். சிறிது காலம் முன்பு ராஜீவ் பிரயாணம் செய்ய இருந்த ஜெட் விமானம் இன்ஜின் கோளாறு காரணமாக புறப்பட வில்லை. இது ஒரு சாதாரணமான செய்தி யாகத்தான் எல்லோருக்கும் தெரியும். 'இன்ஜி னில் என்ன கோளாறு?' என்று ஆராயத் துவங் கியபோதுதான் ஏதோ ஒரு இரும்புத் துண்டு இன்ஜினுக்குள் தேவையில்லாமல் வைக்கப்பட் டிருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. இன்ஜினை ஸ்டார்ட் செய்ததும் அந்தத் துண்டு இன்ஜினில் சிக்கி, ஏக சத்தம் வரவே விமானம் தரையிலேயே நிறுத்தப்பட்டது. தரையிலேயே இந்தப் பாதிப்பைக் கண்டு பிடிக்காமல் இருந் திருந்தால் மேலே வானத்தில் செல்லும்போது, இன்ஜினில் அந்தத் துண்டு சிக்கி, விமானத்துக்கு ஆபத்து வந்திருக்கும். அந்த நிலையில் அதில் பயணம் செய்த ராஜீவின் கதி? நினைத்தாலே பகீரென்றது. கடைசியில் அந்த சதி வேலை செய்தவன் கைது செய்யப்பட் டான். இது மட்டுமல்ல. வேறு இரண்டு முக்கிய வேலைகளையும் என்னிடம் கொடுத்து ஆராய்ச்சி செய்யச் சொன் னார் ராஜீவ். நாட்டு பாதுகாப்புக் காரணமாக அந்த வேலைகளைப் பற்றி இப்போதுகூட நான் இங்கு சொல்ல முடியாது.

மறுநாள் காலை, போலீஸைக் கூட எதிர் பாராமல் என் உதவியாளர்களுடன் ஸ்ரீபெரும் புதூரை நோக்கி கிளம்பி விட்டேன். பூந்த மல்லியில் எனது காரை மறித்துவிட்டார்கள். நல்லவேளையாக அங்கு இருந்த 'தி ஹிந்து' பத்திரிகை நிருபர் உதவிக்கு வந்தார். "இவர் போய்தான் தடயங்களை எடுத்து, இந்தக் கொடூரமான செயலைச் செய்தவர் யார் என் பதைக் கண்டுபிடித்து உலகத்துக்குச் சொல்ல வேண்டும். அவரை அனுமதியுங்கள்" என்று கேட்டுக் கொண்டார்.

அன்று காலையில் வெளியான நான்கு தினசரிகள் என்னிடம் இருந்தன. நான்கிலும் ராஜீவ் மரணத்துக்கு நான்கு விதமான காரணங் கள் போட்டிருந்தார்கள். ஒரு பத்திரிகை சிவப்பு கார்ப்பெட்டுக்குக் கீழ் குண்டு வைக்கப் பட்டிருக்கலாம் என்று எழுதியிருந்தது. மற்றொரு பத்திரிகை பூக்கூடையில் வெடி குண்டு எடுத்து வந்திருக்கலாம் என்று சொல்லி யிருந்தது. பூமாலைக்குள் குண்டு இருந்திருக்கலாம் என்று ஒரு பத்திரிகை கருத்துச் சொன்னது. இன்னொரு பத்திரிகையோ மேடையிலிருந்து ராஜீவை நோக்கி குண்டு வீசப்பட்டிருக்கலாம் என்று எழுதியிருந்தது. ஆனால் நான் ஸ்ரீபெரும் புதூரை அடையுமுன்பாகவே இந்த நான்கு காரணங்களும் சரியல்ல என்று முடிவுக்கு வந்து விட்டேன். காரணம் அந்த நான்கு பத்திரிகைகளிலும் வெளி வந்திருந்த படங்களே அந்தப் பத்திரிகைகள் சொன்ன ஊகங் களுக்கு எதிராக இருந்தன. கார்ப் பெட்டுக்கு அடியில் வைக்கப் பட்டிருந்தால், அந்த சக்தி வாய்ந்த குண்டு கார்பெட்டை சின்னா பின்னமாக ஆக்கியிருக் கும். ஆனால் கார்ப்பெட்டுக்கு



தடய அறிவியல் நிபுணர்
டாக்டர் பி. சந்திரசேகரன்

அத்தனை சேதம் இல்லை என்று சொல்லும் படம் வெளியாகி இருந்தது. பூக்கூடை ஒன்று அவ்வளவு சேதமில்லாமல் ஸ்பாட்டில் ஒரு படத்தில் தெரிந்தது. எனவே பூக்கூடை ஊகமும் சரியில்லை. பூமாலையில் குண்டு ஒளித்து வைக்கப்பட்டிருந்தால், ராஜீவின் உடல் மட்டும் சின்னாபின்னமாகியிருக்கும். சுற்றியிருந்த 16 பேர்கள் இறக்கும் நிலை ஏற்பட்டிருக்காது. மேடையிலிருந்து குண்டு வீசியிருந்தாலும் இத்தனை மரணங்கள் நேர்ந்திருக்காது. இவற்றையெல்லாம் யோசித்த வாறே ஸ்பாட்டிற்குப் போய்ச் சேர்ந்தேன். வெடித்தது ஒரு சக்தி வாய்ந்த எக்ஸ்ப்லோசிவ் என்பது மட்டும் உறுதியாகத் தெரிந்தது. ஆர்.கே.ராகவன் முந்தைய இரவின் கொடூரத்தை மீண்டும் ஒரு முறை என்னிடம் சொன்னார்.

நான் போகும்போது ராஜீவ் உடல் அங்கு இல்லை. மருத்துவமனைக்கு எடுத்துச் சென்றுவிட்டார்கள். இறந்துபோன மற்றவர்களுடைய உடல்கள் காஞ்சிபுரம் மாவட்ட மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லப்பட்டன. நானும் என் உதவியாளர்களும் ஸ்பாட்டை எக்ஸ்ரே கண்களோடு ஆராய்ந்தோம். ஆயிரக் கணக்கான இரண்டு எம்.எம். ரவைகள் குண்டுகள் (சிறு சிறு இரும்பு குண்டுகள்) எடுக்கப்பட்டன. பெண்கள் அணியும் சல்வார் கமீஸ் உடையில், சல்வார் பகுதி மட்டும் முழுமையாகக் கிடைத்தது. அதற்குப் பொருத்தமான கமீஸ் துப்பட்டா ஆகியவை துண்டு துண்டாகப் போய் விட்டன. இறந்துபோன 16 பேர்களும் யார், யாரென்று அடையாளம் காணப்பட்டுவிட்டனர். ஆனால் ஒரு பெண்ணின் தலைப்பகுதி, இடது கை, இடது கால் மட்டும் கிடைத்தது. கழுத்துப் பகுதியிலிருந்து இடுப்புப் பகுதி வரை காணாமல் போய்விட்டது. ஸ்பாட்டில் கண்டெடுக்கப்பட்ட சல்வார் அந்த பெண்ணுடையது என்பதும் தெரிந்து விட்டது. அந்தப் பெண்ணின் தலையின் பின் பகுதி சதைப் பகுதி எதுவுமில்லாமல் மண்டையோடு மட்டும் கோரமாக வெளியே தெரிந்தது. அதே போல் ராஜீவ் காந்தியின் முகம் முற்றிலும் சிதைக்கப்பட்டுவிட்டது. முழுமையாகக் கிடைக்காத அந்தப் பெண்மணி தான் குண்டு வெடிப்புக்கு முக்கியக் காரணம் என்பது புரிந்துவிட்டது. அதே போல் ஆர்.டி.எக்ஸ். வெடிமருந்துதான் பயன்படுத்தப்பட்டிருந்தது என்பதும் புரிந்துவிட்டது.

ஆர்.டி.எக்ஸ் என்றால் 'ரிசர்ச் அண்ட் டெவலப்மென்ட் எக்ஸ்ப்லோசிவ்' என்று பொருள். அமெரிக்க ராணுவ விஞ்ஞானிகள் கண்டு பிடித்ததுதான் இந்த வெடிமருந்து. இதன் ரசாயனப் பெயர் சைக்ளோமைட் என்பதாகும். திடமும் அல்ல; திரவமும் அல்ல. சப்பாத்தி மாவை எப்படி தட்டையாக, உருண்டையாக நமக்குத் தேவைப்பட்டது போல செய்து கொள்கிறோமோ அது போலவே இந்த ஆர்.டி.எக்ஸ். வெடிமருந்தையும் தேவைக்கேற்றபடி செய்து கொள்ள முடியும். இந்த மருந்தை 40 கி.மீட்டருக்கு நீளமாக வைத்து ஒரு முனையைப் பற்ற வைத்தால் அதே நேரத்தில் மறுமுனையும் எரியும்! இதிலிருந்து ஆர்.டி.எக்ஸ். நெருப்பைக் 'கடத்தும்' வேகத்தை ஊகித்துக் கொள்ளுங்கள். இந்த மருந்தைப் பற்ற வைக்க 197 டிகிரி வெப்பம் உருவாக்கப்பட வேண்டும். ஆர்.டி. எக்ஸ். வெடி மருந்தில் வைக்கப்பட்டிருக்கும் ரவைகள், அது வெடிக்கும்போது ஒரு விநாடிக்குள் 26000 அடி பாயும் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள். அப்படிப்பட்ட கொடுமையான வெடிமருந்து ஆர்.டி.எக்ஸ்.!

ராஜீவுக்கும், குண்டு வெடிப்புக்குக் காரணமான பெண்மணிக்கும் ஏற்பட்டிருந்த உடல் பாதிப்புகளை வைத்து குண்டு மூன்றடி உயரத்தில்தான் வெடித்திருக்க வேண்டும் என்று முடிவு செய்தேன். சம்பவம் நடந்த இடத்தைச் சுற்றி 200 அடிக்கும் மேலாக சல்லடை போட்டுச் சலித்தோம். ராஜீவின் முன்பக்க நெற்றி எலும்பு நூறடி தூரத்தில் இருந்தது. இப்படி தடயங்களைத் தேடி கடுமையாக எங்கள் முயற்சியைத் தொடர்ந்த போதுதான் அதிர்ஷ்ட தேவதை எங்களைப் பார்த்துச் சிரித்தாள்.

(அடுத்த இதழில் முடியும்)

## மின் ஒத்தடம்!



பாட்டி வைத்தியத்தில் நமக்கு மணல் ஒத்தடம், தவிட்டு ஒத்தடம் என்றெல்லாம் தெரியும். படத்தில் காணப்படும் சோனாட்ரான் மின் தொடர்பால் உஷ்ணத்தை உண்டாக்குகிறது. சுளுக்கு அல்லது வலியுள்ள இடத்தில் மேலும் கீழும் நகர்த்தி ஒத்திடம் செய்து கொள்ளலாம். நல்ல பலன் கிடைக்கிறது.

- வல்லி மகள், மலேசியா



"நான் எழுதின இந்தக் கதையை படிச்சிப் பாரேன்."

"இப்போ ரொம்ப பிசியா இருக்கிறேன். தபால்ல திரும்பி வந்ததும் படிச்சுக்க றேன்!"

— சீனு

"நம்ம கட்சியோட கூட்டணி வைக்க யாருமே முன்வரலை!"

"அப்புறம்?"

"தலைவர் நம்ம கட்சியவே ரெண்டா உடைச்சு அதோட கூட்டணி வெச்சுக்க லாம் னுட்டார்!"

— சக்தி. சரவணன்



# நல்லா இல்ல தலைவா!



"நம்ம சொந்த பஸ் ஏரில விழுந் துருக்கிறத வழில பார்த்தும்— எப்படிடா நீ பேசாம வந்தே?"

"பஸ்ஸை 'வாட்டர் வாஷ்' பண்ணிட்டிருக்காங்களோன்னு நெனைச்சிட்டேன்பா!"

— எஸ். மாலதி

"இந்த தேர்தல்லே நான் ஜெயிக் கிறது உறுதி..."

"அதுக்காக இப்பவே தாஜ்மஹாலை விலைபேசறது நல்லா இல்ல தலைவா!"

— தஞ்சை தாமு






இந்த வார விடைகள் அனைத்தும் பழங்கள் பற்றியது. எச்சில் ஊற விடைகளைக் கண்டுபிடித்து, முந்தைய வாரங்களில் செய்ததைப் போல கூப்பனில் எழுதி மற்றக் கூப்பன்களோடு பூட்டி வையுங்கள். இருபத்தி ஆறு வார இறுதியில் எல்லா கூப்பன்களையும் எங்களுக்கு அனுப்புங்கள். இதில் மிக அதிகமான கேள்விகளுக்குச் சரியான விடை எழுதும் ஒரு நபருக்கு

**அமெரிக்கப் பயணம்** பரிசு!

இரண்டாவது பரிசு **ஐரோப்பா பயணம்**

மூன்றாவது பரிசு **மலேஷியா—சிங்கப்பூர் பயணம்**

ஒருவருக்கு மேல் சரியான பதிலை எழுதியிருந்தால் குலுக்கல் முறையில்தான் தேர்வு! பயணப் பரிசு பெறாதவர்களுக்கு அமரர் கல்கியின் நூல்கள் உண்டு.

ஆசிரியர் தீர்ப்பே இறுதி! ஓ.கே. ரெடி ஸ்டார்ட்!

## குவிஸ் கூப்பன் —8

1) தனக்குக் கிடைத்த எந்தக் கனியை ஔவையாருக்கு அளித்து அதியமான் அழியாப் புகழ் தேடிக் கொண்டான்?

2) ஒரு பழத்தின் ஆங்கிலப் பெயர் இந்திய மாநிலம் ஒன்றின் பெயர் கூட. அது என்ன?

3) கவுண்டமணி–செந்தில் சம்பந்தப்பட்ட எந்த 'இன்னொரு' பழக் காமெடி வெகு பிரபலமானது?

4) பண்ருட்டி எந்தப் பழத்துக்குப் பேர் போனது?

5) எந்தப் பழம் மரத்திலிருந்து விழுவதைக் கண்டு ஐஸக் நியூட்டன் புவியீர்ப்பு விதிகளைக் கண்டறிந்ததாகச் சொல்வார்கள்?

6) ஹைதராபாதில் எந்தப் பழத் தோட்டத்திற்கு ஜெயலலிதா உரிமையாளராக உள்ளதாகப் பிரபலமாக அறியப்படுகிறார்?

**விடைகள்:**

1)........................................

2)........................................

3)........................................

4)........................................

5)........................................

6)........................................

# "தேர்தலில் நிற்க நேரமில்லை!"

இரண்டரை வருஷமாக 'ஈ' டீ.வி.யில் ஒளிசரின் காட்சிகளோடு சக்கைப் போடு போட்டுக் கொண்டிருக்கிறதாம் 'இதி கதா காது'! இதுவும் மெகாதான். பரபரப்பான படப்பிடிப்புச் சூழல். 'ஷாட்டு'களுக்கு இடையே ராதிகா பேசினார்.

"இருபது வருஷமா நடிக்கிறேன். இருநூத்து ஐம்பது படம் முடிச்சிருக்கேன். அதுக்கெல்லாம் கிடைக்காத ரெஸ்பான்ஸ் 'சித்தி'க்குக் கிடைச்சிருக்கு. நேஷனல் லெவல்ல இதுவரை எந்த சீரியலுக்கும்



கிடைக்காத 'ரேட்டிங்' இந்தத் தொடருக்குக் கிடைச்சிருக்கு. அதுக்குக் காரணம் எங்க டீம். ஐ'ஆம் ரியலி ஹாப்பி" என்று உற்சாகமாக ஆரம்பித்தார்.

"முதல்ல, சாரதா, சக்தின்னு இரட்டை வேஷம் கிடையாது. நாங்க எதிர்பார்த்ததுக்கும் அதிகமா, வரவேற்பு கிடைச்சதனாலே, கொஞ்சம் டெவலப் செஞ்சோம். ஆனா அந்தக் கேரக்டர் கதையோட உள்ளடங்கி வந்துட்டதால ஒட்ட வெச்ச மாதிரி தெரியல..." என்றார்.

" 'சித்தி' இந்திக்கும் போகிறதாமே?"

"எஸ்... மலையாளத்துல 'பார்வதி', தெலுங்குல 'பின்னி' ரெண்டும் நல்லா போயிட்டிருக்கு. கன்னடத்துல 'சிக்கம்மா'ன்னு வரப் போகுது. இந்திலேயும் 'சோட்டி மா'ன்னு பிளான் பண்ணிட்டிருக்கோம். இதே கதைதான். ஆனா, அந்தந்த மொழிக்கு ஏற்ப, சில



••
ராதிகா
பதில் சொல்ல
விரும்பாத கேள்வி...
••



''நம்ம கோபால் இப்ப ஏன் கிரிக்கெட் விளையாட வர்றதில்லை?''
''இந்தச் சூதாடிப் பய விளையாட்டை எவன் விளையாடுவான்னு சொல்லிட்டுச் சீட்டு விளையாடப் போறான்!''
– வத்திராயிருப்பு தெ. சுந்தர மகாலிங்கம்

மாறுதல்கள் இருக்கும். 'சோட்டிமா'லேயும் நீங்கதான் நடிக்கணும்னு' டைரக்டர் சொல்லிக்கிட்டிருக்காரு. அது முடியாதுங்க... வேறே பாப்புலர் ஆர்ட்டிஸ்டா தேடிக்கிட்டு இருக்கோம்.''

'' 'கோடீஸ்வரன்' ஐடியா யாருடையது?

'கரோர்பதி'ல இருந்துதான் இன்ஸ்பிரேஷன் கிடைச்சது. ஆனா நான் ஏற்கெனவே லண்டன்லே 'தி மில்லினர்' போன்ற நிகழ்ச்சிகளை டி.வில பார்த்திருக்கேன். அதே போல, நாம இங்கே செஞ்சா நல்லா இருக்குமேன்னு கூட யோசிச்சிருக்கேன். ஆனா ஒரு கோடிங்கிறது பெரிய தொகையா படவே, தைரியமா இறங்க முடியல. மத்தவங்க செய்ய ஆரம்பிச்சதும், எனக்கும் நம்பிக்கை வந்துடுச்சு.''



'சித்தி'க்குக் கிடைச்சிருக்கும் வரவேற்பைப் பயன்படுத்திக் கொண்டு, வரும் தேர்தலில், தி.மு.க. சார்பில் நிற்க உங்களுக்கு 'சீட்' தரப் போறாங்களாமே!''

''நான் தி.மு.க. அபிமானி. தேர்தல் சமயத்தில் பிரசாரம் செய்யப் போவேன். இது எல்லோருக்கும் தெரிஞ்ச விஷயம்தானே? ஆனா, முழு நேர அரசியல்வாதியா என்னால செயல்பட முடியாது. காரணம், இப்பவே ஓய்வு ஒழிச்சல் இல்லாம வேலை பண்ணிட்டு இருக்கேன். கூடவே இதுவும் சேர்ந்துடுச்சுன்னா, ஐ வில் கோ மேட்! எனக்கு அரசியல்ல ஆர்வமும் கிடையாது. மேலிடத்துல இருந்து அழைப்பும் வராது. வந்தாலும் 'சாரி' சொல்லிடுவேன்.''

''பர்சனலா ஒரு கேள்வி. நீங்க கல்யாணம் பண்ணிக்கப் போறீங்களாமே?''

''எனக்கு அதைப் பத்தி யோசனையே கிடையாது. காலைல ஏழு மணிக்கு 'சித்தி' டப்பிங் பேசப் போறேன். என் மகள் ரேயான் ஸ்கூலுக்குப் போனதும் படப்பிடிப்புக்குக் கிளம்பிடுவேன். நடுவே ஆபீஸ் வேலை. மறுபடி ஷூட்டிங், டப்பிங்னு பிசாசு மாதிரி வேலை பண்ணிக்கிட்டிருக்கேன். மத்தியானம் லஞ்ச் சாப்பிட பத்து நிமிஷம்தான் டைம் கிடைக்குதுன்னா பார்த்துக்கங்க.''

''நீங்க சரத்குமாரை மணக்கப் போவதாகச் சொல்றாங்களே?''

''இந்தக் கேள்விக்கு நான் பதில் சொல்ல விரும்பலை'' என்றார் ராதிகா.

— அனு

அவர் 'வாயை மூடு' என்று உரத்துக் கத்தவில்லை. 'கெட் அவுட்' என்று உக்கிரமாய் இரையவில்லை. ஆனால் அது சார்ந்த அனைத்து முஸ்தீபுகளும் அங்கு சற்று நேரத்தில் நடந்தேறி விட்டன. கழுத்தைப் பிடித்துத் தள்ளப்படாத குறையாய் அவன் வெளியே வந்து விழுந்திருக்கிறான்.

இதோடு மானேஜரிடம் ஏகத்துக்கு வாக்குவாதம் செய்தாகி விட்டது. தனக்குத்தான் அலுவலகச் சூழலில் பணி செய்ய முதிர்ச்சி இல்லையோ என்று கூட அவன் வருத்தம் கொண்டான். நடந்து போன நிகழ்வுகள் அவனைத் தன் இருக்கைக்குப் போவதற்குக் கூட கூச்சப்படுத்திற்று.

'மானேஜரின் கேபினில் அவர் இரைந்தது அனைவருக்கும் கேட்டிருக்கும். இறுதியாய் அவர் முறைத்துக் கொண்டதும் அனைவருக்கும் புரிந்திருக்கும். இதோடு, முத்து முத்தாய் வியர்த்த கழுத்துப் பட்டியும் இறுகிப் போன முகமும் அனைவரையும் சந்தோஷப்படுத்தும். சொற்ப நேரத்துக்கு நாம் பார்வைப் பொருளாய் ஆகிப் போவோம். கூட இருக்கும் பெண்கள் உட்பட எல்லார் முகத்திலும் நம்மைப் பற்றி எகத்தாளம் ததும்பி வழியும். இந்த வேதனையில், நிர்மலா வேறு உடனே அருகில் வந்து துக்கம் விசாரிப்பாள். உடம்பின் ஒவ்வொரு செல்லிலும் விஷம் பரவிய கள்ளி அவள். அவள் கேட்கும் ஒவ்வொரு கேள்வி இணுக்குகளிலும் கேலி பொங்கும். வாழைப் பழத்தில் ஊசி செருகுவது போல் நம்மிடம் வாய் கிளறுவாள். பதில் சொல்லாவிட்டால், பேசக் கூட இயலாத துக்கம் அவனுக்கு என்று அலுவலகம் முச்சூடும் செய்தி பரப்புவாள். வாய் திறந்து பதில் சொல்லி விட்டால் தொலைந்தது. துருவித் துருவி மானேஜர் பற்றிய வசவு வார்த்தைகளை என் வாயினின்றும் வாங்கி விட்டு, அவரிடம் போய் வத்தி வைப்பாள். இந்த இக்கட்டுக்கு என்ன செய்வேன்...' என்று அவன் குழம்பித்

நந்தன்



நவித்தாள்.

**வி**ஷயம் சிறிதுதான். துளியும் உப்புச் சப்பில்லாததுதான். ஆனால் அது, தொடர்ந்து நிகழ்ந்த வாக்குவாதத்தினால் ரசாபாசம் ஊறி விட்டு விட்டது.

"சாரதா..." என்று காலையில் மானேஜர் அழைக்கையில் கூட குதூகலமாகத்தான் அவள் பென்சிலையும் பேடையும் எடுத்துக் கொண்டு அவரது அறைக்குப் போனாள்.

ஆனால் அவர் டிக்டேட் செய்த கடிதத்தை உடனே டைப் செய்து கொண்டு உள்ளே போன போதுதான் நாக்கில் சனி புகுந்து கொண்டிருக்க

# வெளிச்சம்

வேண்டும்.

"என்னம்மா சாரதா... சிங்கிள் ஸ்பேஸ்ல அடிச்சிருக்கிங்களே... இது மேலிடத்துக்குப் போற கடிதம்மா. டபுள் ஸ்பேஸ்ல அடிச்சுக் கொண்டாங்க" - இது மானேஜர்.

"சார்... நீங்க ஒரே தாள்ல வரணும்னு சொன்னீங்களே."

"ஆமா, ஒரே ஷீட்லதான் வரணும்."

"அது முடியாது சார்."

"சட்டென்ற அவளின் மறுப்பு, 'ம்' என்ற உக்கிரமான ஒரு உறுமலுடன் அவரை நிமிர்ந்து பார்க்கச் செய்தது.

"ஏம்மா... ஏ...ன் முடியாது?"

"சார்... இதை டபுள் ஸ்பேஸ்ல அடிச்சா ஒரே ஷீட்ல வராது. ரெண்டு ஷீட் ஆகும்."

"அடிக்கலாம் போம்மா."

"இல்ல சார். நிச்சயமா முடியாது."

"முடியாதுங்கறது உலகத்துலயே கிடையாது சாரதா. ட்ரை பண்ணிப் பாருங்க வரும்."

"முடியும்னு நெனச்சு அஞ்சு மாசத்துல புள்ள பெக்க முடியுமா சார்?"

இந்த உதாரணம்தான் அவரின் கோபத்தைக் கிளறியிருக்க வேண்டும். நம் கருத்து நேர்மையானதாய் இருக்கலாம். அது சார்ந்து நாம் சொன்ன உதாரணம் கூட நியாயமானதாய் இருந்திருக்கலாம். ஆனால் அதைச் சொன்ன நேரமும் விதமும்தான் தவறாகிப் போயிற்றோ?

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●



"உலகம் உருண்டை என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு கூறு."

"என்னதான் அம்மா திட்டினாலும் விரட்டினாலும் வீட்டை விட்டுக் கோபமாப் போற அப்பா திரும்பவும் புறப்பட்ட இடத்துக்கே வந்து சேருகிறார்!"

– வத்திராயிருப்பு தெ. சுந்தரமகாலிங்கம்

"சார்... இந்த ஷீட்ல நாப்பது லைன் டைப் செய்யலாம். அதுவே டபுள் ஸ்பேஸிங்னா இருபது முடியும் சார். இங்க பாருங்க. இதுல இருபத்தெட்டு லைன் வருது. அதனால டபுள் ஸ்பேஸிங்ல அடிச்சா நிச்சயம் ரெண்டு ஷீட் வந்துடும்."

'என் வாதம் தவறென்று எப்படிச் சொல்ல முடியும்?'

சாரதாவுக்கு எரிச்சல் மூண்டது.

இதுவே அவர் என்ன யோசித்திருப்பார்... இருபது வயதுப் பெண்ணுக்கு இத்தனை திமிரா? இவளின் வயது என் அனுபவம். என்னையே இவள் எதிர்த்துப் பேசுகிறாளா... பார்த்து விடுகிறேன் இவளை, -ஆத்திரம் அவர் மனசுக்குள் வலுவாய் தர்சம் கொண்டிருக்க வேண்டும். ஆத்திரமும் அசூயையும் எங்கு உண்மையை விழி விரித்துப் பார்க்கச் செய்யும்?

'மானேஜர் என் அனுபவமின்மையைக் குறைசொன்னார். நான் டீம் வொர்க்குக்கு லாயக்கற்றவள் என்று இகழ்ந்தார். நான் முன்னேறுவது கடினம் என்று சாபமிட்டார். உன்னை வைக்க வேண்டிய இடத்தில் வைக்கிறேன் என்று சவால் விட்டார். பிறகு என் முன்னாலேயே ராஜனை அழைத்து அதே வேலையை ஒப்படைத்தார்.

அலுவலக இழிவுகளிலேயே, பதவி உயர்வு பறிபோவதைக்காட்டிலும், வருவாய் இழப்பைக் காட்டிலும் கொடுமையானது ஒன்று உண்டென்றால், அது 'உன்னால் இதைச் செய்ய இயலாது, அவன் இதைச் செய்வான் பார்' என்று மேலதிகாரி கருதுவதுதான்.' அந்த இழிவை அவள் ஜீரணிக்கச் சிரமப்பட்டாள்.

இதனூடே இரண்டு மூன்று பெண் குமாஸ்தாக்கள் அவள் இருக்கையினருகே வந்திருந்தனர். எல்லோருடைய முகத்திலும் கேலியும் கிண்டலும் நிரம்பி வழிந்தது.

"போல்டா அடிச்சியேடீ சாரதா. வெல்டன். அந்த முசுடுக்கு இது மாதிரி ஒரு ஆள் வேணும்தான்" - மானேஜரிடம் என்றோ ஒருநாள் ஏச்சு வாங்கிய ஒருத்தி அவளது செயலைப் பாராட்டினாள்.

"ஏய் சாரதா... இந்தப் பிரச்னையை யூனியன் லெவல்ல கொண்டுட்டுப் போனா என்ன?" - இது இன்னொருத்தி.

"நீ கவலைப்படாத சாரதா. இவனால ஒண்ணும் கிழிக்க முடியாது. அப்படி ஏதாவது இன்கிரிமெண்ட் கட் அது இதுன்னு ஏதாவது செஞ்சான்னா எங்கிட்ட தப்பா நடக்க முயற்சி செஞ்சான்னு சொல்லிடு.

செக்சுவல் ஹாரஸ்மென்ட் கேஸ் ரொம்ப ஸ்ட்ராங்கானது. ஆளு கதறிக்கிட்டு கால்ல விழுவான்" - அடுத்தவள் அதி கலபமாய் விஷம் கக்கினாள்.

அவர்களின் கூற்றுக்குப் பதில் பேசாமல் மௌனமாய் இருந்து அவர்களை அனுப்பி விட்டவளுக்குப் பக்கத்து சீட் பானுமதி அக்காவின் அந்நியோன்யப் பேச்சு இதம் தந்தது. "உன்னோட நியாயத்தச் சொன்ன துல தப்பே இல்ல சாரு. ஆனா அதச் சொன்ன விதம் கொஞ்சம் நாசூக்கா இருந்திருக்கலாம்னு எனக்குப் படறது."

இதற்கும் கூட சாரதா பதில் பேசாவிட்டாலும் இவளின் பேச்சு சாரதாவை ஒரு நிமிடம் யோசிக்க வைத்தது.

ஆனால் அவள் நினைப்பு முச்சூடும் ராஜனிடமே இருந்தது. அவன் என்ன செய்திருப்பான் என்று அறிந்து கொள்ள அவள் அதீத ஆவலாயிருந்தாள்.

**ரா**ஜன் தன் இருக்கை திரும்பியதும் சாரதா அவனிடம் சென்றாள்.

"என்ன ராஜன்.... மானேஜர் சொன்ன மேட்டரை டைப் அடிச்சிட்டீங்களா?"

"அப்பவே அடிச்சிட்டேனே" என்றான் அவன்.

"அதை நான் ஒரு நிமிஷம் பாக்கலாமா..?"

"ஓ... தாராளமா" என்றவன் இரண்டு தாள்களை எடுத்து அவளிடம் கொடுத்தான்.

அதைப் பார்த்த அவளுக்கு ஆச்சரியம். அந்தக் கடிதம் டபுள் ஸ்பேஸிங்கில் இரண்டு தாள்களில் டைப் செய்யப்பட்டிருந்தது. அதைவிட ஆச்சரியம். அதில் மானேஜரும் கையெழுத்திட்டிருந்தார்.

"என்னங்க.... கடைசில நான் சொன்ன மாதிரி தானே வந்திருக்குது. இதுக்குப் போய் அவர் அந்தக் குதி குதிச்சாரே?"

"ஒரே ஒரு வித்தியாசம். நீங்க, முடியாதுங் கறதைச் சொன்னீங்க. நான் செஞ்சேன். இந்திய மேலாளர்கள் இதைத்தான் விரும்பறாங்க சாரதா" என்றான்.

கற்றுக் கொள்வதற்கு இன்னும் நிறைய இருப்பதாய் அவளுக்குத் தோன்றியது. ○

## 'நான்' 'நாய்' ஆகும்போது...

**எ**ங்கேயிருந்துதான் இப்படிக் கதையையெல்லாம் பிடிக்கிறார்களோ? கண்றாவி! -'நட்டி புரபஸர்' முதல் பாகம் வெளிவந்தபோது, இலேசான முணுமுணுப்புகள், விமர்சனங்கள் தோன்றின. இருந்தாலும் புரபஸர் க்ளம்ப், அப்பா, அம்மா, அண்ணா... உட்பட ஏழுவித மான கேரக்டர்களையும், எடி மர்ஃபி-யே ஏற்றிருந்த புதுமைக்காகவும் சற்றே வேறுபட்ட காமெடி வசனங்களுக்காகவும் அதை ஒரு



வழியாக ஏற்றுக் கொண்டனர். இப்போது வந்திருக்கும் 'நட்டி புரபஸர்-2'வில் புரபஸர் நார்மன் ஒரு ஜெனடிக் விஞ்ஞானி. அதே கல்லூரியின் மற்றுமொரு விரிவுரையாளர் ஜேனட் ஜாக்சன். நார்மனைக் காதலிக்கிறார். இடையில் வில்லனாக 'படி'- என்றொரு கேரக்டர் (இதிலும் தோன்றியிருப்பது எடி மர்ஃபிதான்) இந்த 'படி' கேரக்டர், புரபஸர் நார்மனின் ஈகோ-வாம். அவருடைய ஜீனில் இருக்கும் இந்தக் குணத்தை நீக்கிவிட்டால், நார்மன் கல்யாணத்துக்குத் தயார். எனவே தன்னிடமிருந்து அதைப் பிரித்து ஒரு குடுவையில்(!) வைத்திருக்கிறார் நார்மன். அவருடைய செல்ல நாயின் ரோமம் அதில் தவறுதலாக விழுந்துவிட, நாய்க் குணத்துடன் ஒரு புதிய உருவமாக வெளிவருகிறான் படி! அவனால் ஏற்படும் குளறுபடிகளை, சவால்களை சந்தித்து, அவனை ஒழித்துவிட்டு தன் காதலியின் கரம் பிடிப்பதுதான் கதை.

- ஜீவன்




## நாற்பத்து எட்டாம் அத்தியாயம்

## "நீ என் மகன் அல்ல"

ஆதித்த கரிகாலரின் இறுதி ஊர்வலம் காவிரி நதிக்கரையோரமாகத் தஞ்சையை நோக்கிச் சென்றபோது அந்த ஊர்வலத்தில் சோழ நாட்டு மக்கள் லட்சக்கணக்கானவர்கள் கலந்துகொண்டார்கள். வீரர்களைப் போற்றும் குணம் அந்நாளில் தமிழகத்தில் பெரிதும் பரவியிருந்தது. இடையில் சில காலம் சோழ குலம் மங்கியிருந்து, விஜயாலய சோழர் காலத்திலிருந்து மீண்டும் தலையெடுத்ததைக் கண்டோம் அல்லவா? நூறு ஆண்டுகளாக அந்தக் குலத்தில் பிறந்தவர்கள் ஒவ்வொருவரும் வீரப் புகழில் ஒருவரையொருவர் மிஞ்சிக்கொண்டு வந்தார்கள். விஜயாலயன் மகன் ஆதித்தவர்மன் பல்லவ குலத்தின் புகழை அழித்துத் தொண்டை நாட்டைக் கைப்பற்றினான். அவனுடைய மகன் பராந்தக சக்கரவர்த்தி மதுரையும் ஈழமும் கொண்டு தென்னாடு முழுவதையும் தன் ஆட்சிக்கு உட்படுத்தினான். பராந்தக சக்கரவர்த்தியின் புதல்வர்கள் நால்வரும் ஒருவரையொருவர் வீரத்தில் மிஞ்சினார்கள். அவர்களில் ஒருவன் பாண்டிய நாட்டுப் போரில் உயிர் துறந்தான். மூத்த மகனாகிய இராஜாதித்தனோ, சமுத்திரம் போல் பொங்கி வந்த இரட்டை மண்டலக் கன்னர தேவனின் பெரும் படையுடன் தக்கோலத்தில் போர் தொடுத்து, அம்மாபெரும் சைன்யத்தை முறியடித்த பிறகு, போர்க்களத்திலேயே வஞ்சனையினால்

**அமரர் கல்கி**

கொல்லப்பட்டு, 'யானை மேல் துஞ்சின தேவன்' ஆயினான். கண்டராதித்தர் சிவ ஞானச் செல்வராயினும் அவரும் வீரத்தில் குறைந்தவராக இல்லை. பின்னர், ஆற்றூர்த் துஞ்சிய அரிஞ்சயனைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. அரிஞ்சயனுடைய குமாரர் சுந்தர சோழர் காலத்தில், தக்கோலப் போருக்குப் பிறகு சிறிது மங்கியிருந்த சோழ சாம்ராஜ்யத்தின் புகழ் மீண்டும் மகோந்நதமடைந்தது.

இவ்வாறு வழி வழியாக வந்த வீர பரம்பரையில் பிறந்தவர்களில் ஆதித்த கரிகாலனுக்கு ஒப்பாருமில்லை, மிக்காருமில்லை என்று மக்களின் ஏகோபித்த வாக்கே எங்கும் கேட்கக் கூடியதாயிருந்தது. பன்னிரண்டாம் வயதில் சேவூர்ப் போர்க்களத்தில் அவன் புரிந்த வீரதீர சாகஸச் செயல்கள் அர்ச்சுனன் மகனான அபிமன்யுவின் புகழையும் மங்கச் செய்து விட்டதல்லவா?



த்தகைய வீராதி வீரன் சில வருட காலமாகத் தஞ்சைக்கு வராமல் காஞ்சியிலேயே தங்கியிருந்த காரணம் பற்றிப் பலவித வதந்திகள் உலாவி வந்தன. சிற்றரசர்கள் சூழ்ச்சி செய்து மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டும் நோக்கத்துடன் ஆதித்த கரிகாலனைத் தஞ்சைப் பக்கம் வராதபடி செய்து வருகிறார்கள் என்பது ஒரு வதந்தி. முன்னொரு காலத்தில் கரிகால் வளவன் வடநாட்டுக்குப் படையெடுத்துச் சென்று இமயமலையின் உச்சியில் புலிக்கொடியை நாட்டிவிட்டு வந்தது போல், அதே பெயர் கொண்ட ஆதித்த கரிகாலனும் செய்ய விரும்பிச் சபதம் செய்திருக்கிறான் என்றும், அந்தச் சபதம் நிறைவேறாமல் அவன் தஞ்சைக்குத் திரும்ப விரும்பவில்லையென்றும், அதற்குப் பழுவேட்டரையர் முதலியவர்கள் குறுக்கே நின்று தடுத்து வருகிறார்கள் என்றும் இன்னொரு வதந்தி பரவியிருந்தது.

எனவே, திடீர் என்று ஒருநாள் ஆதித்த கரிகாலன் இறந்துவிட்டான் என்றும் சம்புவரையரின் மாளிகையில் வஞ்சனையினால் கொல்லப்பட்டான் என்றும் செய்தி பரவவே, சோழ நாட்டு மக்களின் உள்ளக் கிளர்ச்சி எப்படியிருந்திருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை அல்லவா?

அந்த வீர புருஷனுக்கு இறுதி மரியாதை செய்வதற்கு மக்கள் லட்சக் கணக்கிலே திரண்டு வந்து சேர்ந்ததிலும் வியப்பில்லைதானே?

ஊர்வலம் தஞ்சையை அணுகியபோது, ஜனக்கூட்டம் ஜனசமுத்திரமாகவே ஆகி விட்டது. தஞ்சை நகர மக்களும், தஞ்சைக் கோட்டையைச் சுற்றிலும் சூழ்ந்திருந்த தென் திசைப்படை வீரர்களும் கூட்டத்தோடு கூட்டமாகச் சேர்ந்துகொண்டார்கள். அவர்களையெல்லாம் கோட்டைக்குள் அநுமதித்தால் பல விபரீதங்கள் நேரிடலாம் என்று முதன் மந்திரி அநிருத்தர் எச்சரித்ததின் பேரில், துயரக் கடலில் மூழ்கியிருந்த சக்கரவர்த்தியும் அவருடைய குடும்பத்தாரும் கோட்டைக்கு வெளியிலேயே வந்துவிட்டார்கள்.

சுந்தர சோழரைப் பார்த்ததும், அந்த மாபெரும் கூட்டத்தில் ஒரு பேரிரைச்சல் எழுந்தது. "சோழ நாட்டைச் சுந்தர சோழர் அரசு புரிந்தபோது 'ஹா' என்ற சப்தமே கேட்டதில்லை" என்று சிலா சாஸனங்கள் சொல்லுகின்றன. ஆதித்த கரிகாலரின் மரணத்துக்கு முன்னால் குடிகொண்டிருந்த நிலைமை அச் சிலாசாஸனங்களில் பொறிக்கப்பட்டிருக்கின்றன.

இன்றைக்கோ, "ஹா! ஹா!" "ஐயையோ!" என்ற சப்தங்கள் லட்சக்கணக்கான குரல்களில் எழுந்தன. அபிமன்யுவைப் பறிகொடுத்த அர்ச்சுனனுடைய நினைவு அநேகருக்கு வந்தது. ஆனால் அபிமன்யுவோ பகைவர் கூட்டத்துக்கு மத்தியில் தன்னந்தனியாக நின்று அஸகாய சூரத்தனங்கள் செய்துவிட்டு உயிரை விட்டான்.

இங்கேயோ ஆதித்த கரிகாலன் மதுராந்தகனின் மண்ணாசையினாலும் சிற்றரசர்களின் அதிகார வெறியினாலும் சூழ்ச்சிக்கு ஆளாகிக் கொல்லப்பட்டான். மக்களின் மனத்தில் குடிகொண்டிருந்த இந்த எண்ணத்தை உறுதிப்படுத்தும் காரியங்களும் வெளியிலே நடந்தன.



த்த கரிகாலருடைய சடலம் தஞ்சைக்கோட்டைக்கு வெளியே எல்லாரும் வந்து பார்க்கும்படியாக வைக்கப்

பட்டிருந்தது. அனைவரும் வந்து பார்த்துக் கண்ணீர் விட்டு விட்டுப் போனார்கள். ஆனால் மதுராந்தகன் மட்டும் வரவில்லை. பழுவேட்டரையர்களும் வரவில்லை.

பழுவேட்டரையர்கள் தங்கள் நண்பர்களைச் சைன்யங்களுடன் ஒன்று சேர்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்று வதந்தி பரவவும் ஆரம்பித்திருந்தது.

எனவே, ஆதித்த கரிகாலருக்கு வீர மரணத்துக்குரிய முறையில் ஈமச் சடங்குகள் நடந்து, சக்கரவர்த்தியின் குடும்பத்தினர் தஞ்சைக் கோட்டைக்குள் பிரவேசித்த பிறகும் ஜனக்கூட்டம் விரைவாகக் கலையவில்லை.

''மதுராந்தகன் வீழ்க!'' ''பழுவேட்டரையர்கள் வீழ்க!'' என்னும் கோஷங்கள் முதலில் இலேசாக எழுந்தன. நேரமாக, ஆக, இந்தக் கோஷங்கள் பலம் பெற்று வந்தன.

திடீரென்று ஜனக்கூட்டத்தில் ஒரு பகுதியினர் கோட்டைக் கதவுகளை இடித்து மோதித் திறந்துகொண்டு தஞ்சை நகருக்குள் பிரவேசித்தார்கள். முதலில் அவர்கள் பழுவேட்டரையர்களின்



மாளிகைக்குச் சென்றார்கள். வெளியிலே நின்று "பழுவேட்டரையர்கள் வீழ்க!" என்று சப்தமிட்டார்கள்.

முதன்மந்திரி அநிருத்தரின் கட்டளையின் பேரில் வேளக்காரப் படை வீரர்கள் வந்து ஜனங்களைக் கலைந்து போகச் செய்ய நேர்ந்தது.

இதற்கிடையில், மதுராந்தகத் தேவன் அநிருத்தரின் வீட்டில் ஒளிந்துகொண்டிருக்கிறான் என்பதாக ஒரு வதந்தி பரவியது. ஜனங்கள் அநிருத்தரின் வீட்டைப் போய்ச் சூழ்ந்துகொண்டார்கள்.

"எங்கே அந்தப் பேடி மதுராந்தகன்? வெளியே வரச் சொல்லுங்கள் மதுராந்தகனை!" என்று கத்தினார்கள்.

அச்சமயம் உண்மையாகவே மதுராந்தகன் அநிருத்தரின் வீட்டுக்குள்ளிருந்தான். வெளியிலே ஜனங்களின் கூக்குரலைக் கேட்டுவிட்டு, அவன் நடுநடுங்கினான். அநிருத்தரைப் பார்த்து, "முதன்மந்திரி! என்னை எப்படியாவது கோட்டைக்கு வெளியே அனுப்பி விடுங்கள். ரகசியச் சுரங்க வழியாக அனுப்பி விடுங்கள். என்னை ஆதரிக்கும் நண்பர்களுடனே நான் போய்ச் சேர்ந்துகொள்கிறேன். இந்த உதவியைத் தாங்கள் செய்யும் பட்சத்தில் நான் சோழ சிம்மாசனத்தில் ஏறும்போது தங்களையே முதன்மந்திரியாக வைத்துக் கொள்ளுவேன்" என்று சொன்னான்.

"ஐயா! சிங்காதனம் ஏறுவதைப் பற்றி இப்போது ஏன் பேச வேண்டும்? இன்னும் சுந்தர சோழச் சக்கரவர்த்தி உயிருடன் இருக்கிறாரே" என்றார் முதன்மந்திரி அநிருத்தர்.

"சுந்தர சோழர் தம் குமாரனுக்கு ஈமக் கடன் செய்துவிட்டுத் திரும்பி வந்ததை நீங்கள் பார்க்கவில்லையா? அவர் முகம் எவ்வாறு பேயடித்தது போலிருந்தது என்பதைக் கவனிக்கவில்லையா? நான் இந்த மச்சு மேடையிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தேன். அதிக காலம் இனி உயிரோடு இருக்க மாட்டார். அருள்மொழிவர்மனாவது நானாவது சிங்காதனம் ஏறி இந்த ராஜ்யத்தை ஆள வேண்டும். சுந்தர சோழர் எனக்குப் பட்டம் கட்டவே பிரியப்படுகிறார். நீங்களும் அன்னையும் எதற்காக அதற்குக் குறுக்கே நிற்க வேண்டும்?" என்றான் மதுராந்தகன்.

"இளவரசே! தங்கள் அன்னை குறுக்கே நிற்பதற்குக் காரணம் இல்லாமல் போகுமா? அதோ கேளுங்கள், இந்த வீட்டைச் சூழ்ந்திருக்கும் மக்களின் கூச்சலை, சுந்தர சோழர் இஷ்டப்பட்டால் மட்டும் போதுமா? சோழ நாட்டு மக்கள் இஷ்டப்பட வேண்டாமா?" என்று கூறிவிட்டு, "ஆகா! இது என்ன?" என்று அநிருத்தர் வீதியில் எட்டிப் பார்த்தார்.

பழைய கூக்குரலுக்குப் பதிலாக இப்போது "அருள்மொழிவர்மர் வாழ்க!" "பொன்னியின் செல்வர் வாழ்க!" "ஈழங்கொண்ட வீராதி வீரர் வாழ்க!" என்ற கோஷங்கள் கிளம்பின.

கம்பீரமான குதிரை மேலேறி அருள்மொழிவர்மர் அங்கே வந்து கொண்



டிருந்தார். அவரைப் பின் தொடர்ந்து அத்தனை ஜனங்களும் போனார்கள். சில நிமிஷ நேரத்துக்கெல்லாம் அநிருத்தர் வீட்டின் வெளிப்புறம் வெறுமையாகி விட்டது. அநிருத்தருக்கு முன்னாலிருந்த மதுராந்தகனும் அந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்தான். அவனுடைய கண்கள் பொறாமைத் தீயினால் கோவைப் பழம் போலச் சிவந்தன. "ஆகா! இந்தப் பிள்ளையிடம் அப்படி என்னதான் வசிகரம் இருக்கிறதோ?" என்று தனக்குத் தானே சொல்லிப் பொருமிக்கொண்டான்.

அநிருத்தர், "இளவரசே! ஈழத்து ராணியைக் கொன்றவனைப் பின்தொடர்ந்து சின்னப் பழுவேட்டரையர் ஓடியபோது நீர் அந்தப் பாதாளச் சுரங்க வழியில் இருந்ததற்குக் காரணம் என்ன?" என்று கேட்டார்.

"பொன்னியின் செல்வன் யானைப் பாகன் வேஷத்தில் அரண்மனைக்கு வந்த பிறகு எனக்கு மிக்க மனச்சோர்வு உண்டாயிற்று. அவனும் நானும் ஒரே சமயத்தில் இந்தக் கோட்டைக்குள்ளிருக்கப் பிரியப்படவில்லை. பழுவேட்டரையர் சுரங்க வழியை எனக்குக் காட்டிக் கொடுத்திருந்தார். அதன் வழியாகப் போய் விடலாமா என்று யோசித்துக்கொண்டு அரண்மனைத் தோட்டத்தைச் சுற்றிக்கொண்டிருந்தேன். அப்போது ஒருவன் சுரங்கப் பாதை வழியாக வெளியே வருவதைப் பார்த்தேன். அவன் என்னை நெருங்கி, "இளவரசே! தங்களைப் பார்க்கத்தான் வந்தேன். பெரிய பழுவேட்டரையரும், கந்தமாறனும் தங்களை உடனே அழைத்து வரும்படி என்னை அனுப்பினார்கள். தங்கள் சிம்மாதன உரிமையை ஆதரித்து நிற்கப் பெரிய சைன்யங்கள் தயாராயிருக்கின்றன' என்றான். அவனுடைய தோற்றம் எனக்குச் சிறிது சந்தேகத்தை உண்டாக்கிற்று.

"பெரிய சைன்யம் தயாராகியிருந்தால் நான் ஏன் வெளியே வர வேண்டும்? அவர்களே இங்கு வந்து கொடும்பாளூர்ப் படைகளைத் தோற்கடித்து விட்டு என்னைச் சிம்மாதனத்தில் ஏற்றி வைக்கட்டுமே!" என்றேன்.

அந்த மனிதன், 'இளவரசே! அது மட்டுமல்ல. தங்களுடைய பிறப்பைக் குறித்து ஒரு பயங்கரமான மர்மம் இருக்கிறது. அதை வேறு யாரும் உங்களுக்குச் சொல்லத் துணிய மாட்டார்கள். நான் சொல்வேன்' என்றான்.

'அப்படியானால் வா! உடனே போகலாம்' என்றேன் நான். அதற்கு அவன், 'முதன் மந்திரி அநிருத்தருக்கு ஒரு செய்தி சொல்ல வேண்டியிருக்கிறது. அதைச் சொல்லி விட்டு வருகிறேன். நீங்கள் முதலில் போய்ச் சுரங்கப் பாதையில் ஒளிந்திருங்கள்' என்றான்.

அதன் பேரில் பொக்கிஷ நிலவறைக்குள் போய் நான் காத்திருந்தேன். முதன்மந்திரி! தங்களை அவன் வந்து பார்த்தானா? என் பிறப்பைக் குறித்த பயங்கரமான மர்மம் என்னவாக இருக்கக்கூடும்?" என்றான் மதுராந்தகன்.

"இளவரசே! தங்களுக்கு அதை வெளியிட்டுச் சொல்லும் உரிமை பெற்றவர் தங்கள் அன்னை செம்பியன்மாதேவி ஒருவர்தான். எனக்கு ஓரளவு தெரிந்திருந்தாலும் நான் அதைச் சொல்லக்கூடாது" என்றார் அநிருத்தர்.


ந்தச் சமயத்தில் அம்மாளிகையின் வாசலில் மறுப்டியும் கலகலப்புச் சப்தம் கேட்டது. முதன்மந்திரி எட்டிப் பார்த்தார். "ஆகா! இதோ உங்கள் அன்னையே வந்து விட்டார்" என்றார்.

சிறிது நேரத்திற்கெல்லாம் செம்பியன் மாதேவி அநிருத்தரின் வீட்டுப் பெண்மணிகளைப் பார்த்துப் பேசி விட்டு மேல் மாடிக்கு வந்தார். அந்தத் தேவியின் முகத்தில் அப்போது சோகம் ததும்பிக்கொண்டிருந்தது. அநிருத்தர் எழுந்து உபசரித்துச் சுட்டிக் காட்டிய ஆசனத்தில் தேவி உட்கார்ந்தார். சிறிது நேரம் தரையைக் குனிந்து பார்த்த வண்ணமாக இருந்தார். அந்த மேல்மாடத்திலும் மாளிகைக்கு வெளியிலே வீதியிலும் நிசப்தம் குடிகொண்டிருந்தது. பின்னர் செம்பியன் மாதேவி மதுராந்தகனையும், அநிருத்தரையும் ஒருமுறை பார்த்துவிட்டு, "ஐயா! என் கணவர் என் தலை மீது இந்தப் பாரத்தைச் சுமத்திவிட்டு மேற்றிசைக்கு எழுந்தருளிவிட்டார். தவறு செய்தது என்





னவோ நான்தான். ஆனால் அவர் இச்சமயம் இருந்திருந்தால் நான் இவ்வளவு துன்பப்பட நேர்ந்திராது" என்றாள்.

அப்போது மதுராந்தகன் கண்களில் கோபக் கனல் பறக்க, "நீ ஏன் இப்படி வேதனைப்படுகிறாய்? ஏன் அடிக்கடி என் தந்தையின் பெயரை எடுக்கிறாய்? தஞ்சாவூர்ச் சிம்மாதனத்தில் நான் ஏறப் போவதென்னமோ நிச்சயம். அதற்குத் தடையாக இருந்தவர்களில் ஒருவன் இறந்துபோனான். அருள்மொழிவர்மனோ என்னைவிட வயதில் சிறியவன். நான் உயிரோடு இருக்கும்போது அவனுக்கு ஒருநாளும் பட்டம் கட்ட மாட்டார்கள். நீ மட்டும் குறுக்கே நில்லாமல் கருணை செய்ய வேண்டும். அம்மா! பெற்ற பிள்ளைக்குத் துரோகம் செய்யும் அன்னையைப் பற்றி யாராவது கேள்விப்பட்டதுண்டா? சிவபக்த மணியாகிய நீ ஏன் எனக்குத் துரோகம் செய்யப் பார்க்கிறாய்?" என்றான்.

"என் குழந்தாய்! பெற்ற பிள்ளைக்குத் தாய் விரோதமாக இருப்பது பயங்கரமான துரோகம்



நான். ஆனால் என் கணவர் எனக்கு அவ் விதம் கட்டளையிட்டுச் சென்றிருக்கிறார். அவருடைய கட்டளையை நிறைவேற்றுவது என் கடமை. சொல்லுகிறேன் கேள்! மண்ணாசை ரொம்பப் பொல்லாதது. ராஜ்யத்தின் மேல் ஆசை அதை விடக் கொடியது. தலையிலே முடி சூடிக் கொண்டிருப்பவர்களைப் போல் இவ்வுலகத்தில் கவலைக்குள்ளாகிறவர்கள் வேறு யாருமில்லை. சிங்காதனத்தில் வீற்றிருப்பவர்களைப் போல் மன அமைதியின்றிச் சங்கடப்படுபவர்களும் யாரும் இல்லை. தலையிலே கிரீடம் வைத்துக்கொண்டிருந்த காரணத்தினால் அல்லவா வீரபாண்டியன் உயிரை விட நேர்ந்தது? பூலோக ராஜ்யத்தைக் காட்டிலும் எவ்வளவோ மடங்கு மேலானது சிவலோக சாம்ராஜ்யம். நாம் இந்த ஊரை விட்டே போய் விடுவோம் வா. க்ஷேத்திர தரிசனம் செய்துகொண்டு கைலையங்கிரி வரையில் போவோம். சாக்ஷாத் கைலாச நாதரின் கருணைக்குப் பாத்திரமாவோம்."

"ஆகா! கைலாச யாத்திரை போவதற்குத் தங்களுக்குத் தக்க பருவம்தான். எனக்கு



இன்னும் பிராயம் ஆகவில்லை. இந்த உலகத்தின் சுக துக்கங்கள் எதையும் நான் இன்னும் அனுபவிக்கவில்லை. உடம்பெல்லாம் சாம்பலைப் பூசிக்கொண்டு 'சிவ சிவா' என்று பைத்தியக்காரனைப் போல் அலைந்து திரியும்படி என்னை நீ வளர்த்து விட்டாய். அந்தப் பரமசிவனுடைய பெருங் கருணையினாலேயே என்னிடம் இப்போது ராஜ்யம் நெருங்கி வந்திருக்கிறது. அதை ஏன் நான் கைவிட வேண்டும்?" என்று கேட்டான் மதுராந்தகன்.

"அப்பனே! உன்னை நெருங்கி வந்திருக்கும் ராஜ்யம் எத்தனையோ அபாயங்களுடன் சேர்ந்து வந்திருக்கிறது. நீ சிம்மாதனம் ஏறுவதற்கு ஒரு தடை நீங்கி விட்டது. ஆதித்த கரிகாலன் இறந்துவிட்டான் என்று சொன்னாய். சற்று முன்னால் இந்த வீட்டைச் சுற்றி நின்றுகொண்டிருந்த ஜனங்கள் கூச்சலிட்டது உன் காதில் விழவில்லையா? மதுராந்தகா! ஆதித்த கரிகாலன் இறந்ததற்கு நீயும் பழுவேட்டரையர்களுமே காரணம் என்று மக்கள் நினைக்கிறார்கள். உன்னை எப்படிச் சக்கரவர்த்தியாக அவர்கள் ஒப்புக் கொள்வார்கள்?"

"அம்மா! அதையெல்லாம் ஜனங்கள் வெகு சீக்கிரம் மறந்துவிடுவார்கள். என்னைச் சிங்காதனத்தில் ஏற்றி விட்டால் என்னையே சக்கரவர்த்தி என்று ஒப்புக் கொள்வார்கள். இன்னும் சொல்கிறேன் கேள். கரிகாலனுடைய மரணத்துக்கு யார் காரணம் தெரியுமா? அருள்மொழிவர்மரின் அருமைச் சிநேகிதன் வந்தியத்தேவன்தான். சம்புவரையர் வீட்டில் கரிகாலன் செத்துக்கிடந்த இடத்தில் வந்தியத்தேவன்தான் இருந்தானாம். சம்புவரையரையும், வந்தியத்தேவனையும் பாதாளச் சிறையில் போட்டிருக்கிறார்கள். தனக்குச் சிம்மாதனம் கிடைக்கும் பொருட்டுத் தமையனைக் கொலை செய்ய ஏற்பாடு செய்தவன் அருள்மொழிவர்மன். இது மட்டும் ஜனங்களுக்குத் தெரியட்டும். அப்புறம் பொன்னியின் செல்வரின் கதி என்ன ஆகிறதென்று பார்க்கலாம்.

செம்பியன் மாதேவி தம் கண்களில் கனல் வீச,

"அடே பாவி! கருணையே உருக்கொண்ட அருள்மொழியைப் பற்றி என்ன வார்த்தை சொல்கிறாய்? உன்னைப் போன்ற துராசை பிடித்தவனையே அவன் கோவிலில் வைத்துக் கும்பிடத் தயாராக இருக்கிறானே. அவனைப் பற்றி நீ மறுபடியும் இப்படிச் சொன்னால் நீ எரிவாய் நரகத்துக்குத்தான் போவாய். உனக்கு இம்மையிலும் மறுமையிலும் கதி மோட்சம் கிடையாது."

இதைக் கேட்டதும் மதுராந்தகன் குதித்தெழுந்தான். "அடி பேயே! உன் சொந்த மகனுக்குச் சாபம் கொடுக்கிறாய். என்னுடைய விரோதிக்கு ஆசி கூறுகிறாய். நீ என்னுடைய தாயாராக இருக்க முடியுமா? இல்லவே இல்லை" என்று மதுராந்தகன் உள்ளம் நொந்து கொதித்துக் கூறினான்.

அப்போது செம்பியன்மாதேவி "அப்பா! உனக்கு நான் இதை என்றைக்கும் சொல்ல வேண்டாமென்றிருந்தேன். உன்னுடைய பிடிவாதத்தினால் சொல்லும்படி செய்துவிட்டாய். உண்மையிலேயே நான் உன்னைப் பெற்ற தாயார் அல்ல. நீ என் மகனும் அல்ல" என்றாள்.

மதுராந்தகன் கம்மிய குரலில் "ஆகா! நான் சந்தேகித்தது உண்மையாகப் போய் விட்டது. நீ என் தாயாரில்லா விட்டால் என் தாயார் யார்? நான் உன் மகன் இல்லையென்றால் பின் யாருடைய மகன்?" என்றான்.

தேவி முதன்மந்திரி அநிருத்தரைப் பார்த்து, "ஐயா! தாங்கள் சொல்லுங்கள். என்னுடைய அவமானத்தை நானே சொல்லும்படி தயவு செய்து வைக்க வேண்டாம்" என்றாள்.

முதன்மந்திரி அநிருத்தர், மதுராந்தகனைப் பார்த்துச் சொன்னார்: "இளவரசே! தங்களைச் சின்னஞ்சிறு குழவிப் பருவத்திலிருந்து எடுத்து வளர்த்த அன்னையை மனம் நோகும்படி செய்து விட்டீர்கள். எப்படியும் ஒருநாள் தாங்கள் உண்மையை அறிந்துகொள்ள வேண்டியதுதான். இப்போதே அதைத் தெரிந்து கொள்ளுங்கள்" என்றார்.

செம்பியன்மாதேவிக்குக் கல்யாணமான புதிதில் தன் வயிற்றில் ஒரு குழந்தை பிறக்க வேண்டுமென்றும் அக் குழந்தை சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக வேண்டுமென்றும் ஆசை இருந்தது. அவள்

கர்ப்பந்தரித்து, குழந்தைப் பேற்றை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சமயத்தில், அவளுடைய கணவர் வெளியூருக்குச் சென்றிருந்தார். அதேசமயத்தில் அதே காலத்தில் அக்காளும் தங்கையுமான இரண்டு ஊமை ஸ்திரீகள் அரண்மனைத் தோட்டத்தில் குடியிருந்தார்கள். அவர்களில் ஒருத்தி கர்ப்பந்தரித்துக் குழந்தைப் பேற்றை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். செம்பியன் மாதேவி க்ஷேத்திராடனம் சென்றிருந்தபோது அனாதையாகக் காணப்பட்ட அந்தக் கர்ப்ப ஸ்திரீயை அழைத்து வந்திருந்தாள். அவளுடைய சகோதரி தஞ்சாவூருக்கருகில் இருக்கிறாளென்று கேள்விப்பட்டுக் கர்ப்ப ஸ்தீரீக்கு உதவி செய்வதற்காக அவளை வரவழைத்துக் கொண்டிருந்தாள்.

செம்பியன் மாதேவிக்குக் குழந்தை பிறந்தது. முதன்மந்திரி அநிருத்தர் ராஜ்யத்துக்குப் பிள்ளை பிறந்திருப்பதன் பொருட்டு வாழ்த்துக் கூற வந்தார். அப்போது செம்பியன் மாதேவி கண்ணீர் விட்டு 'கோ'வென்று அழுதாள். பிறந்த குழந்தை உயிரில்லாமல் அசைவற்றுக் கட்டையைப் போல் கிடந்தபடியால் அவ்வாறு அவள் துக்கப்பட்டாள்.

"ஐயா! என் கணவன் வந்து கேட்கும்போது நான் என்ன பதில் சொல்வேன்?" என்று விம்மியழுதாள். அவருடைய துயரத்தைக் கண்டு பொறுக்க முடியாமல் அநிருத்தர் ஒரு யோசனை கூறினார். தோட்டத்தில் குடியிருந்த ஊமைப் பெண்ணுக்கு ஒரு ஆணும், ஒரு பெண்ணுமாக இரட்டைக் குழந்தைகள் பிறந்திருப்பதை அவர் அறிந்திருந்தார். அந்த ஊமைப் பெண்ணிடம் சென்று குழந்தைகளை அங்கேயே விட்டு விட்டுப் போய் விட்டால், அவர்கள் அரண்மனையில் வளர்வார்களென்று ஜாடையினால் தெரிவித்தார். அந்த ஊமைப் பெண் வெறி பிடித்த பைத்தியக்காரி போல் இருந்தாள். முதலில் அவள் குழந்தைகளைக் கொடுக்க மறுத்தாள். சற்று நேரங் கழித்துக் குழந்தைகளை விட்டு விட்டு ஓடியே விட்டாள். உடனே அநிருத்தர் அவளுடைய தங்கையைக் கொண்டு ஆண் குழந்தையைச் செம்பியன் மாதேவியிடம் கொண்டு விடச் செய்தார். உயிரின்றிக் கட்டை போல இருந்த குழந்தையை ஒருவருக்கும் தெரியாமல் கொண்டு போய்ப் புதைத்து விடும்படி ஊமைத் தங்கையிடம் கொடுத்தனுப்பி விட்டார். மற்றொரு பெண் குழந்தையைத் தன்னுடைய வீட்டுக்கு எடுத்துச் சென்று அங்கிருந்த தன்னுடைய சீடன் ஆழ்வார்க் கடியானிடம் கொடுத்துப் பாண்டிய நாட்டுக்கு அனுப்பி வைத்து விட்டார்.

இவ்விதம் குழந்தை மாற்றம் செய்தது செம்பியன்மாதேவியின் உள்ளத்தில் உறுத்திக்கொண்டே இருந்தது. ஒருநாள் கண்டராதித்த தேவரிடம் உண்மையை ஒப்புக்கொண்டு விட்டாள். அந்த மகான், "அதனால் பாதகமில்லை! பெண்ணே! யார் வயிற்றில் பிறந்த குழந்தையாக இருந்தால் என்ன? சிவபெருமான் அளித்த குழந்தைதான். உன் வயிற்றில் பிறந்த குழந்தையைப் போலவே வளர்த்து வா. ஆனால் வேறு குலத்தில் பிறந்த பிள்ளை சோழ சிங்காதனத்தில் ஏறக்கூடாது. அப்படிச் செய்வது குலத் துரோகமாகும். ஆகையால் சிறு பிராயத்திலிருந்தே இவனைச் சிவ பக்தனாகும்படி வளர்த்து வருவோம். 'சோழ சாம்ராஜ்யம் வேண்டாம். சிவபக்தி சாம்ராஜ்யமே போதும்! என்று இவனே சொல்லும்படி வளர்ப்போம். ஆனால் எந்தக் காரணத்தை முன்னிட்டும் இவனைத் தஞ்சாவூர் சிங்காதனத்தில் ஏற்றி வைப்பதற்கு மட்டும் நாம் உடந்தையாக இருக்கக் கூடாது. அந்தச் சந்தர்ப்பம் வரும்போது நான் உயிரோடு இல்லாவிட்டாலும் நீ உறுதியுடனிருந்து சோழர் குலத்தைக் காப்பாற்ற வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

"மதுராந்தகா! நீ கண்டராதித்த தேவருடைய புதல்வனுமல்ல. செம்பியன் மாதேவி வயிற்றில் பிறந்த பிள்ளையுமல்ல. ஊர் சுற்றித் திரிந்த அனாதை ஊமைப் பெண்ணின் மகன். உன்னை இந்தத் தேவி தம் சொந்தக் குழந்தையைவிட நூறு மடங்கு அதிகமாகச் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார். இப்போது அவருடைய கருத்துக்கு மாறாக நடக்காதே. தேவி சொல்வதைக் கேள். அதனால் உனக்கு நன்மையே விளையும்" என்றார் அநிருத்தர்.

(தொடரும்)

முதுகே ஒடிந்து விடும் அளவிற்கு அழுக்கு மூட்டைகளைச் சுமந்து கொண்டு இன்னொருவன் முதுகைப் பார்த்து "ஐயோ எவ்வளவு அழுக்கு" என்று குற்றம் சொல்வதில் நம் அரசியல்வாதிகளை மிஞ்ச உலகத்தில் யாருமே இல்லை. குறிப்பாக, ஊழல் குற்றச்சாட்டுக்களை ஒருவர் மீது ஒருவர் வீசும்போது "இவர் மட்டும் யோக்கியமா?" என்று ஏகமாய் எரிச்சல் படுகிறார்கள் மக்கள்.

ஆனால் அந்த அரசியல்வாதிகளுக்கு மத்தியில் சற்று வித்தியாசமாகக் காட்சி அளிக்கிறார் அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமி. சாம்பிளுக்கு ஒரு விஷயம். கோவையில் தெருவை ஆக்ரமித்துக் கொண்டு போக்குவரத்துக்கும் மக்களுக்கும் இடைஞ்சலாக இருந்த கடை மற்றும் வீடுகளை ஒரு அதிரடி ஆக்ஷன் எடுத்து அகற்ற நினைத்தார் அமைச்சர். ஆனால் முதலில் என்ன செய்தார் தெரியுமா? அரசு நிலத்தை ஆக்ரமித்துக் கொண்டிருந்த தனது சொந்த நிலத்தின் ஒரு பகுதியை விடுவித்துவிட்டு அதன் பிறகுதான் நடவடிக்கையில் இறங்கினார்!

"அது மட்டுமில்லீங்க... முடிஞ்ச வரை எங்களுக்குத் தேவையானதை செஞ்சு கொடுத்திடுவாரு. அப்படி முடியலைன்னாக்கூட எங்களை இப்ப அப்பன்னு அநியாயத்திற்கு அலைக்கழிக்க மாட்டாரு; தன்னால் முடியாதுங்கற விஷயத்தைத் தெளிவாச் சொல்லிடுவாரு; போலீஸ் ஸ்டேஷன் விவகாரம், கட்டைப் பஞ்சாயத்து இதில் எல்லாம் கண்டிப்பா மூக்கை நுழைக்க மாட்டாரு!" என்கிறார் கோவை நகர உடன்பிறப்பு ஒருவர்.

அமைச்சரின் தொகுதி நகர்ப்புறத்தை ஒட்டியிருக்கும் சிங்காநல்லூர். தொழிலாளர்கள் நிறைந்த பகுதி. "1996ல் நான் வோட்டு கேட்கப் போனபோது சாலைகள் படுமோசமாக இருந்தன; எங்கும் குடிநீர்ப் பஞ்சம்; தெருவெங்கும் கழிவுநீர் ஓடிக் கொண்டிருந்தது; சரி செய்ய முடியுமா என்று மலைப்பாக இருந்தது. ஆனால் என் தொகுதி மக்களுக்குத் திருப்தி ஏற்படும் வகையில் பல காரியங்களைச் செய்து முடித்திருக்கிறேன் என்று நினைக்கும்போது சந்தோஷமாக இருக்கிறது!"



என்கிறார் அமைச்சர்.

அவருடைய சாதனைப் பட்டியலிலிருந்து:

- அ.தி.மு.க. ஆட்சிக் காலத்தில் போடப்பட்ட அத்திக்கடவு நீர்த்திட்டத்தின் குறைபாடுகள் களையப்பட்டு 550 கிராமங்களுக்குக் குடிநீர் வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. சிங்காநல்லூர் பகுதியில் ஒன்பது மேல்நிலை தண்ணீர்த் தொட்டிகள் கட்டி முடிக்கப்பட்டிருக்கின்றன.
- நகரை ஒட்டியுள்ள வெள்ளலூர் பஞ்சாயத்தில் ஏழுகோடி செலவில் சாலை வசதி செய்யப்பட்டுள்ளது. தவிர, சிங்காநல்லூரில் பேருந்து நிலையம் ஒன்று புதிதாகக் கட்டப்பட்டிருக்கிறது.
- 1954-55ல் கட்டப்பட்ட தொழிலாளர்களின் வீடுகள் பழுதுபார்க்கப்பட்டு பட்டா கொடுக்கப்பட்டிருக்கிறது.
- அமைச்சருடைய தொகுதியின் ஒரு பகுதி நகர்ப்புறத்தில் வருவதால் அங்கு அங்கீகரிக்கப்படாத லே-அவுட்டுகள் அதிகம். அந்தப் பகுதிகளுக்கு மாநகராட்சி எந்த வசதியும் செய்து தர முடியாது. அவர்களுக்கு அமைச்சரின் தொகுதியிலிருந்து சாலை வசதி, குடிநீர் வசதி செய்து தரப்பட்டிருக்கிறது.

இது தவிர, 9 சமத்துவப்புரங்கள் மற்றும் 24 உழவர் சந்தைகள் மாவட்டம் முழுவதும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. "கோவையில் இருந்தால், தினசரி அதிகாலையில் ஆர்.எஸ்.புரம் சிங்காநல்லூர் உழவர் சந்தைகளுக்குச் சென்று விடுவார்; அங்கு எல்லாம் ஒழுங்காக நடைபெறுகிறதா என்று பார்த்துவிட்டுதான் திரும்புவார்!" என்கிறார் அமைச்சரின் துணைவியார் விஜயலட்சுமி. அவரும் கட்சிப் பிரமுகர்தான். இப்போது மாவட்டச் செயலராக இருக்கிறார்.

# ஒருப்படியான காரியங்களுங்கோ!



தமது 24வது வயதிலேயே சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் பழனிச்சாமி. அதன்பின் மாவட்ட துணைச் செயலர் உட்பட பல பொறுப்புகளில் இருந்திருக்கிறார். வை.கோ. கழகத்தைப் பிளந்தபோது பெரும்பாலான கோவை பிரமுகர்கள் அவர் பக்கம் போய் விட்டார்களாம். கழகத்தில் தங்கிவிட்ட ஒன்றிரண்டு பிரமுகர்களில் இவரும் ஒருவர்.

1996 தேர்தலில் வெற்றி பெற்றவுடன் இவருக்கு வனத்துறை பொறுப்புதான் கொடுக்கப்பட்டிருக்கிறது. வனத்துறை அமைச்சராக இவருடைய பங்கு என்ன என்பதைத் தெரிந்து கொள்ள வனத்துறை அதிகாரிகளின் வாயைக் கிளறினோம்.

"தமிழ்நாட்டில் சுமார் 2000 கிராமங்கள் மலைகளை ஒட்டி இருக்கின்றன; அந்த கிராமங்களில் வசிக்கும் மக்கள், மலைச்சாரலில் உள்ள மரங்களை வெட்டி பிழைப்பு நடத்துகிறார்கள்; எத்தனை முயன்றும் இதைத் தடுக்க முடியவில்லை; எனவே அந்தப் பகுதி மக்களுக்கு ஏதாவது மாற்று வேலை கொடுத்தால் தான் இந்த நிலை மாறும் என்று உலக வங்கியின் உதவியுடன் 500 கோடி செலவில் ஒரு திட்டம் போட்டார் அமைச்சர். அதன்படி கிராம மக்களுக்கு ஆடுமாடுகள் வளர்க்க, பெட்டிக் கடை வைக்க கடன் தருவது போன்ற பணிகள் மேற்கொள்ளப்பட்டன; அந்தப் பகுதியில் பஸ் வசதியும் செய்து தரப்பட்டது; இது தவிர 'செக்-டாம்' எனப்படும் சிறிய அணைகள்

கட்டப்பட்டு தண்ணீரைத் தேக்கி வைத்து விவசாயம் செய்ய வழி செய்யப்பட்டிருக்கிறது; சுமார் 600 கிராமங்களில் இது போன்ற பணிகள் மேற்கொள்ளப்பட்டு மலைப்பகுதி மொட்டையடிக்கப்படாமல் காப்பாற்றப்பட்டுள்ளது. அமைச்சர் வனத் துறையில் இருந்தபோது நடந்த ஒரு உருப்படியான காரியம் இது என்கிறார்கள் அதிகாரிகள்.

இப்படி நல்ல பல காரியங்கள் வனத் துறையில் நடந்து கொண்டிருந்தபோது இவரிடமிருந்து வனத்துறையைப் பறித்து விட்டு இளைஞர் நலம், விளையாட்டு, சுற்றுச்சூழல் துறைகளைக் கொடுத்து விட்டார் முதல்வர்.

'இது ஒரு வகையான ஓரம்கட்டும் விளையாட்டுதானே' என்று கேட்டால், "நீங்கள் நினைப்பது தவறு. அதற்குச் சமமான பொறுப்புகள் தாம் இவை. குறிப்பாக, சுற்றுச்சூழல் இலாகா, வளர்ச்சிக்கான திட்டங்களுடன் கைகோத்துச் செல்லும் இலாகா" என்கிறார்கள் அமைச்சரின் உதவியாளர்கள்.

எதைப் பற்றியும் கவலைப்படாமல், புதிய பொறுப்பிலும் தன் வேகத்தைக் காட்டுகிறார் பழனிச்சாமி. பஞ்சாயத்துப் பகுதிகளில் 6000 ஊரக விளையாட்டு மையங்களை அமைத்து விட்டார்; ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு உள்விளையாட்டு அரங்கம் மற்றும் நீச்சல்குளம் ஏற்படுத்தும் பணியில் இறங்கிவிட்டார். சுற்றுச் சூழலை மாசுபடுத்தாத வகையில் தூத்துக்குடி ஸ்டெர்லைட் ஆலையை நடத்தி வந்தது. சேலம் மாவட்டத்தில் 800 ஜவ்வரிசி தொழிற்சாலைகளை சுற்றுச் சூழல் கெடா வண்ணம் மாற்றியது என்று அமைச்சரின் பணிகள் தொடர்கின்றன.

இவ்வளவு சாதனைகளுக்கும் கரும்புள்ளி வைத்தாற் போல, அமைச்சருக்கும் சி.டி. தண்டபாணிக்கும் நடக்கும் உட்கட்சி மோதல் பேசப்படுகிறது. அமைச்சரைக் கேட்டால், "அது ஒன்றும் பெரிய விஷயமே இல்லை; வரும் சட்டமன்றத் தேர்தலில் கோவை மாவட்டத்தின் எல்லாத் தொகுதிகளையும் கழகக் கூட்டணி கைப்பிடிக்க நாங்கள் எல்லோரும் ஒற்றுமையாகச் செயல்பட்டுக் கொண்டு இருக்கிறோம்" என்று சொல்கிறார்!

— ப்ரியன்

படம்: ராஜன்

# 37 மணிநேர தொடர் இன்னிசை!

திருச்சி, வாசவி மஹாலில் கின்னஸ் உலக சாதனைக்காக முப்பத்தியேழு மணி நேர தொடர் இன்னிசை நிகழ்ச்சி ஒன்றை திருச்சி சங்கீத் ஆர்க்கெஸ்ட்ரா மெல்லிசைக் குழுவினர் நடத்தி நகரத்தையே கலக்கினர்.



சங்கீத் இசைக் குழுவில் ஐந்து ஆண் பாடகர்கள், ஐந்து பெண் பாடகிகள், எட்டு இசைக் கலைஞர்கள் என மொத்தம் பதினெட்டுப் பேர். தொடர் இன்னிசை நிகழ்ச்சியின்போது இவர்களில் எவரும் திடீரென விலகிப் போகவோ, புதிதாக எந்தவொரு நபரும் குழுவில் இடம் பெறவோ கண்டிப்பாகக் கூடாது என்பது கின்னஸ் விதி. அதை மீறாமல் நிகழ்ச்சியை நிறைவு செய்துள்ளார்கள்.

தமிழ், தெலுங்கு, மலையாளம், இந்தி ஆகிய மொழிகளில் பாடப்பட்ட பாடல்களின் எண்ணிக்கை நானூற்று அறுபது.

நள்ளிரவு நேரம் கடந்தும், அதிகாலைப் பொழுதிலும் அரங்கு நிறைந்தே இருந்தது குழுவினருக்கு மிகுந்த உற்சாகத்தைத் தந்ததாம்.

தலைமை நடுவராக சென்னையிலிருந்து வந்திருந்த கின்னஸின் அதிகாரபூர்வமான நடுவர் கே. வீரபத்திரன், முப்பத்தியேழு மணி ஐந்து நிமிட நேரமும் இசைக் குழுவினரைப் போலவே உறக்கமின்றி, ஓய்வின்றி இன்னிசை நிகழ்ச்சியில் ஒன்றிப் போனார்'' என்கிறார் திருச்சி சங்கீத் ஆர்க்கெஸ்ட்ராவின் இயக்குநர் ஜார்ஜ்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# இருபத்திரண்டில் இரண்டு சாதனைகள்!






"சாதனைக்கென்று செய்ய வில்லை. அதிகமாக ரன்கள் குவிக்க வேண்டுமென்றுதான் நினைத்தேன். இருபத்தியோரு பந்துகளில் ஐம்பது ரன்! எனக்கே ஆச்சர்யமாகத்தான் இருக்கிறது" என்கிறார் இந்திய கிரிக்கெட் அணியின் வேகப்பந்து வீச்சாளர் அஜீத் அகர்கர்.

ராஜ்கோட்டில் நடந்த இந்திய – ஜிம்பாப்வே அணிகளுக்கிடையேயான ஒருநாள் போட்டியில் பதினேழு ஆண்டு இந்திய சாதனையை முறியடித்திருக்கிறார் அகர்கர். 1983–ஆம் ஆண்டு மேற்கிந்திய தீவு அணிக்கு எதிராக கபில்தேவ், இருபத்தி இரண்டு பந்துகளில் ஐம்பது ரன்கள் எடுத்ததுதான் இதுவரை இந்திய சாதனையாக இருந்தது.

உலகிலேயே குறைந்த பந்துகளில் அதிக ரன்கள் எடுத்தவர்கள் பட்டியலில் ஐந்தாவது இடத்தைப் பிடித்திருக்கிறார் அகர்கர். முதலிடத்தைப் பிடித்திருப்பது இலங்கை அணியின் கேப்டனான ஜெயசூர்யா! (16 பந்துகளில் ஐம்பது ரன்!)

"ஆரம்பத்தில் நான் பேட்ஸ்மேன்தான். 1996ம் வருடம் மும்பை செயின்ட் சேவியர்ஸ் அணிக்காக ஏழரை மணி நேரம் நின்று 345 ரன்கள் எடுத்திருக்கிறேன். ஒரு ஆட்டத்தின் போது, முக்கியமான பௌலர் காயம் காரணமாக அணியில் இடம்பெற வில்லை. தற்செயலாக நான் பந்து வீசினேன். சச்சின் டெண்டுல்கர் என் பந்து வீச்சை பார்த்து விட்டு, 'நன்றாக இருக்கிறது; இதில் அதிக கவனம் செலுத்து' என்று சொல்ல, உச்சிக்குளிர்ந்தது எனக்கு. மட்டையைப் போட்டு விட்டுப் பந்தைத் தூக்கினேன். பிறகு பத்தொன்பது வயதுக்குட்பட்டோருக்கான அணியில் இடம் கிடைத்தது. இலங்கையுடன் மூன்று ஒரு தினப் போட்டிகளில் ஆடினோம். இதில் மொத்தம் பதினாறு விக்கெட்டுகளை வீழ்த்தினேன். ஒரு போட்டியில் செஞ்சுரி அடித்தேன். இந்த ஆட்டம் தான் என்னை இந்திய அணியில் இடம் பெற வைத்தது" என்று சொல்லும் இந்த இளம் புயல், இருபத்தி மூன்று ஆட்டங்களில் ஐம்பது விக்கெட்டுகளை வீழ்த்தியிருக்கிறார். மிகக் குறைந்த போட்டிகளில் ஐம்பது விக்கெட்டுகளை வீழ்த்தியவர் என்ற உலக சாதனையும் இவர் பாக்கெட்டில்!

"காலில் ஏற்பட்ட காயம் காரணமாக அணியிலிருந்து விலகி பின்னர் மறுபிரவேசம் செய்த போது உங்கள் பந்து வீச்சு அதிகமாக சோபிக்கவில்லையே?" என்றால் வேகமாக மறுக்கிறார் தலையை ஆட்டி.

"ஒரு ஆட்டத்தில் ஐந்து விக்கெட் கிடைத்தால் எல்லா ஆட்டத்திலும் ஐந்து விக்கெட் கிடைக்க வேண்டுமென்பதில்லை. எல்லோரும் அப்படி எதிர்பார்க்கிறார்கள். என்னைப் பொறுத்த வரை சிறப்பாகவே செய்கிறேன். சில ஆட்டங்களில் அதிக விக்கெட். சிலவற்றில் ஏதுமில்லாமலும் இருக்கிறது.

"என் காலில் ஏற்பட்ட காயம் எதிர்பாராதது; துரதிர்ஷ்டமானதுதான். அதனால் கொஞ்சம் இழப்பு என்பதையும் மறுப்பதற்கில்லை" என்று சொல்லும் இந்த இருபத்தி இரண்டு வயது வேகப் பந்து வீச்சானர், தாம் ஒரு 'பக்கா' ஆல் ரவுண்டர் என்பதை வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் நிரூபிக்கப் போகிறாராம்!

ஆஸ்திரேலிய அணிக்கெதிரான மூன்று ஆட்டங்களில் 'டக்' அவுட் ஆனது பற்றி வாயைத் திறந்தால் இலேசாகச் சிரித்து விட்டு, 'வேறு விஷயங்கள் பேசலாமே' என்கிறார்!

— செ. ஏக்நாத்

# 290க்கு என்ன அர்த்தம்?

கொஞ்சம் நாள் முன்னால, இவரை இம்ப்ரெஸ் பண்ணறதுக்காக, ஏதாவது சமைக்க கத்துக்கலாம்னு, முதன்முதலா சமையல் ரூமுக்குள்ள நுழைஞ்சேன். ஒரு வாரம் கஷ்டப்பட்டதுல, நல்லா வெந்நீர் வெக்க வந்தது. சமைக்கிறது நான்னாலும் சாப்பிடப்போறது அஜீத் ஆச்சே! எதுக்கு ரிஸ்க்னு பெரிய மனசு பண்ணி, கரண்டிக்கு 'குட்பை' சொல்லிட்

● கல்யாணத்துக்கு முன் அஜீத், எப்படி பொறுப்பா, அன்பா இருந்தாரோ அதேபோல, இப்பவும் ரொம்ப பொறுப்பா, அதிக அன்பா இருக்காரு. நானும் அதே போல ஜாலியா, படு சோம்பேறியா இருக்கேன்.

● அஜீத் பைக் ரேஸ் பிரியர் இல்லையா? ரொம்ப வேகமா வண்டி ஓட்டுவார். நிறைய ரிஸ்க் ஷாட்ஸ்ல நடிப்பார். அசாத்திய துணிச்சல். இப்ப கொஞ்சம் நிதானம் வந்திருக்கு. கெஞ்சி கூத்தாடி தாஜா செய்ததன் பலன், 'டூப்' போட அனுமதிக்கிறார்.

● உன்னை முதன்முதலா பார்த்தப்போ, உன்னை ரொம்ப அமைதியான பொண்ணு, ஷை டைப்னு நினைச்சேன். ஆனா நீ பயங்கர வாலா, வாயாடியா இருக்கியேன்னு அவரே அசந்து போற அளவுக்கு என்னோட குறும்புகள் தொடர்கின்றன. பாவம், அஜீத்!

● கல்யாணத்துக்கு முன்னாடி 'பல்பா, பல்பி'ன்னு என்னமோ ரகசிய பேரெல்லாம் வெச்சுக்கிட்டு, செல்ஃபோன்ல மணிக்கணக்கா பேசிக்கிட்டிருந்தோம். ஆயிரக்கணக்குல பில் வந்தப்போ எங்க குட்டு உடைஞ்சது. இப்போ எந்தத் தடையுமில்ல. ஆனாலும் அதே பில் வருது!

● 290! இது என்ன எண்? எங்கள் புதிய ஃபிளாட் நம்பர்? என்கொயரி நம்பர்? எங்கள் தேனிலவு காட்டேஜ் எண்? எதுவுமில்லை. நானும் அஜீத்தும் சந்தித்துக் கொண்டு, இந்தப் புது வருஷத்தோட 290 நாட்கள் ஆகின்றன. ஆனால் வருஷக்கணக்கா பழகின மாதிரி ஒரு ஃபீலிங்.

● கல்யாண தேதிக்குக்

டேன். இப்ப, அவருக்குப் பிடிச்சது எதுன்னு தெரிஞ்சுக்கிட்டு, அழகா மெனு சொல்றதோட சரி!

● அஜீத் கொஞ்சம் குண்டாயிருக்காரு... நாற்பது நாள் ஷூட்டிங் எதுவும் இல்லாம, 'ஹனிமூன்' ட்ரிப்புல ஜாலியா தூங்கி ரெஸ்ட் எடுத்ததுல, வெயிட் போட்டுட்டாரு. ஆனா



நான் அப்படியே இருக்கேன். இன்னும் சொல்லப் போனா இளைச்சுப் போயிட்டேன். "இரண்டு பேருக்கும் சேர்த்து சாப்பாடு ஆர்டர் பண்ணுவேன். அவங்க சாப்பிட மாட்டாங்க... வீணா போகுதேன்னு அதையும் சேர்த்து நானே சாப்பிட்டு இப்படி ஆயிட்டேன்னு" - அஜீத் கிண்டலடிப்பார்.

● அஜீத் கிழக்கு, நான் மேற்கு... அவர் ரொம்ப ஆர்கனைஸ்டா இருப்பார். வீட்டுல வெச்சது வெச்ச இடத்துல இருக்கணும்பார். எல்லாத்தையும் 'பக்கா'வா பிளான் பண்ணி, ஒழுங்கா செய்வார். நான் ரொம்ப கேர்லெஸ். ஞாபக மறதி வேறே, நூத்துக் கிழவி மாதிரி. காலைல அவருக்கு பிரேக்ஃபஸ்ட் தயாரிக்கும்போது, மைக்ரோவேவ் அவன் லைட்டு எரியவிட்டு, கதவையும் திறந்து விட்டுடுவேன். கார் சாவி தொலைப்பேன், க்ரீம், ஷாம்பூ பாட்டிலுக்கெல்லாம் மூடி வைச்சிருக்கிற நோக்கமே எனக்குத் தெரியாது. திறந்தே வைச்சிடுவேன். இவர்தான் பின்னாடியே வந்து, ஒழுங்கா மூடி அழகா அதோட இடத்துல வைப்பார். திறந்தே இருந்தா தானே அடுத்த முறை உபயோகிக்கும்போது, வசதியா இருக்கும். எப்படியும் திறக்கப் போறது தானே? அதை ஏன் மூடணும்ங்கிறது என்னோட கன்ஸ்யூமர் பாலிசி. அஜீத்துக்கு இதெல்லாம் புரியவே புரியாது!

● எனக்குக் கல்யாணக் கனவுகள்னு ரொம்ப பிரமாதமா எதுவும் இருந்ததில்லே. உண்மையைச் சொல்லணும்னா, நடிகைகளுக்குக் காதலும், கல்யாணமும் இனிமையாக அமையாதுன்னு நெகடிவ் தாட்தான் இருந்தது. ஆனா, அஜீத்தைச் சந்திச்சதும், அவரைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு, இளவரசி போல கொள்ளை மகிழ்ச்சியா இருக்கிறதும் ஏதோ கனவு மாதிரிதான் இருக்கு. உண்மையிலேயே, நான் ரொம்ப அதிர்ஷ்டசாலி.

● கல்யாணத்துக்கு முன்னால, பின்னாலன்னு நீங்க கேட்டீங்களேன்னு இதையெல்லாம் சொன்னேன். உண்மையிலே, எனக்குக் கல்யாணமானதோ, அவர் என் புருஷன் என்றோ எனக்குத் தோணவே மாட்டேங்குது. எஸ்...வீ ஆர் ஸ்டில் இன் லவ்...! காதல் தொடர்கிறது... தொடரும் இறுதி வரை.

அன்புடன்...

**ஷாலினி அஜீத்குமார்**

தொகுப்பு: **சினி மினி**

# சிதாருக்கு சி.பி.ஐ.விசாரணை!

சிதாரின் நதிமூலம் என்ன என்று ஒரு சி.பி.ஐ. விசாரணைக்கு உத்தரவிடலாம் போல இருக்கிறது. எத்தனையோ விதமான கதைகள் சொல்கிறார்கள். அலாவுதீன் கில்ஜி காலத்தில், அவரது அரசவையிலிருந்த கவிஞரான அமிர் குஸ்ரு உருவாக்கிய இசைக் கருவிதான் சிதார் என்பது மிகப் பிரபலமான ஒன்று. மூன்று தந்திகள் கொண்ட 'ஸெ தர்' என்ற ஒரு இசைக் கருவி இருந்தது. அதனின்று வந்ததுதான் சிதார் என்பது இன்னொன்று.



எது எப்படியோ, இன்று சிதார் முழுக்க முழுக்க வட இந்திய இசைக் கருவி. ஹிந்துஸ்தானி இசைக்கு மட்டுமே லாயக்கான ஒன்று. கர்நாடக இசையில் ஒரு புதுமைக்காக இதைப் பயன்படுத்தலாம்.

"சிதாரில் உள்ள அகன்ற அடிப்பகுதி, மரத்தால் ஆனது என்று நீங்கள் நினைத்தால், ஸாரி! நம் ஊர் பரங்கிக்காய்ப் போல, ஒரு வட இந்தியக் காயின் உள்ளே குடைந்து எடுத்து, காய வைத்து, அதையே பயன்படுத்துகிறார்கள். மற்ற பகுதிகள் மரத்தால் ஆனவை. தந்திகளைத் தாங்கும் 'பிரிட்ஜ்' எனப்படும் பகுதி தந்தத்தால் ஆனது. மான் கொம்பையும் இதற்குப் பயன்படுத்துவது உண்டு" என்று சிதார் பற்றி ஒரு குட்டி லெக்சர் கொடுத்தார் பண்டிட் ஜனார்த்தன். சென்னைவாசி. பிறந்து, வளர்ந்தது ஹைதராபாத்.

சிதார் மேதையான பண்டிட் ரவிசங்கரின் நேரடி சிஷ்யர் இவர். "என் அப்பா ஹைதராபாதில் பிரபல வக்கீல். என்னை இன்ஜினியரிங் காலேஜில் சேர்த்தார். என் அக்கா சிதார் வாசிப்பார் என்பதால், சிறு வயது முதலே, என் ரத்தத்திலேயே சிதார் இசை ஊறிப் போய் விட்டது. கேள்வி ஞானத்தின் அடிப்படையிலேயே, எங்கள் வீட்டில் இருந்த சிதாரை எடுத்து வைத்துக் கொண்டு, நானே பயிற்சி செய்ய ஆரம்பித்தேன். ஓரளவு சுமாராக வாசிக்கப் பழகிய பின், ஆல் இந்தியா ரேடியோவுக்கு வாசிக்கத் தேர்வு செய்யப்பட்டேன்.

ஒருமுறை பண்டிட் ரவிசங்கர் ஹைதராபாத் வந்திருந்த சமயத்தில், 'ஹைதராபாதில் உள்ள நன்றாக சிதார் வாசிக்கக்கூடியவர்களில் இந்த இளைஞரும் ஒருவர்' என்று என்னை அறிமுகப்படுத்தினார். அடுத்த முறை பண்டிட்ஜி ஹைதராபாத் வந்தபோது, அவர் முன்னால் நான் வாசித்துக் காட்டினேன். "முறைப்படி குருவிடம் நீ சிதார் கற்றுக் கொள்ளவில்லை என்பது உன் இசையில் தெரிகிறது. ஆனால், உன்னிடம் அபார திறமை இருப்பதை என்னால் அடையாளம் காண முடிகிறது" என்றார் அவர்.

"நீங்கள் இவனை, உங்களிடம் சிஷ்யனாக ஏற்றுக் கொண்டீர்கள் என்றால், என்ஜினியரிங் படிப்பை விட்டுவிட்டு, உங்களுடனேயே அனுப்ப எனக்குச் சம்மதம்" என்றார் என் அப்பா. பண்டிட்ஜி, என்னை சிஷ்யனாக ஏற்றுக் கொண்டார்.

உலகப் புகழ்பெற்ற மேதை என்றாலும், சாதகம் செய்யாமல் கச்சேரிக்குப் போக மாட்டார் அவர். "ஒருநாள் நான் சாதகம் செய்யவில்லை என்றால், வாசிக்கிறபோது எனக்குத் தெரிந்துவிடும்; இரண்டு நாள் சாதகம் செய்யவில்லை என்றால் வாசிக்கிறபோது, கேட்கிறவர்களுக்குத் தெரிந்துவிடும். மூன்று நாள் சாதகம் செய்ய வில்லை என்றால், வாசிக்கிறபோது, உலகுக்கே தெரிந்து விடும்" என்பார் அவர்.

"ஒருமுறை ஒரு பத்திரிகையாளர் அவரிடம், மிகச் சிறப்பாக சிதார் வாசிக்கக் குறுக்கு வழி ஏதாவது உண்டா? என்று கேட்டபோது, அவரது பதில் : ஒரே வழிதான் உண்டு. அது குறுக்கு வழியா? இல்லையா என்று எனக்குத் தெரியாது. அது சாதகம்.. சாதகம்.. சாதகம்..."

— மௌலி





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்


72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை - 63. **Tel & Fax: 237 6129.**
**E-mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com**
**Please visit our website at: www.intamm.com/sspeetam**


## புத்தாண்டு-பொங்கல் நல்வாழ்த்துக்கள்

பேரன்புடையீர்! வணக்கம், வரும் புத்தாண்டு, பொங்கல் திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்திக்கின்றோம்.

தங்களின் அன்பினாலும், ஆதரவினாலும், குருகுலத்தில் 150 மாணவ, மாணவியர்கள் நல்ல முறையில் படித்து வருகின்றார்கள். குருகுல மாணவர்களின் முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு ஒரு உயர்நிலைப்பள்ளியும், ஒரு கம்ப்யூட்டர் பயிற்சி மையமும் துவங்கப்பட்டுள்ளது.

## புத்தாண்டு-பொங்கல் திருநாளில்

★குருகுல மாணவர்களோடு உங்களுடைய மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளுங்கள்.

★குருகுல மாணவர்களின், உணவு மற்றும் இதர செலவுகளுக்கு, கல்வி கற்பதற்கு, கம்ப்யூட்டர் பயிற்சி பெறுவதற்கு, கட்டிடம் கட்டுவதற்கு, மற்றும் நிரந்தர வைப்பு திட்டத்திற்கு தங்களின் மேலான நன்கொடைகளை, அளிக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| ● காலை சிற்றுண்டி (150 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| ● மதிய உணவு | ரூ. | 2,000/- |
| ● இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| ● பிஸ்கட், மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 750/- |
| ● ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ● ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ. | 3,000/- |
| ● ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 9,000/- |
| ● குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

'என் தாயே! என் தாயே!'

பரவச நடுக்கத்துடன் உச்சரித்துக் கொண்டிருந்தன, நீலுப்பாட்டியின் உதடுகள். இருபுறமும் தரையில், இறந்த ஓணான் போலக் கவிழ்ந்து கிடந்த அவள் கரங்கள் மெல்ல எழுந்து மார்பின் குறுக்காக வந்து விரல்கள் இணைந்தன.

"கை கூப்பறாடி!" என்றாள் அகிலா.

"பாட்டி?" என்று உமா கூப்பிட்டாள்.

"ஏதாவது வேணுமா அத்தே?" அப்புசாமி குனிந்து அவள் காதோரம் கேட்டார்.

ராமநாதன் வாசல் திண்ணையில் இருந்தான். அவனுக்கொரு துணையே போல் அமர்ந்திருந்தான் சுப்பிரமணி. அகிலாவின் பெண் அவனுடன் நன்றாக ஒட்டிக் கொண்டு "செஸ் விளையாடலாம் வரியா?" என்று கேட்டுக்கொண்டிருந்தது.

வாழ்விலொரு முறை நேர்ந்தே தீரும் அந்தக் கணத்தின் தருணத்தைத் தரிசிக்கக் கூடியிருப்பது போல் எல்லோருமே சொற்களற்று உணர்ந்தார்கள்.

நீலுப்பாட்டியின் சுவாசம் சீராக இல்லை. திடீரென்று வேகம் கொண்டும் அதே வேகத்தில், இல்லாததே போலவும் மாறி மாறிக் கசிந்து கொண்டிருந்தது அவள் மூச்சு.

டேபிள் ஃபேனின் விசையை யாரோ கூட்டி வைத்தார்கள். ஒரு தம்ளரில் பாலும் சிறு ஸ்பூனும் எடுத்துக் கொண்டு அகிலா வந்தாள்.

'என் தாயே! என் தாயே!'

விட்டு விட்டு உச்சரித்துக் கொண்டிருந்த பாட்டியின் உதடுகள், தவளையின் குரல் வளையைத் தோண்டியெடுத்து அவள் தொண்டையில் நட்டாற் போலக் கமறியது குரல்.

வாசலில் ஸ்ரீதர் சாஸ்திரிகளும்



# அலை உறங்கும் கடல்

22

எது பேசியும் பொருந்தி வராதத் தருணத்தை அப்புசாமி உணர்ந்தார்.

"போறச்சே சேதுமாதவர் சந்நிதில தீர்த்தத்துக்குச் சொல்லிட்டுப் போறேன். சாயந்திரம் வந்து பார்க்கறேன்" என்று நீலகண்டன் கூறிவிட்டு, "கிளம்பு" என்றார் ஸ்ரீதரனைப் பார்த்து.

அப்புசாமி மீண்டும் உள்ளே வந்த போது நீலுப்பாட்டி உறங்கத் தொடங்கி இருந்தாள்.

முதலில் இருளாகத்தான் புலப்பட்டது நீலுப்பாட்டிக்கு. விரைவில் அந்தகாரம் பழகி, சூட்சுமமான ஒளிப்பாதையொன்று புலனானது. நடக்க ஆரம்பித்தாள்.

'என் தாயே! என் தாயே!' நீ என் கையைப் பிடித்து அழைத்துச் சென்று கொண்டிருக்கிறாய். பழகியதொரு நாய்க் குட்டி போல் நான் உன்னுடன் வருகிறேன். என் பாதையும் அதில் புலனாகும் ஒளியும் சென்றடையும் இடமாகவும் நீயே இருக்கிறாய்.

பிறவியின் பெருங்கடல் எல்லை தாண்டி விளிம்பில் வந்து நின்று கொண்டிருக்கிறேன். என் நினைவுகளால் உன்னை ஆவாஹனம் செய்கிறேன். உன் பீறிடும் கருணையில் என்னைக் கரைத்துவிடு.

"என்னமோ சொல்றாடி!" என்றாள் உமா.

"தாகமெடுக்கறதோ என்னமோ? அந்தப் பால் தம்ளரை எடேன்?"

"ஃபேன் காத்து குளிர்றதான்னு தெரியலை. எதுக்கும் போத்தி விடலாமா? அந்தக் கறுப்பு பீரோ மேல ஒரு கம்பளி இருக்கு பார்."

நீலகண்ட சாஸ்திரிகளும் வந்து சேர, அப்புசாமி எழுந்து வெளியே வந்தார்.

"இன்னிக்கு ஆயிடுமா?" என்று நீலகண்டன் கேட்டார்.

"அப்படித்தான் தோணறது" என்றார் அப்பு சாமி.

"கோவில் ஆபீசர் காதுல போட்டு வெக்கணுமே?" என்றான் ஸ்ரீதர் சாஸ்திரிகள்.

"ஆமாம்" என்றார் அப்புசாமி.

"காசு இருக்கா?"

அப்புசாமி திரும்பி, ராமநாதனைப் பார்க்கவும், அவன் இறங்கி வந்தான்.

"சௌக்கியந்தானே?" என்று நீலகண்டன் அவனைப் பார்த்துக் கேட்டார்.

"ஆமாம் மாமா. ஆத்துல மாமி சௌக்கியமா இருக்காளா?" என்று அவன் பதிலுக்குக் கேட்டான்.

பா. ராகவன்

அப்புச்சா ஒரு குழந்தை. ஆதரவற்றவன். தன் பாதுகாப்பின்மையை மனப்பூர்வமாக உணர்ந்தவன். இரு பெண் குழந்தைகளே அவன் பயங்களின் மூலகாரணம். அவர்களின் நல்வாழ்வே அவனது பரிபூரண சுதந்தரம். நீ இனி அவன் துணையாக நில்; நேற்று வரை நானிருந்த இடம் இனி உன்னுடையது.

"அப்பா, உங்களுக்குப் பசிக்கலை? ஒரு காப்பியானா சாப்பிடுங்களேன்?"

"எனக்கு வேணாம். வெளில ராமு இருக்கான். அவனைக் கேள். பாவம், அவனும் கார்த்தாலேருந்து எதுவும் சாப்பிடலை."

உமாவைப் போலொரு பெண்ணை இந்தத் திவெங்கிலும் தேடினாலும் பார்க்க முடியாது. கை, கால் முளைத்ததொரு சிறு பறவை அவள். தாயே, அவள் சிறகுகளைக் கோதித் தருவது தவிர தயவு செய்து வெட்டி விடாதே.

"மாமா, யாரோ வந்திருக்கா பாருங்கோ."

"நம்ம சேதுமாதவ சாஸ்திரிகள்டா ராமநாதா. ஞாபகமில்லியா?"

"வாங்கோ. சௌக்கியமா?"

"பாட்டிக்கு என்ன ஆச்சு?"

என் இறைவா, உமாவின் காதல் எனக்குச் சற்றும் விளங்கவில்லை. அவள் முறிந்து போகாதிருக்க நீ பொறுப்பேற்றுக் கொள். நிழல் படர்ந்த உன் கருணையின் மேற்கூரை அவள் மீதும் படருவதாக.

"ஏன்ப்பா, டாக்டரை வேணும்னா இன்னொரு வாட்டி வந்து பார்க்கச் சொல்லேன்?"

"அவசியமில்லைன்னு அவரே சொல்லிட்டாரேடி? நாம என்ன பண்ண முடியும்?"

"மாமா, கோடி தீர்த்தம் கொண்டு வரச் சொல்லுங்கோ."

"நீலகண்டன் அனுப்பறேன்னாரே."

"பால் வண்டிக்காரன் யாராவது தனுஷ்கோடிப் பக்கம்போறானான்னு கேளுங்களேன். சேதுலேருந்து கொண்டு வந்து ரெண்டு சொட்டு நெஞ்சுல விட்டா, அடங்கிடும்."

"பார்க்கறேன்."

என் கனவுகளில் நீ காட்டிய சங்கேதங்களின் அர்த்தம் உதிர்ந்து விட்டது. நான் கனவுகளில் வாழ்ந்து கொண்டிருந்ததாக நம்பிக் கொண்டிருந்தேன். என் கனவுகள் இதுகாறும் என்னைத் தின்று வந்திருப்பதை இப்போது உணருகிறேன். நல்ல கனவுகளை என் குழந்தைகளிடம் நான் விதைத்ததில்லை இதுவரை. ஆழ்ந்த என் பெருங்கனவுகளின் அச்சமூட்டும் பக்கங்களை மட்டுமே எடுத்துக் கூறி மிரட்டி வந்திருக்கிறேன். என் தாயே, நீ அறிவாய். நான் பூச்சாண்டி காட்டிச் சோறூட்டும் பணி செய்த செவிலித் தாய். ஆனால் பெற்றவள் நீயல்லவா? உன் கருணையின் சாயை என்னிடமில்லை. நீ பூரணம். நீ அமிர்தம். நீ தோஷமற்ற நீர்ப்பரப்பு. பொங்கி வா. தணித்துவிடு.

"வாயை மெதுவா திறந்து, ஸ்பூனை நீட்டுடி அகிலா. ஜலம் சிந்தறது பார். நேரா தொண்டைக்கு இறங்கணும்."

"ஹார்லிக்ஸ் குடுக்கலாமாப்பா?"

"பேதியாச்சுன்னா?"

"கார்த்தாலேருந்து அரை தம்ளர் பாலுக்கு மேலே உள்ளே இறங்கலை."

"மாமா, சேது தீர்த்தம் வந்திருக்கு."

"கொண்டு வா."

"பாட்டி சமுத்திரத்தை விழுங்கறா."

"சமுத்திரம் விழுங்கப் போறதுன்னு சொல்லிண்டிருந்தவ."

அம்மா! நீ மந்திரங்களின் ஒலியில் நின்றாலும் அதன் பொருளிலல்லவா உன் ஆத்மா நிற்கிறது? நீ அழிவற்றவள். ஆன போதிலும் மாசுறலாமா உன் மேனி? சந்நிதியில் உன்னைக் காணும்போதெல்லாம் பதைக்கிறது என் நெஞ்சம். அதென்ன மூக்கின் மேலொரு கரும்புள்ளி? ஐயோ, என் மகன் வைத்தானா? நெற்றியில் ஒரு கீறல். கடவுளே, எதனாலிது ஏற்பட்டது? தோற்றத்தின் பொலிவுக்கு ஒரு நாளும் உன்னிடம் குறைவில்லை என்பார்கள். ஆனபோதிலும் பர்வதவர்தினி, என் விழிகளுக்கு மட்டுமேன் நீ குறைபட்டுத் தென்படுகிறாய்? என் மக்கள் உன்னை மூளியாக்க முயல்வதை நான் எப்படிச் சகிப்பேன்? என் கோபம் சாபமாகிறது. சாபத்தின் சூடு, அது நிகழ்ந்து விடுவதிலாகிறது. நானென்ன பிறவி! இந்த மண்ணின் ஒரு தூசு கொடுக்கும் சாபமும் பலித்துவிடுகிற வேளையல்லவா இது! சாபங்களால் இப்பூமி புதையுமுன் நீ தூக்கி



"பொது வாழ்வில் தூய்மைங்கறதைத் தலைவர் தப்பா புரிஞ்சுக்கிட்டாரு போல..."

"ஏன்? ஏன்?"

"ஒரு நாளைக்கு நாலுமுறை குளிக்கிறாரு!"

— வந்தவாசி பா. ஜெயக்குமார்

விடு. உன் சக்தி அபரிமிதமானது. செயலும் விளைவும் நீயேயானவள்.

"தள்ளி உட்காருங்கோ. மூச்சு எகிர்றது பார்."

"டாக்டரைக் கூப்பிடலாமேப்பா."

"சரி. நீ போய்ச் சொல்றியா?"

"நானா? நீ போ. இல்லை, அவளைப் போகச் சொல்லு."

"அகிலா, குழந்தையைக் கூட்டிண்டு கொஞ்ச நாழி வெளில போயிட்டுவா. அது ஏற்கெனவே பயந்துண்டிருக்கு. வராதவ வந்திருக்கற வேளையைப் பாரேன்."

தாயே, என் சிரிப்பு உனக்குக் கேட்கிறதா? எதை எண்ணிச் சிரிக்கிறேன் என்பது புரிகிறதா? இந்தப் பெண்ணைப் பார். சிறுமி. புடைவை கட்டிக் கொண்டால் ஆயிற்றா? இன்னும் பொக்கைச் சிரிப்புடன் இவள் என் மடியில் தவழ்ந்த காட்சிதான் புலனாகிறது எனக்கு. கண் மூடித் திறக்கும் நேரத்தில் காதலிக்கிறேன் ஒரு மீனவனை என்கிறாள்! மீனவனானாலென்ன. மனுஷன்தானே. ஆனால் துருவங்கள் உரசுகையில் உருவாகும் யுகப் பொறியின் தீக்கங்குகள் அவளைத் தாக்காதிருக்க நீ அருள் செய். அன்றொரு இரவு இவள் தகப்பனிடம் சூசகமாக இதைத் தெரிவித்துவிட்டேன். என் சொத்தை உயில் எழுதி வைப்பது மாதிரி. அவன் உணர்வாக நீயே ஆகிப்போ. உணர்ந்தபிறகு செயலிலும் நீயே நில். நீ காருண்யை. நீ தயாமாதா. நீயே ஜீவத்தடாகம்.

"என்னடாது அப்புச்சா! எதுக்கும் கலங்காதவன். நீயா கலங்கறே?"

"இல்லே நீலகண்டா. இருந்தவரைக்கும் அவ வயித்தெரிச்சலைத்தான் கொட்டிண்டேன். போறப்பவாவது நான் வருத்தப்படறேங்கறதைப் புரியவைக்கக் கையாலாகாதவனா இருக்கனேன்னுதான் பொங்கிப் பொங்கி வரது. என் இருபது வயசுலேருந்து கூட இருக்கா. இப்ப எனக்கு அறுபத்தொண்ணுன்னா என்ன ஆச்சு?"

"நாப்பதுக்கு மேல."

"ஆமா. ஒரு நாளானா இந்த நாப்பது வருஷத்துல அவ வாயால நான் சாபம் வாங்கிக்காம இல்லே."

"எதுக்கு சபிக்கணும்?"

"எதுக்கோ. அது அவ இயல்பு. காசு சம்பாதிக்க அலையறது பிடிக்கலையோ என்னவோ. வயிறுன்னு ஒண்ணு இருக்கே."

"அது சரி. அப்படிப் பார்த்தா ராமேசுவரத்துல எந்த பிராமணன்தான் ஒழுங்கு?"

"எது ஒழுங்குன்னே புரியலை. கர்மா பண்ணி வெக்கறது நம்ம பிழைப்பு. அதுக்கு சுத்திரிக்கா வாங்கிண்டா சரி; கேரட் வாங்கிண்டா தப்பும்பா."



"கா தலிக்கு தினமும் லெட்டர் போட்டேன்."

"என்ன ஆச்சு?"

"அவளுக்கும் போஸ்ட்மேனுக்கும் காதல்"

— எஸ். மோகன்

"நன்னாருக்கே. நான் ஒருத்தன்ட்ட மசால் தோசையே வாங்கிண்டு வான்னிருக்கேன்."

"அந்தக் காலத்து மனுஷி. ப்ச்."

"போறா போ. வெளில ஆயிரம் பேசினாலும் மனசுல கபடு வெச்சுக்காதவ. உனக்கு நல்லதுதான் நினைச்சிருப்பா. தேத்திக்கோ."

"அப்பா, சீக்கிரம் வாயேன். பாட்டி என்னவோ மாதிரி இழுத்துக்கறா!"

தாயே இன்று புரிகிறது. என் அச்சங்களே என் சூர்ப்பனகை. என் குழப்பங்களே என் அசுரர்கள். என் பால்யத்தின் பரிசுத்தமே என்னைச் சபரியாகவும் அணிலாகவும் உணரச் செய்திருக்கிறது. நான் விழையும் ஒரு புருஷார்த்தம் ராமனாக உருக் கொண்டது. அதை யாரிடமும் காணாத ஏக்கம் தானோ என் சாபங்களானது? சபிக்க நான் யார்? என் தீச்சொற்களே அன்று என்னைச் சூழ்ந்த ஊழித்தீயென உணர்ந்து விட்டேன். என் வாய் திறந்து புறப்பட்ட ஒரு சுடர்ப்பொறி சீறிச் சென்று பற்றிக் கொண்ட உருவம் என் மகனென்று ஏன் தோன்றியது அப்போது? பைத்தியக்காரி. அது நானே அல்லவா?

ஆ, இப்போது தெரிகிறது அவ்வுருவம்! வெகுதூரத்தில், இருளில் ஓர் ஒளிப்புள்ளியாகப் பற்றிக்கொண்டு... ஆஹா, என்ன ஜகஜ்ஜோதியாக நானே எரிகிறேன், நானே... நானே...

என் கனவுகளில் மிக மேலானதும் மிக சத்தியமானதுமான ஒன்றையே நீ எனக்கு இறுதியாக அருளியிருக்கிறாய். நீ முற்றும் உணர்ந்தவள். நீ தீ. நீ நீர். நீ காற்று. -நீ புவி. நீ ஆகாயம். நீ பூதங்களில் உறைந்திருப்பதோடு பூதங்களாகவும் நீயே இருக்கிறாய். உன் பரவசம் தென்றலாகிறது. உன் முகச் சுளிப்பு தீயாகிறது. உன் கனிவே புவி. உன் புன்னகையே ஜலம். உன் மனம் ஆகாயம். நீ நித்தியம். நீ சத்தியம். வா. வந்தென்னை ஆலிங்கனம் செய்து கொள். வா, வா, வந்து விட்டாயா? என்தாயே!

சட்டென்று அடங்கிப் போனாள்.

(அடுத்த இதழில் முடியும்)

# அரியணையில் அமர்த்துவோம்!

> "எங்களுக்கும் சில குறைகள் உண்டு; இருந்தாலும் கூட்டணிக்குத் தலைவலியைத் தர மாட்டோம். பலம் சேர்க்கும் வகையில் செயல்பட்டுக் கலைஞரை ஐந்தாவது முறையாக அரியணையில் அமர்த்துவோம்."

ஒரு முழு பதவிக் காலத்தை முடிக்கும் தருவாயிலுள்ள கலைஞர் எந்தவித ஊழல் குற்றச்சாட்டுக்கும் ஆளாகாத முதல்வராகத் திகழ்கிறார். 1996ல் முடிந்த ஜெ. ஆட்சியின் போது டான்ஸி ஊழல் உட்பட அவர் மேல் எத்தனைக் குற்றச்சாட்டுக்கள்! ஆனால் கலைஞர் அரசை எதிர்த்து தினசரி அறிக்கைகள் விடும் ஜெயலலிதா, குறிப்பாக கலைஞரை ஊழல் குற்றம் சாட்டி எந்தவித அறிக்கையும் வெளியிட முடியவில்லை. மற்றபடி ஒரு சில அமைச்சர்கள் மீதோ அல்லது ஒரு சில அதிகாரிகள் மீதோ புகார் வருவது என்பது தவிர்க்க முடியாதது. ஆனால் அவையும் எந்தவித முகாந்திரமும் இல்லாமல் இருக்கின்றன என்பது வெளிப்படை.

இந்த ஐந்து வருட காலத்தில் கலைஞர் அரசின் சாதனைகள் பல. குறிப்பாக கல்வித் துறையைக் கணினி மயமாக்கல், டைடல் பார்க், உழவர்சந்தை, மீனவர் சந்தை, சமத்துவபுரம், கிராமங்களுக்குக் குடிநீர் வசதி, சாலை வசதிகள், மினி பேருந்து வசதிகள், பாலங்கள், மேம்பாலங்கள், ஏரிகள் தூர் வாரப்படல் என்று தமிழக அரசு நிறையவே செய்துள்ளது. அப்படியென்றால் கலைஞர் அரசில் குறைகளே இல்லையா என்று கேட்க வேண்டாம். 'மக்களின் பிரச்னைகள் எல்லாம் தீர்க்கப்பட்டது' என்று சொல்ல நான் முயலவில்லை. மக்களின் எதிர்பார்ப்புகள் அதிகமாகிக் கொண்டே போகின்றன. எந்த அரசாக இருந்தாலும், மக்களின் குறைகளை ஐந்தாண்டு காலத்தில் ஒட்டு மொத்தமாகத் தீர்க்க முடியாது. ஆனால் மக்களின் குறைகளை முழுமையாக நிவர்த்தி செய்வதை நோக்கி அரசு நடை போட வேண்டும். இன்றைக்கு இந்தியாவில் உள்ள முதல்வர்களில் எழுத்தாற்றல், பேச்சாற்றல், நிர்வாகத்திறன், அறிவாற்றல் நிறைந்த முதல்வராகக் கலைஞர் விளங்குகிறார். நீண்ட அனுபவம் காரணமாக ஏற்பட்டிருக்கும் முதிர்ச்சியோடு, எல்லா தரப்பு மக்களையும் அரவணைத்துச் செல்கிறார்.

இதற்கு நேர் எதிராக ஜெயலலிதா, ஆணவத்தின் பிரதிநிதியாக, அகங்காரத்தின்

**எஸ். திருநாவுக்கரசு,**
பொதுச்செயலாளர்;
எம்.ஜி.ஆர் அண்ணா தி.மு.க

உச்சாணியில் இருந்து செயல்பட்டு வருகிறார். 1996ல் பெற்ற படுதோல்வி அவரது கண்களைத் திறக்கவில்லை. "நான் மீண்டும் ஆட்சிக்கு வந்தால் கலைஞரை ஆயுள் காலம் வரை சிறை வைப்பேன்" என்று அவர் திமிராகப் பேசியதைக் கண்டு தமிழக மக்கள் சிரிக்கிறார்கள். இந்திய மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம், 1953, பிரிவு 8(3)படி, ஊழல் புகாரின் பேரில் இரண்டாண்டுகளுக்கு மேல் சிறை தண்டனை பெற்றவர்கள் தேர்தலில் நிற்க முடியாது. அரசியல் சட்டம், தேர்தல் விதிமுறைகள் சட்டம், தேர்தல் கமிஷனின் நடைமுறைகள் மற்றும் நடப்பில் உள்ள விதிமுறைகள் ஆகியவற்றின் அடிப்படையில் ஜெ. தேர்தலில் போட்டியிடவே முடியாது. இவற்றை மீறி எந்த நீதிமன்றமும் விதிவிலக்கும் தர முடியாது. இப்படிப்பட்ட யதார்த்தமான நிலையில் 'ஆட்சிக்கு வந்தால் கலைஞரைச் சிறையில் தள்ளுவேன்' என்று ஜெயலலிதா பேசியுள்ளதைத் தலைக்கனம் என்றோ பைத்தியக்காரத்தனம் என்றோதான் எடுத்துக் கொள்ள முடியும்.

அ.இ.அ.தி.மு.க கட்சிப் பிரமுகர்கள் வேறு வகையான பிரசாரம் ஒன்றையும் செய்து வருகிறார்கள். ஒருவர் சட்டப் பேரவை அல்லது மேலவை உறுப்பினராக இல்லாத பட்சத்தில் அமைச்சராகவோ அல்லது முதல்வராகவோ பொறுப்பேற்றால் ஆறு மாத காலத்தில் இந்த இரண்டு அவைகளில் ஏதாவது ஒன்றிற்கு தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். எனவே ஜெயலலிதா தேர்தலில் போட்டியிட முடியாவிட்டாலும், அ.இ.அ.தி.மு.க. பெரும்பான்மை பலம் பெற்றால், அந்தக் கட்சி எம்.எல்.ஏக்கள் ஜெ.யை முதல்வர் பதவிக்குத் தேர்வு செய்வார்களாம். அவரும் ஆறு மாத காலம் எந்த அவையிலும் உறுப்பினராக இல்லாமல் முதல்வராக இருப்பாராம். இதுதான் அவர்கள் செய்துவரும் பிரசாரம். இது சரியான பகல் கனவாகத்தான் இருக்க முடியும். ஊழல் வழக்கில் தண்டனை பெற்ற ஒருவரை, தேர்தலில் முதல்வர் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொள்ள எந்த ஆளுநரும் அனுமதிக்க மாட்டார்கள்; அனுமதிக்கவும் முடியாது. எனவே ஜெ கட்சிப் பிரமுகர்களின் பிரசாரம் ஒரு ஏமாற்றுவேலை... இந்தப் பேச்சுக்களால் மக்களை ஏமாற்ற முடியாது.

எப்படிப்பட்ட பொய்ப் பிரசாரம் செய்தாலும், மலிவான தந்திரங்களில் ஈடுபட்டாலும்' ஜெ. மீண்டும் ஆட்சிக்கு வரவே முடியாது. கலைஞர் தலைமையில்தான் அடுத்த ஆட்சி அமையும். எங்கள் எம்.ஜி.ஆர். அ.தி.மு.கவைப் பொருத்தவரை சில மனக்குறைகள் இருக்கலாம். உதாரணமாக 1998 பாராளுமன்றத் தேர்தலில் தி.மு.க.விலிருந்து வெளிவந்த ம.தி.மு.க.வுக்கு ஜெயலலிதா ஐந்து இடங்கள் ஒதுக்கி, மூன்றில் வெற்றி பெற துணையாக இருந்தார். ஆனால் 1999ல் அ.இ.அ.தி.மு.க. விலிருந்து பிரிந்து வந்த எங்களுக்குக் கலைஞர் ஒரே ஒரு இடம்தான் தந்தார். இன்னொரு ஸீட் தந்திருந்தால்கூட நாங்கள் தேர்தல் கமிஷனில் அங்கீகரிக்கப்பட்ட கட்சியாக மாறியிருப்போம். அதேபோல் தேசிய ஜனநாயக முன்னணி அமைத்துப் போட்டியிடும்போது பா.ஜ.க தனிப் பெரும்பான்மை பெற்றாலும் எல்லா கட்சிகளுக்கும் அமைச்சரவையில் பிரதிநிதித்துவம் கொடுக்கப்படும் என்று தே.ஜ.மு.வின் அமைப்பாளர் ஜார்ஜ் பெர்னான்டஸ் வாக்குறுதி அளித்தார். ஆனால் அந்த வாக்குறுதி நிறைவேற்றப்படவில்லை.



"வாக்காளர் அடையாள அட்டை கட்டாயமாக்கப்படுவதை எதிர்த்து கண்டனப் பேரணி நடத்தப் போறாங்களாம்!"

"ஆளுங்கட்சியினரா? எதிர்க்கட்சியினரா?"

"கள்ள வோட்டுப் போடறவங்க சார்!"

— புளியரை கணேசன்

ஒரே ஒரு எம்.பி.தானே என்று எங்களை ஒதுக்கி விட முடியாது. ஏனென்றால் சோபா சிங், மேனகா காந்தி போன்றோர் அவர்கள் கட்சியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரே பிரதிநிதிதான், அவர்களுக்கு அமைச்சர் பொறுப்பு கொடுக்கப்பட்டுள்ளது. இந்த மனக்குறை எங்களுக்கு இருந்தாலும்கூட, கடந்த ஓராண்டாக வாஜ்பாய் அவர்களை நாங்கள் உறுதியாக ஆதரித்து வருகிறோம். முன்னேறும் தகவல் தொடர்புத் தொழில் நுட்பம், தனி நபர் வருமான உயர்வு மற்றும் உலக நாடுகள் மத்தியில் இந்தியாவுக்குத் தனி கௌரவம் ஏற்படும் வகையில் சிறப்பாகச் செயல்படுகிறார் பிரதமர். கூட்டணிக் கட்சிகளை அரவணைத்து ராஜதந்திரமாக செயல்படுகிறார் வாஜ்பாய்.

தே.ஜ. கூட்டணி தமிழகத்தில் சட்டமன்ற தேர்தலைச் சந்திக்க இருக்கும் நிலையில் சிறுபான்மை மக்கள் எந்தவித அச்ச உணர்வுக்கும் ஆளாகாத வகையில் செயல்படும் பொறுப்பு இருக்கிறது. குறிப்பாக பாபர் மசூதி - ராமர் கோயில் பிரச்னையில் ஆர்.எஸ்.எஸ், வி.ஹெச்.பி போன்ற அமைப்புகளின் அழுத்தத்துக்கு ஆட்படாமல், தேசிய ஜனநாயக கூட்டணியின் செயல்திட்டத்தில் சொல்லியிருக்கும்படி பிரதமர் நடக்க வேண்டும் என்று நாங்கள் எதிர்பார்க்கிறோம். "முஸ்லிம் மற்றும் சிறுபான்மை மக்களுக்கு ஏதேனும் பாதிப்பு வருமேயானால் கூட்டணியில் தொடர முடியாத நிலை திராவிடக் கட்சிகளுக்கு ஏற்படும்" என்று தமிழக தே.ஜ.கூட்டணி தலைவர் கலைஞர் சொல்லியிருக்கிறார். எங்கள் நிலையும் இதுவே!

வரும் சட்டமன்றத் தேர்தலில் இப்போதுள்ள கூட்டணியிலேயே தொடர்வோம். எங்களைப் பொருத்தவரை, பாராளுமன்றத் தேர்தலில் எங்களுக்கு ஏற்பட்ட குறைகள் நிவர்த்தி செய்யப்படும் வகையில் இடங்கள் கொடுக்கப்படும் என்று நம்புகிறோம். எப்படிப்பட்ட நிலையிலும் கூட்டணிக்குத் தலைவலியைத் தர மாட்டோம். பலம் சேர்க்கும் விதத்தில் செயல்பட்டுக் கலைஞரை ஐந்தாவது முறையாக அரியணையில் அமர்த்துவோம். ○

# காதல் பரிசு!

உலகத்திலேயே மிகவும் பொறாமைக்குரிய இளம் பெண் சூஸேன்கான்தான் என்று அடித்துச் சொல்லி விடலாம். பின்னே, கனவு நாயகன் ஹிர்த்திக் ரோஷனின் பிரத்யேக அன்பைப்



பெறுவதென்றால் சும்மாவா!

இளம் தம்பதி தனிக் குடித்தனம் போவதற்காக, சினிமா நட்சத்திரங்களின் 'பளபள' பங்களாக்கள் விரிந்திருக்கும் ஜூஹூ பகுதியில், வசந்தமாளிகை ஒன்றை, தாயார் சரைன்கான் உதவியுடன் அழகு செய்து கொண்டிருக்கிறாராம் சூஸேன்!

சுபாஷ் கய் இயக்கும் 'யாதீன்' படப்பிடிப்புக்கு லண்டன் கிளம்பும் முன், பங்களாவைப் பார்வையிட்ட ஹிர்த்திக், மனைவியின் கலாரசனையை மிகவும் பாராட்டி 'இன்ஸ்டன்ட் பரிசு' கொடுத்தாராம்.

பரிசு என்ன தெரியுமா?

உல்லாசமாய் ஒரு கார் டிரைவ்!

— அபி

# ஆழாக்குப் பட்டாணி!

விநோத்





## ரிமோட்

இசை விழாக்கள் வெள்ளமாய்க் கரை புரண்டு ஓடும் சீசன்களில் டீவிக்காரர்கள் சும்மா ஐந்து நிமிடம், பத்து நிமிடம் எதையாவது ஒளி பரப்பி விட்டுத் தாங்களும் சங்கீதத்துக்குச் சேவை புரிந்ததாகப் பேர் பண்ணிக் கொள்வது வாடிக்கை. அப்படியிருக்க விஜய் டீவியில் தனியாய் ஒரு இசை விழா நடத்தி, பதினைந்து நாட்களுக்குத் தினம் ஒரு மணி நேரம் ஒதுக்கியது ரொம்ப பெரிய தியாகம். கலைஞர்களின் பயோடேட்டாக்களை அட்டகாசமாய்த் தந்து, அவர்களிடம் நாலு வார்த்தை பேட்டியும் கண்டார்கள். To be what no other is and to do what no other can do - அதுதான் சிறப்பு என்பதை உணர்ந்தவர்கள்.

காயத்ரியின் வீணையையும், கதிரியின் ஸாக்ஸபோனையும், சஷாங்க்கின் குழலையும் பற்றி ஏராளமான விமரிசகர்கள் தாராளமாக எழுதிக்கொண்டிருப்பதால் அதையெல்லாம் பற்றி இங்கே சொல்வது கோயம்பேடு மார்க்கெட்டில் ஆழாக்குப் பட்டாணி விற்கிற மாதிரி இருக்கும். ஆனாலும் சேஷகோபாலனுக்கு மிருதங்கம் வாசித்த டி.கே. மூர்த்தியின் பேட்டியைப் பற்றிக் குறிப்பிட்டே ஆக வேண்டும். 'இரண்டு மணி நேசாலம் போனதே தெரியலே!' என்றார் அவர்.

தேசாலம்! ஆகாகா! தேசாலம்! தஞ்சாவூர் மண்ணுக்கே உரிய அந்தச் சொல்லைக் கேட்கையில் தேன் வந்து பாய்ந்தது காதினிலே!

பழைய பூவிலங்கு குயிலியா இவர்! எங்கிருந்து இத்தனை உற்சாகம் வந்தது? விஜய் பேட்டியில் என்ன மடமடா பேச்சு, என்ன படபடா கருத்து! 'கண்டிப்பாய்', 'நிச்சயமாய்', 'ஆமாம்,' 'கட்டாயம்', 'சந்தேகமில்லாமல்' என்ற சொற்கள் வாக்கியத்துக்கு வாக்கியம் அழுத்தம் திருத்தமாக வந்து கொண்டேயிருந்தன. சொல்வதையெல்லாம் ஆமோதிக்கிற மாதிரி கண்களில் ஒரு பிரகாசம், கைகளில் ஒரு விறுவிறுப்பு. பத்து வருடம்பாய் வாழ்க்கைக்குப் பிறகு she got an opportunity to start anew.

கல்யாணமாகிக் குழந்தைகளுடன் இருக்கும் ஆணைக் காதலிப்பதும் அவனுக்காக ஏங்குவதும் மிக மிகத் தப்பு என்று சவுக்கடி கொடுத்தவர், புகுந்த இடத்தில் மாமியாரிடமும் நாத்தனாரிடமும் பிரியம் காட்ட வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினார். பெண்ணிய இயக்கக்காரர்கள் அவர் பேச்சைக் கேட்டால் அவரைக் கழுவிலேற்றி விடுவார்கள்! 'வேலைக்குப் போகும் இடத்தில் எவ்வளவு பேரைக் காலைப் பிடிக்கிறோம், கையைப் பிடிக்கிறோம், கெஞ்சுகிறோம்? அதேபோலக் கணவன் வீட்டாரிடம் நடந்து கொண்டால் என்ன கெட்டு விடும்?' என்று பிற்போக்குக் கொடி ஏற்றினார். 'அங்கே கையைக் காலைப் பிடித்தால் பணம் கிடைக்கிறதே?' என்பதற்கு 'இங்கே பாதுகாப்புக் கிடைக்கிறதே?' என்று பனிச்செனப் பதில் அறைந்தார்.

நிகழ்ச்சி முடிந்தபோது, டீ.வி தொடர், குடும்பத் தொடர் இரண்டையும் வெற்றிகரமாக நடத்திக் கொண்டிருக்கும் ஒரு நடிகையைப் பார்த்தோம் என்ற உணர்வு ஏற்பட்டது.

அமெரிக்காவில் Bush யுத்தம் ஒருவழியாக முடிவுக்கு வந்துவிட்டது. சத்தியமங்கலம் காட்டின் Bush யுத்தம் எப்போது முடியுமோ தெரியவில்லை. ராஜ்குமாரை மீட்க 108 நாள் ஆயிற்று. This might take 1008 days.

எந்த வெளிநாட்டுக்கோ வீரப்பன் தப்பியோடி விட்டான் என்பதைச் சம்பந்தப்பட்டவர்கள் திரும்பத் திரும்ப மறுப்பதைக் கேட்டால், அவன் எப்போதோ தப்பி விட்டான் என்ற வதந்தி வலுவடைகிறது. One should not protest too much என்று இதனால் தான் சொல்கிறார்கள். ஒருவேளை அவன் இதுவரை ஓடியிராவிட்டாலும், ஓடுவதற்கு உதவி செய்கிறமாதிரி, அவனைப் பிடிப்பதற்காக வந்துள்ள படைகளின் விவரம், அவர்கள் வைத்துள்ள ஆயுதங்கள், தங்கியுள்ள கிராமங்கள், போன, போகவிருக்கும் பாதைகள் – அவ்வளவையும் அங்குலம் விடாமல் எல்லா டீ.வி சேனல்களிலும் காட்டுகிறார்கள்.

'போலீசாரின் வியூகங்கள் ரகசியமாக வைக்கப்பட்டிருக்கின்றன' என்று விஜய் டீவியின் சத்தியமங்கலம் நிருபர் கூறிய போது தோன்றிய கேள்வி : அழுவதா, சிரிப்பதா?

வினு சக்ரவர்த்தி ஒரு வேதாந்தி. 'ஏன் ஹீரோவாக வரவில்லை?' என்று எஸ்விவி பேட்டியாளர் கேட்டதற்கு, 'ரோசாப்பூ ரவிக்கைக்காரி என்ற என் முதல் படத்திலேயே நான் அப்பாவாகத்தான் வந்தேன். அதற்கப்புறம் ஹீரோவாகும் எண்ணமும் ஏற்படவில்லை. வாய்ப்பும் கிட்டவில்லை. கடவுள் நமக்கு எது விதித்திருக்கிறாரோ அதுதான் கிடைக்கும். கிடைத்ததைச் சிறப்பாகச் செய்யணும் அவ்வளவுதான்' என்றார்.

ஹீரோவாக வருவது லேசுப்பட்ட விஷயமல்ல என்று புதிய தலைமுறையினருக்கு வற்புறுத்திச் சொன்னவர், 'ஹேராம் படத்தில், ஒரு கட்டத்தில், வசுந்தராவுக்குக் கமல் ஒரு காதல் பார்வையைக் கண்ணால் காட்டுவாரே, அதுபோல் யாரால் செய்ய முடியும்?' என்றதோடு, ரஜினியைப் பற்றியும் குறிப்பிட்டார். 'எவ்வளவு கஷ்டப்பட்டு அவர் இன்று சூப்பர் ஸ்டாராக வந்திருக்கிறார், தெரியுமா? என் நாலு வயசுப் பேரனுக்கு ஒழுங்காய்த் தலை சீவி விட்டால், உடனே கலைத்துக்கொண்டு இதுதான் ரஜினி ஸ்டைல் என்கிறான். அப்படிப்பட்டத் தாக்கம் ஏற்படுத்தியிருக்கிறாரே ரசிகர்களிடம்!' என்றார்.

A sound mind in a sound body என்பது வினு சக்ரவர்த்திக்கு ரொம்பவும் பொருந்தும். ○



## நகர்வலம்

ஒருநாளும் இல்லாத திருநாளு மாதிரி முழியைத் திருடன் கணக்கா உருட்டிகினு சக்கரம் வண்டியிலே குந்திச்சு... "இன்னாபா... ஏதானா காத்து கறுப்பு அடிச்சிருச்சா"ன்னேன்?

'இந்த சக்கரத்தோட அடுத்த கட்ட பரிணாமம் துப்பறியும் நிருபர்'னு காலரைத் தூக்கி விட்டுக்கிச்சு...

"நீ முழிக்கும்போதே நெனைச்சேன்... வீரப்பன் ஒளிஞ்சுக்குற இடத்தைக் கண்டு புடிக்க போறியாக்கும்... அதுக்கு வேற ஆட்டோ பாருன்னேன்."



• கே. சுப்ரமணியன்



• ஏ.சி. மோகன்

"அட அது இல்லேப்பா... தி.நகர்லே ரொம்ப வருசமா அரிசி யாவாரம் செய்துகினு இருக்காங்களே கே. சுப்ரமணியம் அண்ட் கோ, அவுங்க, 'ஆந்திரா, தமிழ்நாடு, பொன்னி அரிசி வகைகள் கிலோ ரூபாய் பன்னிரண்டு மட்டும்'ன்னு போர்டு போட்டு வித்துகினு இருக்காங்க... அது நெசமா, இல்லே டுபாக்கூரான்னு கண்டுபிடிக்கப் போறேன்'னதும் எனக்கு வந்தது கோவம்...

"இன்னாப்பா டபாய்க்கிறியா... கோலிகுண்டு கணக்கா தொண்டைக் குழியிலே அடைச்சுக்கிற மோட்டா அரிசியே பதினைஞ்சு ருவா விக்குது. இருவது ருபா வித்துகினு இருந்த பொன்னி அரிசி பன்னிரண்டு ருவாக்கி தராங்கன்னு பீட்டர் வுடுறியா?"ன்னேன்.

"அதான்ப்பா எனக்கும் இடிக்குது? இன்னா... ஏதுன்னு கண்டுபுடிச்சி, கட்டம் கட்டாம வுடுறதில்லே! நீ நேரா அந்த கடைக்கி வண்டிய வுடுன்னதும் போக் ரோட்டுல இருந்த அவங்க கடைக்கு சுபால்ன்னு வண்டிய வுட்டேன். கடை ஓனரு கே. சுப்ரமணியனும், அவரு மகன் ஏ.சி. மோகனும் சக்கரதுக்கிட்டே மாட்டிக்கினாங்க.

"சென்னையில ஆயிரக்கணக்குல அரிசி வியாபாரிங்க இருக்கிறப்போ உங்களாலே மட்டும் பன்னிரண்டு ருவாய்க்கு எப்படி பொன்னி அரிசி விக்க முடியுது... இன்னா சார் ஏதானா மக்கிப் போன அரிசிய கஷ்டமர் தலியிலே கட்டிவுடுறீங்களா?''ன்னு சக்கரம் சிரிச்சிக்கிட்டே கேட்டுப்புடுச்சி. சுப்ரமணியம் சூரசம்ஹாரம் செய்யப்போற ஆளு கணக்கா கொதிப் பாருன்னு பார்த்தா... சீரியசா பதில் சொல்ல ஆரம்பிச்சிட்டாரு.

'கடந்த நாற்பது வருஷமா சென்னையில அரிசி யாபாரம் செய்றோம்... பதினஞ்சாயிரம் நிரந்தர வாடிக்கையாளர்கள், மூணு தலைமுறையா எங்ககிட்டே அரிசி வாங்கறாங்க... அவங்க ஒவ்வொருத்தருக்கும் ஒரு கோட் நம்பர் கொடுத்திருக்கோம்... அவங்க எந்த அரிசியைத் தொடர்ந்து சாப்பிடுறாங்கன்னு விவரம் தெரிஞ்சு வெச்சிருக்கோம். ஒரு குறிப்பிட்ட வாடிக்கையாளருக்கு இந்த மாசத்துக்கான அரிசி தேவைன்னா, அவர் கடைக்கு போன் செஞ்சு, தன்னோட நம்பரைச் சொல்லி, என்ன ரக அரிசி, எத்தனை கிலோ அரிசி வேணும்கிறதையும் சொல்லிடுவார்... தாம்பரம் வரைக்கும் கார், வேன், ஆட்டோவில நாங்களே டோர் டெலிவரி செய்திடுறோம். இதுவரைக்கும் அரிசி சரியில்லே, கல், மண் இருக்கு, நொய் இருக்கு, வண்டு, புழு தென்படுதுன்னு ஒரு கஷ்டமர்கூட

# சோறு வடிச்சு



• அரிசியும் சோறும்

சொன்னது கிடையாது. சாமான்களைச் சுத்தம் செய்யறதுக்குன்னே நிறைய பொம்பள ஆளுங்க வேலைக்கு வெச்சிருக்கோம். இங்கே விற்பனை செய்ற ஒவ்வொரு ரக அரிசியையும் ஆபீசர் ஒருத்தரு சமைச்சுப் பார்ப்பாரு. காலையிலே சமைச்சு ராத்திரி வரை சோறு எப்படியிருக்குன்னு பார்ப்போம்.. கடைக்கு நேரடியா அரிசி வாங்க வர கஷ்டமருங்களும் பிசைஞ்சு பார்த்து வாங்கிக்கலாம்.



• உசைனி

'இத்தனைத் தரத்தை பல வருஷமா மெயின்டைன் செய்து மட்ட ரக அரிசியை எப்படி எங்க கஷ்டமருக்கு விற்போம்னு நினைக்கிறீங்க'ன்னு சுப்ரமண்யம் கேட்டதும் சக்கரம் எச்சில் விழுங்கி சமாளிச்சுட்டு அடுத்த அஸ்திரத்தை 'விஸ்க்'குன்னு வீசுச்சு.

"இத்தனை தரமா கொடுக்குறேன்னு சொல்றீங்க. அப்புறம் எப்படி பொன்னி மாதிரி உயர் ரக அரிசியைப் பன்னிரண்டு ரூபாய்க்குக் கொடுக்க முடியுது?" இதுக்கு ஏ.சி மோகன் பதில் சொன்னாரு.

'தமிழ்நாட்லே உற்பத்தியாகற அரிசி வெளி மாநிலங்களுக்குப் போகக் கூடாதுன்னு அரசாங்கம் சில் வெச்சுட்டாங்க. அதேமாதிரி வெளி மாநில அரிசி எவ்வளவு வேணும்னாலும் இங்கே வரலாம்னு சொல்லிட்டாங்க... இரண்டு வருஷமா நெல் விளைச்சலும் அதிகம். வெளி மாநில மொத்த வியாபாரிங்களும் படையெடுக்கறாங்க. இதனாலே இங்கே அரிசி நிறைய தேங்கிப் போயிடுச்சி.'

'அப்போ உங்ககிட்டே ஸ்டாக் இருக்குற வரைக்கும் விலை குறைச்சு போடுவீங்களா'ன்னு கேட்டதும் "நாற்பதாவது வருஷ நிறைவு விழாவை முன்னிட்டு, ஜனவரி பதினைஞ்சாம் தேதி வரைக்கும் இந்த விலை குறைப்பு அறிவிச்சிருக்கோம்.. எங்களுக்குச் சொந்தமா அரிசி மில் இருக்கறதால இந்த விலைக்குத் தர முடியுது'ன்னு அவர் முடிச்சதும் சக்கரம் மொவத்துல ஒரு கிலோ அசடு வழிஞ்சது... அதை வெளியே வந்து துடைச்சுக்கிட்டு 'விர்'ன்னு வந்துட்டோம்.

# அரிசி ஜாக்கிறதுங்க!

'ஆ.. ஊ'ன்னு அடுத்த ஊருக்குக் கேக்கறாப்புலே கத்திகினு சுராத்தே போடுவாரே நம்ம ஷேஹான் உசைனி.. அவரு நல்லா ஓவியம் வரீவாரு தெரியுமா'ன்னு சக்கரம் கேட்டதும்... 'அடிக்கடி பர்மா பஜாருல பூந்து திருட்டு வீடியோ, சிடியைப் போலீசுக்குப் பதிலா அள்ளிகினு வருவாரே அந்த உசைனியா'ன்னு கேட்டேன். 'அட, ஆமாம்பா அவரேதான்.. பதினைஞ்சு வருஷமா அவரு வரைஞ்ச எல்லா ஓவியத்தையும் லலித் கலா அகாடமியில கண்காட்சியில வச்சியிருக்காரு. வா, ஒரு லுக் உட்டினு வருவோம்'ன்னு சொன்னதும் எனக்கு ஆர்வம் குப்புன்னு பத்திகிச்சு.

போயி பாத்தா, வாயடைச்சுப் போச்சி.. அம்புட்டு ஓவியம்... ஒவ்வொரு விஷயத்தையும் காட்டி சக்கரம் வெளக்கி சொன்னதும்தான் தெரிஞ்சுது உசைனி ஓவியத்துலே பெரிய ஆளுன்னு...

பிரேயரு சிர்ஸ்ன்னு பிராத்தனை பண்ணுற கை, தலை, மனுசன், இயற்கை, கூட்டு பிராத்தனை, இப்படி கண் கலங்கிப் போச்சுப்பா.. அம்மாம் ஃபீலிங் கிடைக்குது.. உதட்டுச் சாயத்துல கூட ஓவியம் வரைஞ்சிகிறாரு... நம்ம தொப்பை கணபதியை பலவிதமா வரைஞ்சி அசத்திகிறாரு... இப்படி ஓவியத்தப் பாத்து மயங்கினு இருந்தப்போ தோள் மேலே இரும்பு மாதிரி ஒரு கை பட்டுது. திரும்பிப் பார்த்தா நம்ம உசைனி!

சக்கரத்தை ஸ்பீடா வெளியே இட்டுகினு ஓடியாந்துட்டேன்.

— மீண்டும் சந்திக்கும் வரை
மீட்டருக்கு மேல் கேட்காத ஆட்டோ
செல்வம்

# விரைந்து ஓடிய

# வெற்று எஞ்சின்!



'இவனாரோ...?' என்று காயத்ரி கிரீஷ் காம்போதியில் பாடியபோது, உண்ட மயக்கத்திலிருந்த மியூசிக் அகாடமி ரசிகர்கள் உசுப்பப்பட்டு, பழைய நினைவுகளில் மூழ்கிப் போனார்கள். அந்தப் பாடலின் நாயிகா பாவம் முழுமையாகவும் பக்தி ரஸம் சாரமாகவும் வெளிப்படுத்தப்பட்டிருந்தால் கைதட்டல் இன்னும் எத்தனை பலமாக இருந்திருக்கும்!

காயத்ரி கிரீஷிடம் ஒரு நிதானம் தெரிந்தது. ஆனால் நிதானத்துக்குரிய கனமும் கச்சிதமும் கைவராததால் கச்சேரியில் பல விஷயங்கள் எடுபடவில்லை.

கல்யாணி அடதாள வர்ணத்துடன் பளிச்சென்று ஆரம்பித்த நிகழ்ச்சி, 'கணபதி தாளை கருத்திடை' வைக்க முயன்ற போது பிருகா நெடி அதிகமாகி பயமுறுத்தியது.

பின்தொடர்ந்த வசந்தா ஆலாபனையில் அந்த நெடி அடங்கிவிட்டது. ஆலாபனை அமைப்பில் நேர்த்தி இருந்தாலும் சஞ்சாரங்களில் துல்லியமில்லாததால் காதைத் தாண்டிப் போய் மனத்தைத் தொடவில்லை. 'ஹரிஹர புத்ரம்' – முத்துஸ்வாமி தீக்ஷிதரின் 'டாபிகல்' கீர்த்தனை, காத்திரம் இருந்த அளவுக்கு பாவம் இல்லை. கற்பனை ஸ்வரங்கள்...? நீளமிருந்த அளவுக்கு சுவாரஸ்யமில்லை.

இந்த ஏற்றத் தாழ்வு நிகழ்ச்சி நெடுக தொடர்ந்தது. 'சலமேலரா', (மார்கஹிந்தோளம்) 'சரஸ்வதி' என்று கொஞ்சம் விறுவிறுப்பு பரிமாறிவிட்டு, 'இவனாரோவுக்கு'ப் போனவர் அதன் பிறகு கரஹரப்ரியாவைப் பிடித்துக் கொண்டார்.

மழுப்பலில்லாத தீர்க்கமான ப்ருகா, ரவை சஞ்சாரங்கள் என்று ஏகே 47 ரக ஆயுதங்கள் இருந்தும் காயத்ரியிடம் கரஹரப்ரியா பணியவில்லை. ராகம், தானம், பல்லவி முடிந்த பின்னரும் பாடப்படாத கரஹரப்ரியா ஏராளமாக மிச்சமிருந்தது.

கல்யாணி சங்கர் வயலினிலும் நெய்வேலி ஸ்கந்தசுப்ரமண்யம் ம்ருதங்கத்திலும் ஒத்துழைப்பு வழங்கினார்கள்.

கர்னாடக சங்கீதமா? ஹிந்துஸ்தானியா? இல்லை லைட் கிளாசிகலா? ஜாஸ்...? சினிமா இசை...? – கணேஷ் குமரேஷ் வயலினில் எதை வாசிக்கிறார்கள் என்று புரிவதற்குள் கச்சேரி முடிந்து விட்டது.

எந்த நேரத்திலும் இவர்கள் கச்சேரியில் என்ன ரகமும் கேட்கிறது!

ஆபோகி வர்ணத்தில்தான் ஜாலை அள்ளித் தெளித்தார்கள் என்று பார்த்தால் 'சங்கரி சங்குரு'வில் சாவேரியின் சௌக்யத்தைத் திடீரென்று விரட்டியடிக்கும்



• கணேஷ் - குமரேஷ்

# தும்புரு

ஜாஸ் தூவல்!

அவ்வளவு ஆசையாயிருந்தால் தனியே ஒரு 'ஜாஸ்' கச்சேரி பண்ணிவிட்டுப் போகலாமே ஐயா!

வராளியில் வாய்ப்பாட்டு ஆரம்பித்தார் குமரேஷ்! 'ஆடிய பாதம் கதியென்று எண்ணி...' ஜாஸ் புகுத்த முடியாததால் கொஞ்சம் இளைப்பாற முடிந்தது.

ரீதிகௌளையில் அழகான கற்பனைகளுக்கு மிகையால் (எக்ஸாஜரேஷன்) மேக்-அப் போட்டு உலாவவிட்டு வித்தை காட்டி, 'த்வைதமு சுகமா' கிருதியை அனுபல்லவி தொடங்கி வாய்ப்பாட்டாக வழங்கி, கற்பனை ஸ்வரத்தைக் கதறவிட்டு...

தனியில் கொஞ்சம் தணித்தார் திருச்சூர் நரேந்திரன். ரவிச்சந்திரனின் கடம்தான் ஒலிபெருக்கியை விழுங்கி விட்டது போன்ற விசித்திர ஒலிகள் எழுப்பியது. ஒலிபெருக்கி அமைப்பாளர் என்ன செய்து கொண்டிருந்தார்?



• காயத்ரி வெங்கட்ராகவன்

லதாங்கி ஆலாபனை. வற்றல் குழம்போடு சப்பாத்தி போல் திடீரென்று ஹிந்துஸ்தானி மோஸ்தரில் அதே ராகம். இப்படியே பல்லவி முடித்து ராகமாலிகை ஸ்வரம் முழுதும் கூட்டாஞ்சோறு விருந்து.

ஒரு சூப்பர்மார்க்கெட் அளவுக்கு சரக்கு இருக்கிறது சகோதரர்களிடம். அதைக் காட்சிப் படுத்துவதிலேயே கவனம், திறமை, நேரம் எல்லாம் செலவாகிப் போக, பெட்டிகளைக் கழற்றி வைத்துவிட்டு டிராக்கில் விரையும் வெற்று எஞ்சினாக கச்சேரி ஓடி முடிந்து விட்டது.

ஐஸ்க்ரீம் இனிமையெல்லாம் கிடையாது. ஐந்தரை கட்டையில் நல்ல காத்திரமான வெண்கலக் குரல். காயத்ரி வெங்கட்ராகவன் இசையிலும் அந்த காத்திரம் நிறைவாக இருக்கிறது.

'எவரனி நின்னே' (தேவாம்ருதவர்ஷிணி)யை அனுபவித்து, சங்கதிகளின் விசேஷ வேறுபாடுகள் வெளிப்படும்படி பாடிய சிறப்பு;

பூர்விகல்யாணி, தோடி ஆலாபனைகளில் வெளிப்பட்ட ராக பாவம்;

துரிதப் பிரயோகங்களை மழுப்பாத தீர்க்கம்;

கற்பனை ஸ்வரங்களில் காட்டிய அழகுணர்ச்சி என்று நிறைவான நல்லம்சங்கள் கொண்ட சங்கீதம்.

• காயத்ரி கிரீஷ்

'மானவஜன்மதுடகு' (பூர்விகல்யாணி, புரந்தரதாஸர்) 'ஸ்ரீ கிருஷ்ணம் பஜமானஸ' (தோடி, தீக்ஷிதர்) கிருதிகளை அனுபவித்துப் பாடினார் காயத்ரி. வயலின் ஹேமமாலினியையும் ம்ருதங்கம் உமையாள்புரம் கல்யாணராமனையும் தமது முயற்சிகளில் ஈடுபடுத்தி அரவணைத்து நிகழ்ச்சியை நடத்திச் சென்றார். மிருதங்கம் ஒத்துழைத்தது. வயலின் சுருதி சேராத போதும் காயத்ரி தடம் மாறவில்லை.

இரண்டு மணி நேரத்துக்கும் குறைவான கச்சேரியில் (மியூசிக் அகாடமி) ஆலாபனைக்கு ஒதுக்கிய நேரம் அதிகமாகி விட, தோடி கீர்த்தனையையும் நிரவல் ஸ்வரத்தையும் குறுக்கு வழியில் விரட்ட வேண்டியதாகிவிட்டது. ஒரு கூஸ்பூனேயானாலும் நிரவல், ஆற்றலை வெளிப்படுத்தியது.

அனுபவம் அதிகரிக்க, இந்தக் குறைகள் நீங்கக்கூடும். ஆனால் குரலின் சிறு பிசிறுகளைப் பயிற்சி மூலமே சீராக்க முடியும். கனநயவேறுபாடுகளை கவனமான சுயவிமர்சனம் மூலமே புகுத்த முடியும். மனோலயம் பொருந்திய பாடகர் காயத்ரி வெங்கட்ராகவன். மெருகும் நயமும் கூடினால் முழுமையான கலைஞராக மலர்வார்.

**யா**ருக்கெல்லாம் அக்கா இல்லையோ கையைத் தூக்குங்க பார்க்கலாம்...? உங்க குறையைத் தீத்து வைக்கற மாதிரியான ஒரு புக் ரீசன்டா வெளியாயிருக்கு - பொன்மணி வைரமுத்துவோட கவிதைத் தொகுப்பு :

'மீண்டும் சரஸ்வதி' (சூர்யா வெளியீடு; விற்பனை : திருமகள் நிலையம், 16, வெங்கட் நாராயணா சாலை, சென்னை - 17). நிறைய்ய அன்பு, கொள்ளை, கொள்ளையா அக்கறை, அப்புறம் ஒரு மாதிரி லாஃப்டான அழ குணர்ச்சியோட ரொம்ப ஃப்ரெண்ட்லியா பேசற கவிதைகள். வேப்பமரம், எழுதற மேஜை, முகம் பார்க்கற கண்ணாடின்னு ஜடப் பொருள்களுக்கெல்லாம் லைஃப் கொடுக்கற பொயட்ரி. சில வரிகள் ரொம்ப டச்சிங்.

உடுத்தாமலே
மடித்துவைக்கும்
துணியாய்க்
காலத்தைச் சுருட்டி வீசி
வேடிக்கை பார்த்ததொரு
காலம்
(காலமே உனக்கு வணக்கம்)

வாழ்வைக் கையில்
வாரியெடுத்துக் கொண்டவள் போல்
மனமாரச் சிரித்தாள்
என் நெஞ்சில் ஒரு பன்னீர்மரம்
பூப்பொழிந்தது!
(வகுப்புக்கினிக்கொரு வாழ்த்து)

- இது மாதிரி அழகான வர்ணனைகள்

ஆயா
கிள்ளி எடுத்தாலும்
அள்ளி எடுத்தாலும்
அமைதி காத்து விடு
பொழுதுக்கும் சிணுங்காமல்
புட்டிப்பால் உதைக்காமல்
போட்ட இடத்தினில் நீ
சித்திரமாய்க் கிடந்துவிடு
(கண்வளராதே கண்ணே)

- இப்படி ஐரனி ததும்பற வரிகளும் இருக்கு.

எல்லாத்துக்கும் மேல அழகானது மேஜை பத்திய கவிதைதான். (உடன்பிறப்பு)

"நான் பார்க்கும்போதெல்லாம்
ஏதாவது எழுதேன் என்று
தொல்லை செய்யத் தொடங்கிவிட்டது

தூளியிலிருந்து அழும்பிள்ளையாய்
சதா அழைத்துக் கொண்டிருக்கிறது
இந்த சின்ன ஜீவன்..."

அப்படின்னு மேஜையைப் பத்தி எழுதும் போது, கவிஞரோட எழுத்து ஆர்வத்துக்கும் நடைமுறைக்கும் இருக்கற இடைவெளி எவ்வளவு மறைமுகமாக சட்லிடியோட கன்வே ஆகுது பாருங்க. தலைப்புக் கவிதையும் அதையேதான் கன்வே பண்ணுது. அவங்களுக்கு இன்னும் நிறைய எழுத வாய்ப்பும் நேரமும் கிடைக்கணும்னு மன்ற உறுப்பினர்கள் சார்பா கிரீட்டிங்ஸ். ஆல்ஸோ 'அக்கா'வோட அடுத்த தொகுதிக்கு ஒரு சஜஷன் : சில சுமாரான கவிதைகளை ஒரு நல்ல தொகுதிக்குள்ள நுழைய விடாதீங்க.

# கிள்ளி எடுத்தாலும், அள்ளி எடுத்தாலும்...

**க**ல்கில வந்த இரண்டு தொடர்கள் புத்தகமாகியிருக்கு.

நூற்றாண்டு விழா நாவல் போட்டியில முதல் பிரைஸ் வாங்கின 'உயிர்களைத் தேடித் தேடி' (தி. தா. நாராயணன், நர்மதா பதிப்பகம், 16/7, ராஜாபாதர் தெரு, சென்னை - 17)

திருமதி ஒய்.ஜி.பி. எழுதின 'மாதா, பிதா, மாணவன்' கட்டுரைத் தொடர். (வானதி, 13 தீனதயாளு தெரு, சென்னை - 17.)

'மாதா பிதா'வை இங்க்லீஷ்ல டிரான்ஸ்லேட் பண்ண மிஸஸ் ஒய்.ஜி.பி. தீவிரமா ஆள் தேடிக்கிட்டிருக்கறதா கேள்விப்பட்டேன். (மன்றத்து மெம்பர்ஸ் யாராவது இன்ட்ரஸ்டட்னா அப்ளை பண்ணுங்க!) ஸ்கூல் குழந்தைங்க இங்க்லீஷ்லதான படிக்க முடியும்ன்றாங்களாம்!

ஜெயேந்திரர் சுவாமி கையால புக் ரிலீஸ் ஆன அன்னிக்குக் கூட அனேகமா எல்லாருமே இங்க்லீஷ்லதான் பேசினாங்க. எல்லார் பேச்சையும் விட ரொம்ப சிறப்பா இருந்தது சி.பி.ஐ



• பொன்மணி வைரமுத்து

# சுமி

## சூப்பர் மார்க்கெட்



முன்னாள் டைரக்டர் சி.எஸ். ராமகிருஷ்ணனோட உரைதான்.

அகவுன்டபிலிடி, இன்டக்ரிடி, ரெஸ்பான்ஸிபிலிடி அப்படிங்கற தலைப்புல பேசினார். பதினஞ்சு நிமிஷம்தான். ஆனா லைஃப்புக்கும் மறக்க முடியாதபடி அழகா பேசிட்டார்.

வெறுமே சட்டப்படி சரியா நடந்துக்கிட்டா மட்டும் அது நேர்மைன்னு ஒத்துக்க முடியாது. எண்ணம், சொல், செயல்னு மூணுமே ஒண்ணு போல அமையணும். மனசாட்சிப்படி நடந்துக்கறதுதான் நேர்மை; இதைத்தான் வேத காலத்திலேருந்து, திருவள்ளுவர் டைம்லேருந்து திரும்பத் திரும்பப் பெரியவங்க சொல்லிருக்காங்கன்னு நிறைய கொடேஷன்ஸ் கொடுத்தார்.

ராமலிங்க சுவாமிகள் அருட்பாவிலேருந்து ஒரு லைன் சொன்னார் :

'உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று கூறுவார் உறவு கலவாமை வேண்டும்'

இதைச் சொல்லிட்டு, 'புறம் ஒன்று கூறுவார் பத்தி மட்டும் சொல்லி வள்ளலார் நிறுத்திட்டார். ஏன் புறம் ஒன்று செய்வார் பத்தி மென்ஷன் இல்லே...?'ன்னு வினா எழுப்பினார். ஆன்ஸர் இதுதான் : புறம் ஒன்று பேசுவாராயிருந்துட்டா அதிலேயே நேர்மை அடிபட்டுப் போயிடுது. அப்புறம் நடத்தை பற்றின கேள்விக்கே இடமில்லையே...!

இன்னிக்கு பொலிடிகல் சிசுவேஷனுக்கு ரொம்பப் பொருத்தமாயிருந்தது ராமகிருஷ்ணன் பேசினது.

இந்த வருஷத்துக்கான லாஸ்ட் 'காலம்' இது. மன்றத்தாருக்கு மனமார்ந்த ஆங்கிலப் புத்தாண்டு வாழ்த்துகள்! இருபத்தோராம் நூற்றாண்டு இனிமேல்தான் நிஜமா ஆரம்பிக்குது. பிரிட்டிஷ் பார்லிமென்ட்ல மனித ஜீனை ஆராய்ச்சி காரணங்களுக்காக குளோனிங் பண்ணலாம்னு சட்டம் கொண்டு வந்துட்டாங்க! நம்ம பார்லிமென்ட்ல ராமர் கோயில் அமர்க்களப்படுது. அமெரிக்கால அப்பாடின்னு ஒரு வழியா புது அரசு இயங்க ஆரம்பிக்கப் போகுது. உலகச் செய்தியெல்லாம் கிடக்க, பென்சில் பத்தி ஒரு புதுக் கவிதையோட இந்த வருஷத்துக் கோட்டாவை முடிச்சுக்கறேன்.




*சீவினால் சீக்கிரம்*
*கரைந்துவிடுமென்று*
*கூர் அதிகமில்லா*
*முனைகொண்டே*
*கணக்கு, குறிப்பு, கடிதம்*
*கஷ்டமான நேரத்தில் ஸ்ரீராம*
*ஜெயம்*
*எல்லாம் எழுதிய என்*
*பென்சிலை யாராவது*
*பார்த்தீர்களா?*
*கறுப்பு சிவப்புக் கோடுகளுடன்*
*கைக்குள் அடங்காத*
*குட்டைபென்சில்தான்*
*பெங்களூர் போனபோது,*
*நாலேகால் வயது அண்ணன் மகன்*
*'அத்தைக்கு' என்று ஆசையாய்த் தந்தது.*
*அடிமுனையில் அர்ஜுன் பால்பல்லால்*
*கடித்த*
*அடையாளம் கூட இருக்கும்.*

- இதை எழுதினது யாருன்னு கண்டு பிடிச்சீங்களானா உங்க போட்டோவோட பேரையும் என் படத்துக்குப் பக்கத்துல வெளியிடுவேன்.

ஹாப்பி நியூ இயர் அகெய்ன்!

**— சுமி**

# என்ன ரொம்ப கொழுப்பா?

● **இரத்தக் கொதிப்பு, மாரடைப்பு வருவதற்கு ஒரு முக்கிய காரணம் என்கிறார்கள் – ரத்தம் கொதித்தால் பிறகு நாம் எப்படி உயிர் வாழ்வது?**

இரத்தக் கொதிப்பு என்று சொல்வது தவறானது. இரத்தம் ஒருபோதும் கொதிப்பதில்லை. பாய்கிறது. இரத்தம் நாளங்களில் பாய்ந்து செல்ல அழுத்தம் தேவை. இந்த அழுத்தம் ஒரு கட்டுப்பாட்டில் இல்லாமல் போனால் அதிக இரத்த அழுத்தம் – அதாவது இயல்பைவிட அதிக வேகத்தில் இரத்தம் பாய்கிறது. இதைத்தான் இரத்தக் கொதிப்பு – ஹைபிளட் பிரஷர் என்று குறிப்பிடுகிறோம்.

● **இரத்தக் கொதிப்பின் அளவுகோல் எது? ஒருவருக்கு ரத்தக் கொதிப்பு என்று எதை வைத்துச் சொல்கிறோம்?**

சாதாரணமாக இரத்த அழுத்தம் இரண்டு வித பண்புகளைக் கொண்டது. ஒன்று இதயம் சுருங்கும்போது உண்டாகும் அழுத்தம். இதை systolic BP என்று சொல்கிறோம். இரண்டு, இதயம் விரியும்போது உண்டாகும் அழுத்தம். இதை Diastolic BP என்று சொல்கிறோம். சிஸ்டாலிக் அழுத்தம் 140 mmHgக்கு மேலும் டயஸ்டாலிக் அழுத்தம் 80 mmHgக்கு மேலும் இருந்தால் அதுதான் ரத்தக் கொதிப்பு.

● **இரத்தக் கொதிப்பிற்கு அறிகுறிகள் உண்டா?**

எந்த அறிகுறியும் தெரியாது. பல வருடங்களுக்கு எந்தக் கோளாறையும் பாதிக்கப்பட்டவரால் உணர முடியாது. ஆனால் தலையின் பின்புறம் வலி, மயக்கம், அடிக்கடி டென்சன், மூச்சு வாங்குதல் போன்ற பொதுவான அறிகுறிகள் தொடர்ந்தோ அல்லது விட்டுவிட்டோ ஏற்படும். எனவே நாற்பது வயதில் ஒவ்வொருவரும் இரத்த அழுத்தம் மற்றும் கொலஸ்ட்ரால் பரிசோதனை செய்வது நல்லது.

● **இரத்தக் கொதிப்பை நிரந்தரமாக குணப்படுத்த முடியுமா? இரத்தக் கொதிப்பால் இதயம் ஏன் பாதிக்கப்படுகிறது?**

இரத்தக் கொதிப்பைக் கட்டுப்பாட்டில் வைப்பதைத்தான் 'குணப்படுத்துதல்' என்று சொல்கிறோம். அதாவது 140/90 என்ற அளவில் அதைத் தொடர்ந்து கட்டுப்படுத்த வேண்டும். அதற்கு மருந்து கொடுக்கிறோம். டாக்டரின் அறிவுரை இல்லாமல் மாத்திரையைக் கூட்டுவதோ, குறைப்பதோ கூடாது. இரத்தக் கொதிப்பால், அதிக அழுத்தத்தோடு ஒவ்வொரு முறையும் இரத்தம் பாய்வதனால், இரத்தக் குழாய்களின் உட்சுவரில் அதிக கொழுப்புத் துகள்கள் படிகின்றன. இதனால் குழாயின் சுவர்கள் தடித்து, இரத்தப் பாதை சுருங்கி விடுகிறது. அதன் வழியே ரத்தத்தை எப்போதும்போல் சீரான வேகத்தில் செலுத்த, இதயம் கூடுதலாக வேலை செய்ய வேண்டியிருக்





• மாநாட்டு வாசலில் கொலஸ்ட்ரால் மிருகம்

கிறது. அதனால் இதயம் பாதிப்புக்குள்ளாகிறது.

**● இதய நோயை உண்டாக்கும் இரத்தக் கொதிப்பிற்குக் கொழுப்பு தான் காரணம் என்றால் கொழுப்புச் சத்து இல்லாமல் நாம் வாழ முடியுமா?**

கொழுப்புச்சத்து விஷம் அல்ல. மூளை வளர்வதற்கும், செயல்படுவதற்கும், நமது சுரப்பிகள் இயல்பாக பணியாற்றவும் உடலுக்குத் தேவையான எரிபொருள் சக்தியைத் தருவது கொழுப்புதான். கொழுப்பு இன்றி மனிதன் உயிர் வாழ முடியாது. ஆனால் அளவுக்கு அதிகமான கொழுப்புச் சத்து தான் இரத்தக் குழாய்களில் அடைப்பை ஏற்படுத்துகிறது. கொழுப்புச்சத்து ஒரு மிருகம் மாதிரி. நம் கட்டுப்பாட்டில் வைக்கக்கூடிய 'பெட் அனிமல்' போன்றது. ஆனால் அதன் கடிவாளத்தைத் தளர்த்தி விட்டால் கொடூர மிருகமாகி விடுகிறது.

**● இருதயப் பிரச்னைகளைத் தவிர்க்க என்ன வழி?**

முதலில் புகைபிடித்தலைத் தலை முழுக வேண்டும். புகை பிடிப்பதால், நாளமில்லா சுரப்பிகள் அதிகமாகச் சுரக்கின்றன. இதனால் உடலுக்குள் தீய கொழுப்புச்சத்து அதிகரிக்கிறது. இதுவே மாரடைப்பிற்கு முக்கிய காரணம். அடுத்து, நடைமுறையில் உடற்பயிற்சி இல்லாமல் போய்விடுவது பெரிய ஆபத்து. உடற்பயிற்சியில் தசைகள் சுருங்கி விரிகின்றன. இதனால் இரத்த அழுத்தம் கட்டுக்குள் இருக்கும். அடுத்து உணவுமுறை. அதிக கொழுப்புச் சத்துள்ள இறைச்சி உணவை - குறிப்பாக ஆட்டிறைச்சியை - தவிர்ப்பது நல்லது. அதிகமான மாவுச்சத்தும் ஆபத்தானதே. நார்ச்சத்துள்ள காய்கறி, பழங்கள் சிறந்த உணவு வகை. உணர்ச்சி வசப்படுதல், கோபம் போன்றவற்றைத் தவிர்த்து, தியானம், யோகா, மூச்சுப்பயிற்சி போன்றவற்றில் ஈடுபடலாம்.

சென்னை ராமச்சந்திரா மருத்துவக்கல்லூரியில் நடைபெற்ற இந்திய இருதய நிபுணர்கள் சங்கத்தின் 52-வது மாநாட்டில் பொதுமக்கள் எழுப்பிய கேள்விகளுக்கு மருத்துவர்கள் குழு அளித்த பதில்கள்.

தொகுப்பு: **சக்கரத்தாழ்வார்**
படம்: **வெங்கடேஷ்**

"அமிதாபச்சனின் 'க்ரோர்பதி' நிகழ்ச்சியில் ஜெயித்து கோடீஸ்வரன் ஆனபின், என் வாழ்க்கை மாறிவிட்டது; ஆனால் நான் மாறவே இல்லை" என்கிறார் ஹர்ஷ்வர்தன் நவாதே. கடந்த வெள்ளிக்கிழமை மாலை, 'கிராஸ் வேர்டு' புத்தகக் கடையில் சென்னை வாசிகளை நேருக்கு நேர் சந்தித்து உரையாட பிரத்யேகமாய்



வந்திருந்தார் ஹர்ஷ்.

க்ரோர்பதி ஆனபின், வாழ்க்கை எந்த அளவுக்கு மாறி இருக்கிறது என்பது பற்றி விரிவாகப் பேசினார்:

"தினமும் நூறு கடிதங்கள் வருகின்றன. தபால்துறை வேலை நிறுத்தம் புண்ணியத்தில், கொஞ்ச நாட்களாக நிம்மதியாக இருந்தேன். என் முழு விலாசம் தெரியாமல், கே.பி.சி. க்ரோர்பதி ஹர்ஷ்வர்தன் நவாதே' மும்பை என்று மட்டுமே எழுதினாலும், எனக்குக் கடிதங்கள் வந்து சேர்ந்து விடுமளவுக்கு நான் புகழ் பெற்றிருக்கிறேன் என்பது எனக்கு சந்தோஷத்தை அளிக்கிறது.

மும்பையில் இருந்தால், தினமும் பள்ளிகள், கல்லூரிகளில் என்னைச் சிறப்பு விருந்தினராக அழைக்கிறார்கள். மறுக்க மனமில்லாமல், ஒப்புக் கொள்ள வேண்டியிருக்கிறது.

இந்தியா முழுவதுமிருந்து, பல அழைப்புகள் வருவதால் நிறைய பயணம் செய்ய வேண்டியுள்ளது. விருந்துகளில் கலந்து கொள்ளக் கூப்பிடுகிறார்கள். அங்கே ஏகப்பட்ட பிரபல மனிதர்களை, சினிமா நட்சத்திரங்களைச் சந்திக்கிறேன். சில மாதங்களுக்கு முன்பு வரை நான் மிகச் சாதாரணமானவன். இன்று பிரபலங்கள் எல்லாம், என்னையும் தங்களில் ஒருவனாக நினைக்கிறார்கள்.

எனக்கு மாடலிங் வாய்ப்புகள் வருகின்றன. நானும் ஒப்புக் கொள்ளுகிறேன். சினிமாவில் நடிக்கவும் ஏகப்பட்ட வாய்ப்புகள். ஆனால், சினிமாவில் நடிப்பதில் எனக்குத் துளியும் ஆர்வமில்லை. சில விஷயங்களை, நான் நிதர்சனமாக உணர்ந்திருக்கிறேன். இந்த திடீர்ப் புகழ் தற்காலிக



கும் என்பதால், அவற்றை மறுத்துவிட்டேன். தவிர, இப்போது எனக்குத் திருமணம் செய்து கொள்வதிலும் ஆர்வமில்லை!

என்னைச் சந்திக்கிறவர்கள், தவறாமல் சில கேள்விகளைக் கேட்கிறார்கள். நானும் சலிக்காமல் பதில் சொல்லிக் கொண்டிருக்கிறேன். அவற்றில் மிக முக்கியமானது ஜெயித்த கோடி ரூபாயை என்ன செய்தீர்கள்? என்பதுதான். நான் ஜெயித்தது ஒரு கோடி ரூபாய் என்றாலும், அதில் நாற்பத்து ஐந்து லட்சம் ரூபாய் வரியாய்ப் போய் விட்டது. ஏறத்தாழ பாதி பணத்தை வரியாய் செலுத்தி விட்டது குறித்து எனக்கு வருத்தமே கிடையாது. நேர்மையான குடிமகனின் கடமை, வரியை ஒழுங்காகச் செலுத்துவதுதானே!

பணத்தை எங்களிடம் முதலீடு செய்யுங்கள் என்று சொல்லி, உள்ளூர் வங்கிகளும், அயல்நாட்டு வங்கிகளும் என்னை நச்சரித்தன. அவர்களைச் சமாளிப்பது பெரும்பாடாகி விட்டது. ஜெயித்த பணத்தை

# "கோடி ரூபாய்னா எவ்வளோ பெரிசு?"

மானது! அடுத்து இன்னொரு க்ரோர்பதி வந்துவிட்டால் கவனம் அவர்மீது திரும்பி விடும். எனவே, என் இலக்கு ஐ.ஏ.எஸ் தான் என்பதில் நான் தீர்மானமாக இருக்கிறேன். சில திருமண வரன்களும் வந்தன. ஆனால் இப்போது அனைவரின் ஆர்வமும் என் பணத்தின் மீதுதான் இருக்

ஜாக்கிரதையாக பிக்ஸட் டெபாசிட்டில் போட்டு வைக்கவே நான் விரும்புகிறேன். இதை முதலீடாக வைத்து பிசினஸ் ஆரம்பிப்பதில் எனக்கு இஷ்டமில்லை'' என்றார்.

''கோடி ரூபாய் கிடைத்திருக்கிறதே! உங்களுக்காக என்ன வாங்கிக் கொண்

டீர்கள்? பெற்றோருக்கு என்ன வாங்கிப் பரிசளித்தீர்கள்?"

"நிறைய ஊர்களுக்கு, நிகழ்ச்சிகளுக்குப் போக வேண்டியிருக்கிறது. எனவே நிறைய புது டிரஸ் வாங்கிக் கொண்டேன். என் பெற்றோருக்கு, புது கார் வாங்கித் தரப் போகிறேன்."

> **"ஜெயித்த ஒரு கோடி ரூபாயை என்ன செய் தீர்கள்?"**



"நண்பர்களுக்கு என்ன ட்ரீட்?"

"நான் தனியாக அவர்களுக்கு, ட்ரீட் ஏதும் தரவில்லை. பதிலாக, நான் அழைக்கப்படுகிற பார்ட்டிகளுக்கெல்லாம் அவர்களை உடன் அழைத்துச் செல்லுகிறேன். அவர்களுக்கு அது அதிக மகிழ்ச்சியைத் தருகிறது."

"மறக்க முடியாத அனுபவம்?"

அண்மையில் நான் ஹாங்காங், சிங்கப்பூர் போயிருந்தேன். மும்பை திரும்பியபோது இரவு மணி இரண்டு. வீட்டுக்கு வந்தால், என் அம்மா, அன்று காலை ஒன்பதரை மணிக்கு, கல்லூரி விழா ஒன்றுக்கு, சிறப்பு விருந்தினராகச் செல்ல வேண்டும், 'வற்புறுத்திக் கேட்டதால், உன் சார்பில் நானே ஒப்புதல் அளித்து விட்டேன்' என்று கூறினார். எனக்கோ களைப்பு; தூக்க கலக்கம். காலையில் எழுந்து, அவசரம் அவசரமாகத் தயாராகி அந்தக் கல்லூரிக்குப் போய் இறங்கினேன். என்னைப் பார்த்த மாணவர்களுக்கு ஒரே குஷி. லிஃப்ட்டில் சென்றபோது, ஒருவர், "நீங்கள் நாளைக்கும் வருவீர்களா?" என்று கேட்க, நானும் தமாஷாக "ஓ! வந்தால் போச்சு!" என்றேன். பிரின்ஸ்பால் அறைக்குப் போனதும் தான் தெரிந்தது. அந்தக் கல்லூரியின் விழா அன்றைக்கு இல்லை; மறுநாள் நடக்கவிருந்த விழாவுக்குத்தான் என்னைச் சிறப்பு விருந்தினராக அழைத்திருந்தனர் என்பது! எனக்கு ரொம்ப தர்ம சங்கடமாகிவிட்டது.

எனக்கு கோடி ரூபாய் கிடைத்த விவரத்தை நான் வாழும் குடிசைப் பகுதியில் யாரோ சொல்லி கேள்விப்பட்ட எங்கள் வீட்டு வேலைக்காரப் பெண்மணி, "ஐயா! உங்களுக்கு ஏகப்பட்ட பணம் கிடைச்சிருக்காமே?" என்று கேட்டார். 'நான் ஆமாம்! கோடி ரூபாய்!' என்றதும் அவர் கேட்டார்: "கோடி ரூபாய் என்றால் எவ்வளவு பெரிசு?"

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

படம்: **ஈஸ்வர்**



**"ரேவதியைப் போல சிம்ரன், ஜோதிகா, ரோஜா, தேவயானி பெயர்களிலும் ராகங்கள் உருவாக்க இசைக் கலைஞர்கள் பாடுபட வேண்டும் என்று கூறி இந்த இசை விழா வைத் துவக்கி வைக்கிறேன்!"**

**— புளியரை கணேசன்**

# வாத்யகலா வல்லவர்!

கீ போர்டு மிருதங்கம், கிடார், புல்லாங்குழல், வீணை... இப்படி, வயலின் தவிர, ஹவாயன் கிடார் உட்பட, சகல இசைக் கருவிகளையும் அநாயாசமாக இசைக்கிறார் அந்த இளைஞர். ஏ.ஆர்.ரகுமான், ரஞ்சித் பாரோட், லூயி பாங்க்ஸ் போன்ற இசையமைப்பாளர்களிடம் வாசிக்கிறார்.

கர்நாடக இசை, இந்துஸ்தானி, உருது கஸல் என எல்லாவற்றிலும் அபார ஞானம். நல்ல கற்பனை.

இன்னும் ஒரே ஒரு க்ளூ கொடுத்தால்போதும், கண்டு பிடித்து விடுவீர்கள்.

'தாஜ்மகால்' படத்தில் 'திருப்பாச்சி அருவாளை'ப் பாடலை பாடியிருக்கிறார்.

எஸ்! பாலக்காடு ஸ்ரீராம்.

சமீபத்தில் 'கர்நாடிகா ஆர்கைவல் சென்டர்' நடத்திய ஒரு வார 'வாத்ய-அனுபவ' இசை விழாவில் கீ போர்டு வாசித்தார்.

தன்னுடைய கீ போர்டில் - குறிப்பாக கமகக் குழைவுக்காக, பிட்ச்பெண்டரில் செய்திருக்கும் மாற்றங்களைச் சொல்லி, கர்நாடக இசை வாசித்துக் காட்டியபோது, ரசிகர்கள் பரவசத்தில் மெய் மறந்தார்கள். நாலைந்து தடவை கரகோஷம் ஆயிற்று. "ஏதேனும் சந்தேகம் இருந்தால் கேளுங்கள்!" என்று ஸ்ரீராம் சொன்னதும், "ஒரு சந்தேகமும் இல்லை. நீங்கள் வாசித்தாலே போதும்" என்று ரசிகர்கள் ஆரவாரம் செய்யவே, அசத்திவிட்டார் ஸ்ரீராம்.

**வி**ருகம்பாக்கம் சஞ்சய்காந்தி நகரில் ஸ்ரீராமைச் சந்தித்தபோது, திருவனந்தபுரத்தில் 'மாத்ருபூமி' இதழ் நடத்திய இசைப் போட்டிகளுக்கு நீதிபதியாகப் போய்விட்டுத் திரும்பியிருந்தார். (அமிதாப்பச்சன், மம்முட்டி என்று பிரபல நட்சத்திரங்கள்தாம் நடுவர்கள்!)

"இத்தனை வாத்தியங்களை வாசிக்கச் சொல்லித் தந்தது யார்? யார் குரு?"

"எல்லாம் நானாகக் கற்றுக் கொண்டதுதான். இத்தனை இசைக் கருவிகளுக்கும் தனித் தனியாக குருவைத் தேடிப் போக முடியுமா? அதனால் நானாகவே கற்றுக் கொண்டேன். 'குரு' என்று யாராவது இருந்தால், நாம் செய்யும் தப்பு அவருக்குத் தெரியும். உடனே திருத்திச் சொல்லித் தருவார். ஆனால் 'குரு' என்று யாரும் இல்லாத நிலையில், மானசீகமாக ஒரு 'குரு'வை நினைத்துக் கொண்டு வாசிக்க ஆரம்பித்து விட்டால், அவரே வழி நடத்துவார். நம் மனசில் உள்ள குரு எப்படி அந்த நடையை வாசித்திருப்பார் என்ற ஒரு கற்பனை உருவாகும். அது கிடைக்கிற வரை உழைக்கணும். நூறு சதவிகித திருப்தி கிடைக்கிற வரை சாதகம் செய்யணும்" என்றார் ஸ்ரீராம்.

'தக்ஷக்' இந்திப் படத்தில் ஏ.ஆர்.ரகுமான், ஒரு வித்தியாசமான குரலுக்காக ஸ்ரீராமைப் பாடக் கூப்பிட்டபோது, "அட, நீங்க இசைக் கருவிகள்தான் வாசிப்பீங்கன்னு நினைச்சேன். ரொம்ப நல்லா பாடறீங்களே!" என்று பாராட்டி சான்ஸ் கொடுக்க ஆரம்பித்தாராம். இப்போது 'மழமேகப் புறாவுகள்' என்ற மலையாளப் படத்துக்கு இசையமைத்திருக்கிறார்.

"**எ**ப்படி ஸ்ரீராமைப் பிடித்தீர்கள்? காதல் கல்யாணமா?" என்று திருமதி பேபி ஸ்ரீராமிடம் கேட்டபோது, முதலில் வெட்கப் புன்னகைதான் பதிலாக வந்தது.

"ஒரு முறை திருவனந்தபுரம் டீ.வி.யில் 'யுவதர்சன்' நிகழ்ச்சிக்காக போயிருந்தபோது சந்தித்தோம். நட்பு மலர்ந்தது. கல்யாணம் பண்ணிக் கொண்டால்தான் சிநேகம் தொடர முடியும் என்று சொன்னேன். இல்லை என்றால் கிசுகிசுப்பும், வம்புப் பேச்சுமாக போய்விடுமே. ஸோ, பெற்றோர்களிடம் சொல்லி, முறையாக நடந்த அரேஞ்டு மேரேஜ்தான்" என்று சிரித்தார் பேபி ஸ்ரீராம். இவரும் பிரபல பாடகிதான்.

97ல் அகாடமியில் அம்புஜம் கிருஷ்ணா அவார்டு வாங்கி இருக்கிறார் பேபி ஸ்ரீராம். இப்போது 'பாஷாங்க ராகாஸ்' என்ற தலைப்பில் பி.எச்.டி. செய்து வருகிறார். தமிழ், மலையாளம், இந்தி, உருது என்று நிறைய பாடல்கள் இயற்றி பாடியும் வருகிறார். அந்தக் கீர்த்தனைகளுக்கு ஸ்ரீராம் சிட்டஸ்வரம் அமைத்துக் கொடுத்தாராம்.

துருதுருவென்ற இரண்டு வயது மகன் பரத் இப்போதே 'தத்தோம், தத்தித்தோம், ததிங்கிணதோம்' என்று அழுத்தம் திருத்தமாய்ச் சொல்கிறான்.

சந்திப்பு : **சாருகேசி**

புகைப்படங்கள் : **ஸ்ரீஹரி**



# 22

ஸம்ஸ்கிருத சுலோகம் ஒன்று உண்டு - குருவை மட்டுமே முகத்துக்கு நேராகத் துதிக்கலாம் - பாராட்டலாம் என்ற அர்த்தத்துடன் ஆன சுலோகம்.

குரு - எதிரிலேயே துதிக்கத் தக்கவர்; நண்பர்கள், உறவினர்களை அவர்கள் காணாமல் புகழ வேண்டும்; பணியாளர்களை அவர்கள் ஒரு காரியம் செய்து முடித்தவுடனேயே பாராட்டி விட வேண்டும். ஆனால், புதல்வர்களையும் சிஷ்யர்களையும் மட்டும் எப்போதும் புகழக் கூடாது!

- இதுதான் அந்த சுலோகத்துக்கு அர்த்தம்! இன்றைக்கு நவீன காலத்திலே இது ஒத்துவராத சுலோகம். ஏற்றுக் கொள்ளக்கூடியது இல்லை என்றுகூட வாதாடலாம். ஆனால், ராமாயண காலத்தில் நடைமுறையிலிருந்த சாஸ்திரம்!

இலங்கை சென்று, கொடுத்த பணியைச் சிறப்பாக நிறைவேற்றி விட்டுத் திரும்பிய ஹனுமானை மனதார, வாயார புகழ்ந்தாராம் ஸ்ரீ ராமன்.

இதற்குக் காரணம் என்ன...? சுக்ரீவனின் சேவகன் - பணியாள் ஆஞ்சனேயன் என்பது ஒரு சாதாரண விளக்கம்தான். ஆனால், சுவாமி தேசிகன் ஸங்கல்ப சூர்யோதயத்தில் ஆஞ்சனேயனை ஒரு ஆசார்யனாக வர்ணிக்கிறார் என்று சொன்னேனல்லவா? அந்த நோக்கிலே பார்த்தால் ஸ்ரீ ராமன் நேருக்கு நேராக ஹனுமானைப் புகழ்ந்ததும்கூட நியாயமாகி விடுகிறது.

ஆசார்யன் என்பதற்காக விழுந்து சேவித்துவிட முடியுமா...? முடியாது! ஆனால் ஹனுமானை அதனினும் அதிகமாக மெய்சிலிர்க்கவும் பெருமிதம் பொங்கவும் வைக்கிறான் ஸ்ரீ ராமன்.

'இவனுக்கு நான் என்ன கைமாறு செய்வது...?' என்று ஸ்ரீ ராமனுக்கு முதலில் யோசனை எழுகிறது. 'எனக்குள்ள சகல ஐச்வர்யங்களையும் கொடுத்தாலும் போதாதே!' என்று நினைக்கிறான். பின்னர் அவன் ஐச்வர்யங்களனைத்திலும் மேலான



கல்யாணபுரம் ஆராவமுதன்

ஐச்வர்யமாக ஒன்றினை வழங்க முடிவு செய்து ஹனுமானை மார்போடு தழுவி ஆலிங்கனம் செய்து கொள்கிறான்.

எதற்காக இந்த உயர்வு ஹனுமானுக்கு...? தூதன் என்கிற முறையில் வழங்கப்பட்ட பணியை முடித்து வந்ததற்காக.

சீதாப்பிராட்டியிடம் விடைபெற்றவன் தன் உருவத்தைப் பெரிதாக்கிக்கொண்டு வெகு வேகமாக சமுத்திரத்தைக் கடந்து விடுகிறான். கரையை அடைந்து, மகேந்திர பர்வதத்தைக் கண்டதுமே அங்கதன் முதலானவர்களைப் பார்க்கப் போகிறோம் என்கிற களிப்பு ஹனுமானுக்கு ஏற்பட்டு விடுகிறது... ஒரு சிம்ஹநாத கர்ஜனை! வாலை ஒரு உதறு! – அத்தனையும் சந்தோஷத்தின் உச்சத்தில்.

**நியூ பாம்பேயில் புதிய ஹனுமான் ஆலயம்**

'நியூ பாம்பே' என்றும் 'நவின் மும்பை' என்றும் அழைக்கப்படும் வாஷி என்ற இடத்திற்கருகில் 'நெருல்' என்னும் இடத்தில் ஸ்ரீஒப்பிலியப்பனுக்கு ஆலயம் எழுப்பப்பட்டு மிகவும் பிரபலமாகி உள்ளது.

அங்கு மிகப் பெரிய உருவில் ஆஞ்சநேயர் கோயில் கொண்டுள்ளார். காஞ்சி ஸ்ரீ சங்கராசார்யருடைய அருளாசியுடன் கட்டப்பட்டுள்ள இக்கோயில் மும்பை வாசிகளுக்கு ஒரு வரப்பிரசாதம்.

அதற்கேற்றாற்போல் சமுத்திரக் கரையில் அங்கதன் முதலானோர் காத்திருக்கிறார்கள். ஹனுமானின் ஆரவாரத்தைக் கேட்டு நிச்சயமாக அவன் வெற்றியோடுதான் திரும்புகிறான் என்கிற முடிவுக்கு வருகிறார்கள்.

ஹனுமான் ஒரு பறவையைப் போல் ஜிவ்வென்று வந்து மஹேந்திர பர்வதத்தின் சிகரத்திலே இறங்குகிறான். உடனே அங்கதன் முதலானோர் அவனை நோக்கி ஓடுகிறார்கள். அவனைச் சூழ்ந்துகொண்டு பழங்களையும் உணவையும் கொடுத்து உபசாரம் செய்து மகிழ்கிறார்கள்.

# ஸ்ரீ ராமபக்த ஹனுமான்

அவர்களுள் ஜாம்பவான்தான் மூத்த குடிமகன்! அவரையும் இளவரசன் அங்கதனையும் வணங்கியெழுந்து ஹனுமான் 'கண்டேன் சீதையை' என்று முதல் வார்த்தைகளைப் பேசுகிறான். அதன் பிறகுதான் உபசாரம் வந்தனங்களை ஏற்கிறான் – இதுவும் தூது இலக்கணம். கொடுத்த பணியை முடித்துத் திரும்பிய தூதன் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதற்கான இலக்கணம்.

'கண்டேன் சீதையை' என்று அறிவித்தானதும் அங்கே ஒரு குதூகலம்தான். அதன்பிறகுதான் விவரித்துப் பேசுகிறான் ஹனுமான்.

''அசோகவனத்திலே, பயங்கர ஸ்வரூபத்துடன் கூடிய ராக்ஷஸிகள் சூழ சீதை அமர்ந்திருந்தாள். ராமனை விட்டுப் பிரிந்து, வருந்தி, இளைத்துக் கிடந்தாள்... ஸ்ரீ ராமனைக் காணும் நாளையன்றி வேறு சிந்தனையின்றி இருக்கிறாள்.''

அவ்வளவுதான்! வானரங்கள் எல்லாமாகச் சேர்ந்துகொண்டு ஹனுமானைத் தூக்கித் தோளில் வைத்துக்கொண்டு கூத்தாட ஆரம்பித்துவிட்டன!

''வாயு புத்திரனே! இந்த சமுத்திரத்தைக் கடந்துபோய் இப்படியொரு நற்செய்தியைக் கொண்டு வந்திருக்கும் உனக்கு ஈடு இணை இல்லை. உன் பராக்கிரமத்துக்கு ஈடாக ஒன்றைச் சொல்ல முடியுமானால் அது

## அருள்வாக்கு

ரஸத்தோடு, ஹாஸ்ய ரஸனையோடு கூடியதாக இன்னொரு குரு பரம்பரைக் கதை உண்டு. ராமாநுஜரின் சிஷ்யர்களில் ஒருத்தர். அவர் ஒருநாள் உள்ளே ஆசார்யருக்காகப் பால் காய்ச்சிக் கொண்டிருந்தார். வாசலில் ஸ்ரீரங்கநாதர் ஊர்வலம் வந்தது. ''தர்சனம் பண்ண வா வா'' என்று ராமாநுஜாசார்யார் வாசலிலிருந்து சிஷ்யரைக் கூப்பிட்டுக் கொண்டேயிருந்தார். ஆனால் சிஷ்யர் போகாமல் பாலையே கவனித்துக் கொண்டிருந்தார். ஸ்வாமி அந்த இடத்தைத் தாண்டிப் போய்விட்டது. ராமாநுஜர் உள்ளே வந்து, ''வாசலிலேயே பெருமாள் ஸேவை ஸாதிக்கிறபோது ஸேவிக்காமல் நீ இப்படிப் பண்ணலாமா?'' என்று கோபித்துக்கொண்டார். அதற்கு அந்த சிஷ்யர், ''உங்கள் பெருமாளை நீங்கள் ஸேவித்தது ஸரிதான்! அது நீங்கள் பண்ண வேண்டியதுதான். ஆனால் அதற்காக நான் **என் பெருமாளுக்குப்** பண்ணும் பால் ஸேவையை ஏன் பாதியில் விட்டு விட்டு வரணும்?'' என்று கேட்டாராம்!

குருவுக்காக எந்தக் கஷ்டத்தையும் ஸந்தோஷத்தோடு பொறுத்துக் கொள்கிற அளவுக்கு பக்தியானது சக்தி தந்திருக்கிறது. க்ஷத்ரியர்களை த்வேஷித்த பரசுராமரிடம பிராம்மண வேஷம் போட்டுக்கொண்டு வந்து வில் வித்தை கற்றுக் கொண்ட கர்ணனை, ஒருநாள் இவன் மடியில் அவர் தலை வைத்துப் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கும்போது ஒரு வண்டு கொட்டித் தீர்த்துவிட்டது!

---

ஸ்ரீ ராமனிடம் நீ கொண்டிருக்கும் பரம பக்திதான். உன் வீர்யமே வீர்யம்! தைரியமே தைரியம்! ராம பக்தியிலிருந்து பிறந்ததல்லவா உன் சக்தி'' என்று திளைக்கிறார்கள்.

கேள்வி மேல் கேள்வி கேட்டு அவர்கள் துளைக்க, ஹனுமானும் எல்லா விவரங்களையும் சொல்கிறான் – ஒன்றே ஒன்றைத் தவிர – சீதா பிராட்டி தன்னிடம் அந்தரங்கமாகக் கூறிய காகாசுர விருத்தாந்தத்தை மட்டும் அவன் சொல்லவில்லை. தனக்கும் ஸ்ரீ ராமனுக்கும் மட்டுமே தெரிந்த செய்தி அது என்று சீதாபிராட்டி சொல்லியிருந்தாள் அல்லவா? அந்த உணர்வுக்கு மதிப்பளித்து உத்தம தூதன் நடந்து கொண்டான்.

**வா**னர கூட்டம் ராம - லக்ஷ்மணர்களைத் தேடிப் போயிற்று. அதே கணத்தில் சுக்ரீவன் ஸ்ரீ ராமனிடம் பேசிக்கொண்டிருக்கிறான் – "நிச்சயமாக ஆஞ்சனேயன் சீதையைக் கண்டுபிடித்திருப்பான். சூரியனிடத்தில் ஒளி வீசுவதுபோல் ஹனுமானிடத்தில் காரியசித்தி, புத்தி, உற்சாகம், பராக்கிரமம் எல்லாமே எப்போதுமே நிறைந்துள்ளன."

– இவ்வாறு பேசிக் கொண்டிருக்கையிலேயே வானரர்கள் ஆரவாரத்துடன் வருவது அங்கே கேட்கிறது. ஹனுமான் மீண்டுமொருமுறை 'கண்டேன் சீதையை' என்று ஆரம்பித்து, அவள் மகா பதிவிரதையாக இருந்து வருகிறாள் என்று சொல்கிறான்.

"எங்கே இருக்கிறாள்?" என்று ஸ்ரீராமன் கேட்டதுதான் தாமதம், ஹனுமான் ஒரு காரியம் செய்தான்.

சீதை இருந்த திக்கு நோக்கி நெடுஞ்சாண் கிடையாக விழுந்து கும்பிட்டான்! அதன் பிறகு மீண்டும் பேச ஆரம்பித்து ஒன்று விடாமல் கூறினான் ஸ்ரீ ராமனிடம். காகாசுரன் பற்றிய நிகழ்ச்சியைச் சொன்னான். சீதை அளித்த சூடாமணியையும் ஸ்ரீ ராமனின் கரங்களில் வைத்தான்.

அந்தக் கணத்திலே... ஸ்ரீ ராமனின் மனத்தில் மிதிலைக் காட்சிகளெல்லாம் மீண்டும் எழுந்து வருகின்றன. கண்ணில் நீர் மல்குகிறதாம் ராகவனுக்கு!

ஹனுமானின் அந்தச் சொற்களை கம்பநாடனின் மொழியிலே படிக்கும்போது நமக்கும்கூட கண்கலங்கித்தான் போகும்:

உன் பெருந்தேவி என்னும் உரிமைக்கும்
உன்னைப் பெற்ற
மன்பெரு மருகி என்னும் வாய்மைக்கும்
மிதிலை மன்னன்
தன் பெருந்தனையை என்னும்
தகைமைக்கும் தலைமை சான்றாள்
என்பெரும் தெய்வம் ஐயா! இன்னமும்
கேட்டி என்பான்

**ஹ**னுமானின் சொல்லழகுக்குக் கேட்க வேண்டுமா...? 'இன்னமும் கேட்டி' என்று அவன் சொன்னது இருக்கட்டும்... 'இன்னும்

அசைந்து கொடுத்து அதை விரட்டினால் குருவின் நித்ரைக்கு பங்கம் வந்துவிடுமே என்று கர்ணன் ஆடாமல் அசையாமல் அத்தனை கொட்டையும் ஸஹித்துக் கொண்டான் என்ற கதை கேட்டிருப்பீர்கள். அப்புறம் அந்தக் கதை வேறு விதமாய்ப் போய்விடுகிறது.



குருவை எந்த வித்யைக்காக ஆச்ரயித்தானோ, அந்த வித்யையே சிஷ்யன் அப்யஸிக்க முடியாதபடி ரொம்பக் கடுமையாக, கொடுமையாக குருவானவர் தக்ஷிணை கேட்டபோது தயங்காமல் கொடுத்த ஏகலைவன் கதையையும் இன்றுவரைக்கும் சொல்லிக் கொண்டிருக்கிறோம்.

ஆழ்வார்களில் மதுரகவி என்று ஒருத்தர். அவர் பாடினது (பதினோரு பாசுரங்கள் கொண்ட) ஒரே ஒரு பாடல் தான். அதுவும் மஹாவிஷ்ணுவைப் பற்றியதில்லை. ஆனாலும் அதை நாலாயிர திவ்யப்பிரபந்தத்திலே சேர்த்து, மதுரகவியையும் ஒரு ஆழ்வாராக உயர்த்தி வைத்திருக்கிறார்கள். ஏனென்றால் அவருடைய குருபக்தி விசேஷத்துக்காகத்தான்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

கொஞ்சம் சொல்லேன்...' என்று மீண்டும் மீண்டும் சீதையைப் பற்றிக் கேட்டு அறிகிறானாம் ஸ்ரீ ராமன்.

கேட்கக் கேட்கத்தான் இத்தனை அரியதொரு செயலை முடித்துத் திரும்பியுள்ள ஹனுமானுக்கு கைமாறு செய்ய வேண்டும் என்று உந்துதல் வருகிறதாம் ஸ்ரீ ராமனுக்கு. அந்த தீனசரண்யன் பக்தனுக்குக் கைமாறு செய்யக் கருதிய எண்ணத்தைச் சொல்வதா? அல்லது அதை நிறைவேற்றிய பாங்கைச் சொல்வதா? பலருக்கும் கிடைக்காததொரு பாக்கியம் ஹனுமானுக்குக் கிடைத்தது.

அது மட்டுமா...? ஆஞ்சநேயன் எத்தனை அழகாக ஆறுதல் சொல்கிறான் ஸ்ரீ ராமனுக்கு?

சூடாமணியைப் பெற்றுக்கொண்டு கண் கலங்கிய ஸ்ரீ ராமனைப் பார்த்து ஆஞ்சநேயன் சொன்னானாம்:

"ப்ரபோ! தேவி கஷ்டப்படுவதாக நீங்கள் கலங்கலாகாது! கஷ்டம் என்பது என்ன...? தங்கள் ஸ்மரணமும் பஜனையும் இல்லாமலிருப்பதுதானே கஷ்டம். சீதாபிராட்டியாரிடம் இவை இடைவிடாது இருந்து கொண்டேயிருக்கின்றனவே. ஆனால் நீங்கள் அவரை மீட்டு வர வேண்டியது மட்டுமே பணி."

அதற்குப் பிறகுதான் ராமபிரான் அவனைத் தழுவி அருள் செய்கிறான்.

இங்கே ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகளின் கீர்த்தனை ஒன்று ஞாபகம் வருகிறது - தோடி ராக கீர்த்தனை:

"தாசரதி! நீ ருணமு தீர்ப்ப நா தரமா..."

'ருணம்' என்றால் கடன். 'ஹே தசரதன் மைந்தா! உன் கடனைத் தீர்க்கும் தரத்தவனா நான்?' என்பது பக்தர் தியாகராஜர் பகவானைப் பார்த்துக் கேட்பது.

இங்கே ஸ்ரீ ராமனே பக்தனைப் பார்த்துக் கேட்கிறான் 'உன் கடனை எப்படித் தீர்ப்பேன்?' என்று!

இதற்கும் மேலான ஒரு நிகழ்ச்சியை துளஸிதாசர் விவரிக்கிறார் பாருங்கள்:

'உன் கடனை எப்படித் தீர்ப்பேன்?' என்று பரமபாவன ராமன் கேட்டால் ஆஞ்சநேயனுக்கு எப்படி இருக்கும்...? சிலிர்த்துக் குறுகியதாம் அவன் உடம்பு! "பகவானே! காப்பாற்று! காப்பாற்று!" என்று சொல்லி ராமனின் சரணாரவிந்தங்களில் வீழ்ந்தானாம்.

ராமபிரான் மீண்டும் மீண்டும் அவனை எழுப்பிப் பார்க்கிறார். ஹனுமானோ, பிரேம பக்தியில் ஆழ்ந்து தன்னை மறந்து அந்தப் பாதங்களைப் பற்றிக் கொண்டேயிருக்கிறான். "ராமபிரான் எல்லையற்ற கருணையுடன் ஹனுமானின் தலையைத் தடவி எழுப்பி மார்புறத் தழுவி ஆலிங்கனம் செய்துகொண்டான்" என்கிறார் துளஸிதாசர்.

பக்தனும் பரமனும் ஒரு வார காலம் அப்படியே இருக்கட்டுமே!

(வளரும்)

கல்கி–ரமணி Vs ரமணி இணைந்து நடத்திய 'தம்பதி தமாஷ்' போட்டியில் ஆறுதல் பரிசாக ரூ.2000/- மதிப்புள்ள பட்டுப்புடைவை பரிசு பெறும் கட்டுரை – 2

# டாட்டா

என் வீட்டுக்காரி தெருவில் வருகிற காய்கறிகாரிகளைச் சமாளிப்பதில் ஆகட்டும், குழந்தைகளைக் கண்டிப்பதிலாகட்டும் தெரிந்தவர்களிடமும் உறவினர்களிடமும் அருண் ஐஸ்கிரீமாக உருகிப் பேசுவதிலாகட்டும் ஆல்-ரவுண்டர் ஜெயசூர்யா மாதிரி. இவ்வளவு திறமை வாய்ந்த என் பெண்டாட்டி ஆரம்பக் காலத்தில் ரன் எடுப்பதிலும் கொடுப்பதிலும் கத்துக்குட்டி போல் விளையாடும் அகார்கர் மாதிரி இருந்ததை, நினைச்சா சிரிப்பா வருது.

கல்யாணமான புதுசுல ரொம்ப வெகுளி, நான் வேலைக்குப் போகும் போதெல்லாம் கான்வென்ட் குழந்தைங்க மாதிரி டாட்டா காட்டிட்டுத் தான் போகணும்னு அடம் பிடிப்பாள். எனக்கு இது விபரீதமாகப்பட்டாலும் புதுப் பொண்ணு மனசு கோணிடக் கூடாதே என்று நானும் டாட்டாவுக்கு ஆட்பட்டேன்.

சென்னையில் என் நெருங்கிய உறவினர் வீட்டுத் திருமணத்துக்கு



# திரும்பத் திரும்பப் பெண்!

முதன் முதலாக என் பெஞ்சாதியை வெளியூர் அழைத்துச் செல்லும் வாய்ப்பு ஏற்பட்டது. திருவல்லிக்கேணியில் ஒரு குறுகிய சந்தில் மாடி ஒன்றில்தான் உறவினரின் வீடு. பசி வந்தால் பத்தும் பறந்து போகும் என்பார்களே அதுமாதிரி என் உறவின நண்பனைக் கண்டதும் அதிமுக்கியமான டாட்டா உட்பட அனைத்தையும் மறந்து அவனுடன் ஊர் சுற்றப் போய் விட்டேன். திரும்பி வரும் போது வீடே அல்லோல கல்லோலப்பட்டுக் கொண்டிருந்தது. பதறியடித்து உள்ளே சென்றால் தீ பிடித்த ஏரியாவாசிகள் தீயணைப்பு வண்டியை எதிர்பார்த்து காத்திருப்பது மாதிரி என் வருகைக்காக உறவினர்கள் காத்திருந்தார்கள். "நீ வெளியே



போனதும் உன் வூட்டுக்காரிரும் கதவைப் பூட்டிக் கொண்டு ஒரே அழுகை! எங்களுக்கு ஒன்றுமே ஓடலை" என்று மனு கொடுத்தார்கள்.

நான் அறைக் கதவைத் தட்டி, குரல் கொடுத்ததும் நல்ல வேளையாக அடம் பிடிக்காமல் கதவைத் திறந்து என்னை மட்டும் உள்ளே விட்டு மீண்டும் பூட்டி விட்டாள். சர்க்கஸில் சிங்கக் கூண்டுக்குள் நிராயுதபாணியாகச் செல்லும் ரிங்மாஸ்டர் போல மெல்ல அவள் அருகே போய், "மன்னிச்சுக்கோ! தெரியாம நடந்து போச்சு. ஊர் போய்ச் சேர்ந்ததும் முதல் வேலையாக 'ஆர்எம்கேவி'யில் புட்டா சாரி எடுத்துத் தருகிறேன்" என்று சொன்னதுதான் தாமதம். உடனே கண்ணைத் துடைத்துக் கொண்டு பத்மினி, பானுமதி நடிப்பையெல்லாம் மிஞ்சுகிற மாதிரி முகத்தில் செயற்கை புன்னகையைப் பரவ விட்டாள்.

முதல் நாள் பூகம்பத்தை மனத்தில் கொண்டு, அங்கிருந்த மூன்று நாட்களும் மாடியை விட்டு கீழே இறங்கும் வரை 'டாட்டா' காட்டியபடியே சென்று வந்தேன். என்னுடைய கையாட்டும் வேகத்தைப் பார்த்த தெருவாசிகள் கீழ்ப்பாக்கம் நோயாளியாக என்னை நினைத்து மிரண்டது, டாட்டாவை விட கொடூரமாக இருந்தது.

டாட்டா! பை! பை!○

**ஏ. முஹம்மது ஹுமாயூன்**

# நடக்குமென்பார், நடக்கும்



**மேஷம்:** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

உங்க ஆற்றலும் புத்தி சாலித்தனமும் 'பளிச்'னு வெளிப்படப் போகுது. தெளிவா தன்னம்பிக்கையோடு இருப்பீங்க. பண நிலைமையை உசத்திக்க சந்தர்ப்பம் வரும். 'லபக்'னு பிடிச்சுக்கங்க. குடும்பத்தில் சின்ன சின்ன சலசலப்பு ஏற்படும், ஆனால் சமாளிச்சிடுவீங்க.



**ரிஷபம்:** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

உங்க மதிப்பும் செல்வாக்கும் எங்கேயோ போகப் போகுது. எதிர்ப்புகளை எல்லாம் உடைச்சு எறிஞ்சிட்டு முன்னேறப் போறீங்க. காசு, பணம் நிறையவே வரப்போகுது. திடீர் அதிர்ஷ்டம் அடிக்கவும் சான்ஸ் இருக்கு. நல்ல சேதி வந்துக்கிட்டே இருக்கு. ஆனால், புதுசா பழகறவங்ககிட்ட மட்டும் உஷாரா இருங்க. சாப்பாட்டு விஷயத்தில் அசால்ட்டாக இருந்திடாதீங்க. வீண் அலைச்சலைக் கண்டிப்பாய்த் தவிர்க்கணும்.



**மிதுனம்:** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உண்மையா நேர்மையா நடந்துக்கங்க. எல்லாப் பிரச்னையையும் சமாளிச்சிடலாம். வாழ்க்கை நியதின்னு ஒண்ணு இருக்கே, அதை அனுசரிச்சுப் போயிட்டா பெட்டர். வீண் வம்பு, சண்டை சச்சரவுக்கெல்லாம் 'நோ' சொல்லிடுங்க. கெட்டவங்களோட சகவாசம், கெட்ட எண்ணங்கள் எல்லாத்தையும் தூர எறிஞ்சிடுங்க. எதிரிகளோட கை ஓங்கியிருக்கு. அடக்கி வாசிங்க. புது முயற்சி எல்லாம் அப்புறம் பார்த்துக்கலாம்!



**கடகம்:** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

உங்களுடைய சில முக்கியமான ப்ளான்கள் 'வர்க்-அவுட்' ஆயிடும். பணம் தாராளமாகப் புழங்கும். ஆனால் அதுக்காக சிக்கனத்தை விட்டுடாதீங்க. எதிரிகள் காணாமல் போயிடுவாங்க. அண்ணா, அக்கா இவங்க மூலம் நல்லது நடக்கும். ஆனால் எதிலும் விவேகமா நடந்துக்கங்க. பயணத்தின் போது, குறிப்பா நீங்க டூ-வீலர் ஓட்டுபவராக இருந்தா ரொம்பவே ஜாக்கிரதையா இருங்க.



**சிம்மம்:** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

பெயரும் புகழும் கிடைக்கும் காலமிது. எல்லாரும் உங்க புத்திசாலித்தனத்தைத் தெரிஞ்சுக்குவாங்க. தைரியமா தன்னம்பிக்கையோட எடுத்த காரியத்தை வெற்றிகரமாக முடிச்சுடுவீங்க. வீடு, நிலம் வாங்கவும் சான்ஸ் இருக்கு. பெண்களுக்குக் குறிப்பா சோதனைகள் ஜாஸ்தியாகும். செய்யும் தொழில் எதுவா இருந்தாலும் சிரத்தையோட செய்யுங்க. கேளிக்கை, விளையாட்டு இதில் எல்லாம் கவனத்தைச் சிதற விடாதீங்க.



**கன்னி:** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

உங்க முகராசி நல்லாவே இருக்கு. சாமர்த்தியத்தால் எல்லாரையும் கவர்ந்து உங்களுக்கு வேண்டியதை நிறைவேற்றிக் கொள்வீங்க. பண நடமாட்டம் திருப்தியாவே இருக்கும், திடீர் அதிர்ஷ்டம் அடிக்கவும் வாய்ப்பு உண்டு. கனிவா, இனிமையாப் பேசுங்க. பதட்டமோ அவசரமோ வேண்டாம். வீண் வம்பு சண்டை சச்சரவுன்னா காது கொடுத்து கேக்காதீங்க.



**துலாம்:** *(சித்திரை 3, 4-ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1,2,3-ஆம் பாதங்கள்)*

பார்ட்டி, டூர்னு கலக்கப் போறீங்க. பெண்களுக்

# அக்னிசர்மா பக்கம்

குக் குறிப்பா இது குஷியான வாரம். ஆன்மிக விஷயத்திலேயும் ஈடுபாடு ஜாஸ்தியாகும். பலன், மனசு தெளிவா இருக்கும். எந்தக் காரியமானாலும் அவசரப்படாம ஒரு தடவைக்குப் பத்து தடவை யோசிச்சு நிதானமாகச் செய்யுங்க. திடீர் அதிர்ஷ்டத்தை எல்லாம் நம்பாதீங்க.



**விருச்சிகம்:** *(விசாகம் 4-ம் பாதம், அனுஷம், கேட்டை)*

சில கஷ்டங்கள் வரத்தான் செய்யும், கோபப்படாதீங்க. கனிவா பேசுங்க, நிதானமா நடந்துக்கோங்க. நல்லவங்க, முக்கியமானவங்க உங்களுக்குப் பக்க பலமாக இருக்கப் போறாங்க. பணமும் தாராளமாகப் புழங்கும். ஆனால் அதுக்காக வீண் செலவு செஞ்சிடாதீங்க. கைப்பொருள் பத்திரம், தொலைவதற்கு சான்ஸ் இருக்கு.



**தனுசு:** *(மூலம், பூராடம், உத்திராடம் 1-ஆம் பாதம்)*

எடுத்த காரியமெல்லாம் வெற்றிதான் போங்க. குடும்பத்தில் மகிழ்ச்சி குதூகலத்துக்குக் கேட்கவா வேணும்? உங்க பேச்சே 'ஸ்வீட்'டாகத் தான் இருக்கும். பெண்கள், தங்களோட ஆசை நிறைவேறியதில் குஷி ஆயிடுவாங்க. செலவு ஜாஸ்தியாகும், ஆனால் நல்ல காரியத்துக்காக. உடம்பை மட்டும் ஜாக்கிரதையா கவனிச்சுக்கங்க. பெரியவங்களோட அட்வைஸ் கேட்டு நிதானமா நடந்துக்கங்க!

**மகரம்:** *(உத்திராடம் 2, 3, 4-ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2-ஆம் பாதங்கள்)*

உங்களோட பிளான் எல்லாம் நிமிஷத்தில் நிறைவேறப்போகுது. பணவிஷயம் ஓ.கே., திடீர் அதிர்ஷ்டம் கூட அடிக்கலாம். புது டிரெஸ், நகைன்னு கலக்குவீங்க. உத்தியோகம் பண்றவரா நீங்க?– இன்க்ரிமென்ட், பிரமோஷன் நிச்சயம் உண்டு. கடவுள், பிரார்த்தனை இதிலெல்லாம் ஆர்வம் ஜாஸ்தியாகும். கல்யாணம் ஆகலையே, குழந்தை பிறக்கலையேன்னு கவலையா இருக்கா? கவலையை விடுங்க, நல்ல நேரம் வந்தாச்சு. இனி சுப யோகம் தான்.



சிம்மராசிக்காரரான கமலஹாசனுக்கு பெயரும் புகழும் கூடும் காலமாமே!



**கும்பம்:** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்க சாமர்த்தியத்தை எல்லாரும் தெரிஞ்சுக்கப் போறாங்க. எதிரிங்க உங்களைப் பார்த்த உடனே காத தூரம் ஓடிடுவாங்க. வி.ஐ.பிங்களோட கடாட்சம் உங்களுக்கு நிறையவே உண்டு. ஆனால், குறுக்கு வழியில் மட்டும் போயிடாதீங்க. வேலைப்பளு ஜாஸ்தியாகும், எரிச்சல் படாதீங்க. குழந்தைகள் விஷயத்தில் கொஞ்சம் ஜாக்கிரதையா இருக்கணும்.

**மீனம்:** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

உங்க கவர்ச்சி அம்சம் அதிகரிக்கப் போவது. அதோடு, திறமை, உழைப்பு, நேர்மை மூணுக்கும் பலன் கிடைக்கப் போகுது. ஆனால் கொடுக்கல் வாங்கலில் கொஞ்சம் உஷாராவே இருந்திடுங்க, இல்லைன்னா நாமம்தான். பயணம் செய்யும்போது ஜாக்கிரதை. கூடப்பிறந்தவங்களோட கசமுசா ஏற்படலாம், நிதானமாகச் சமாளியுங்க! செய்யும் தொழிலே தெய்வம்னு முழு கவனத்தோடு செய்யுங்க, அது ரொம்ப முக்கியம்!

அஜய் பற்றி, சீனுவாசராகவன் சொன்னது எதுவுமே கேதாரிக்கு உறுத்தலாய்ப்படவில்லை. ஒரு மனிதரை ஒருமுறை பார்த்துவிட்டாலே கேதாரி சுலபமாய் எடை போட்டு விடுவார். போதாக்குறைக்கு ப்ரீதி வேறு அவரைப் பற்றி நிறைய சொல்லி யிருக்கிறாள்.

இப்பொழுது அவரது கவலை யெல்லாம் அஜய், ப்ரீதியைக் காதலித்து, கைவிட்டு விடுவானோ என்பதல்ல... அஜய் அப்படிப்பட்டவனல்ல என்பது கேதாரியின் திடமான நம்பிக்கை...

ஆனாலும் இந்தப் பிள்ளையாண்டான் கடிதம் எழுதியது நம் மகளுக்குத்தானா இல்லை வேறு எவளுக்காவதா என்பதுதான்... காரணம், விஷயம் சீனுவாசராகவன் வரையில் வந்திருக்கிறது; ஆனால் இந்தப் பெண் 'அமுங்குணி மாங்கொட்டை'யாக, அமுத்தமாக இருக்கிறாளே என்பதுதான்...

காலையில் மகளை அலுவலகத்திற்கு அனுப்பிய அடுத்த அரை மணி நேரத்திலிருந்தே - அவள் தனக்கு போன் செய்வாள் என்று காத்திருந்தார் அவர். சாதாரணமாக ப்ரீதி மதிய உணவு இடைவேளையின்பொழுது ஒருமுறை அப்பாவுக்கு போன் செய்து 'சாப்பிட்டீர்களா!' என்று கேட்பாள். சமயம் கிடைத்தால் அவர் தயாரித்துத் தந்த மதிய உணவு பற்றி நக்கலாக விமர்சிப்பாள்.

"பாலக்காடு மணி அய்யரோட மிருதங்கத்தைக் கேட்டுண்டே குக்கர் வச்சேளாப்பா, ஏன்னா சாதம் குழைஞ்சுடுத்து... மிருதங்கத்துக்கு உபயோகமா இருக்கும்."

"ஆமா... இத்தனை வயசுக்கு மேல, உங்களுக்கு ஏன் இவ்வளவு வாய்க்கொழுப்புன்னு இப்பத்தான் புரியறது. அவியல்ல மலபாரையே அரைச்சு விட்டிருக்கீங்களே... புரியலையா... நான் தேங்காய சொல்றேம்பா..."

"அப்பா, நிஜமாவே இன்னிக்கு சப்பாத்தியும் சைட் டிஷ்ஷும் பிரமாதம்... இந்த வேலையை விட்டுட்டாகூட எனக்குக் கவலையில்லை. உங்க உதவியோட ஒரு



அனுராதா ரமணன்

# இனிமேல்



ஃபாஸ்ட்ஃபுட் கடை ஆரம்பிச்சுடு வேன்...''

இப்படி எதையாவது சொல்பவள் இன்று பேசவேயில்லை... மாலையில் வழக்கமாய் அவள் வீடு வந்து சேர ஏழரை மணியாகிவிடும். அதற்குள் கபாலீஸ்வரரைப் பார்த்து அவரது ரொமான்டிக் மூடான ப்ரதோஷ காலத்தில் தனது அப்பீலைக் கொடுத்துவிட்டு வரலாமென்று கோவிலுக்கு வந்தால்...

இங்கே மகாபாரதத்துச் சகுனியை யும், ராமாயணத்து மந்தரையையும் ஒன்றாகப் போட்டு மிக்ஸியில் அடித் தாற்போல இந்த மனிதர் சீனுவாச ராகவன் வந்து நிற்கிறார்.

அவருக்கு வருத்தமாக இருந்தது.

'என்ன இந்தப் பொண்ணு.... ஹாண்ட்பேக் உள்ளே இரண்டு மாசத் துக்கு முன்னாடி பார்த்த சினிமா டிக்கெட்டையும், தீர்ந்து போன பாப் கார்ன் கவரையும்கூட பத்திரமா வச்சிருப்பா... அப்பப்ப நான் பார்த்து காலி பண்ணணும். இப்படியொரு சரித்திரப் புகழ் வாய்ந்த லவ் லெட்டரை நாலு பேர் பார்க்கறமாதிரி போட்டு வச்சிருக்காளே... ஒருவேளை இந்த லெட்டர் அவளுக்கு வந்ததில் லையோ... அந்த வருத்தத்திலதான் தூக்கிக் கடாசிட்டாளோ...'

கோயிலிலிருந்து வீடு வந்தவர், மகளின் வருகைக்காக வழிமேல் விழி வைத்துக் காத்திருக்கிறார்.

வந்தவளின் முகம் சுரத்தாக இல்லைதான். அவளோடு எப்படி பேசுவது? அவளே ஏதாவது சொல் வாள் என்று கேதாரி காத்திருந்தது தான் மிச்சம். மகள் தேய்க்கப் போட்ட லஞ்ச் பாக்ஸ் அவரது இதயத்தைப் போலவே கனமாக இருக்கிறது.

'மத்தியானம் சாப்பிடவேயில் லையோ... பசி பொறுக்க மாட்டாளே குழந்தை. எத்தனைக் கோபமானாலும், எவ்வளவு சண்டை போட்டாலும் வேளாவேளைக்குச் சாப்பிட்டுவிட்டு சண்டையையும் கோபத்தையும்

கன்டினியூ பண்ணுவதுதானே அவள் வழக்கம்.

அதற்கு மேல் மனசு கேட்கவில்லை கேதாரிக்கு... நேரடியாகவே விஷயத்துக்கு வருகிறார்.

"என்னாச்சு அந்த ஈமெயில்... நீயா ஏதாவது சொல்லுவேன்னு பார்த்தா வாயில போண்டா அடைச்ச மாதிரி உட்கார்ந்திருக்கே..."

"ப்ச்... அதைப் பத்தி அஜய் இன்னும் சொல்லவேயில்லை. அவர் எங்கேயோ ஒரு ஹோட்டல்லே, கம்பெனி மீட்டிங்லே இருக்காரு... நாளைக்கு ஆபீஸுக்கு வந்தாதான் தெரியும்..."

"ஆனா, இந்த லெட்டர் விவகாரம் ஆபீஸ் முழுக்க தெரிஞ்சு போச்சு போலிருக்கே..."

– இப்படி அவர் சொன்னதும்... அவள் அதிர்ந்தாள். அடர்ந்த இமைகளைப் படபடத்தபடி அப்பாவை விழுங்கிவிடுவது போலப் பார்த்தாள்.

"என்னது... எப்படி?"

– அவள் கேட்க, அவர் கோயிலில் சீனுவாசராகவனைச் சந்தித்ததையும் கடிதத்தின் நகலைக் கொடுத்ததையும் கூடவே அவர் அளித்த உபதேசங்களையும் சொல்கிறார்.

"இத்தனை நேரம் அந்த மனுஷந்தான் போற வழியெல்லாம் போஸ்ட்டர் அடிச்சு ஒட்டிண்டே போயிருப்பார்... என்ன பொண்ணும்மா நீ... இப்படியா அந்த லெட்டரை டேபிள் மேல அனாதையா போட்டு வைப்பே? இத்தனை வருஷம் ஆச்சு; உங்கம்மா உன்னை பிரசவிக்கறத்துக்காக, பிறந்தகத்துக்குப் போயிருந்தப்போ எனக்கு எழுதியிருந்த முதல் லெட்டர் – ஒரு



வார்த்தை கூட அதுல காதல் வசனம் கிடையாது – 'உடம்பைப் பார்த்துக்கோங்கோ; சனிக்கிழமைத் தவறாம எண்ணெய் தேய்ச்சுக்கோங்கோ; வேலைக்காரி கேட்டான்னு முன் பணமா சம்பளத்த கொடுத்துட்டுப் பேந்தப் பேந்த முழிக்காதீங்கோ; ஜமா சேர்ந்துண்டு நைட்ஷோவுக்குப் போய் உடம்பையும் மனசையும் கெடுத்துக்க வேண்டாம்... இப்படிக்கு எப்பவும் உங்கள் நினைப்பாகவே இருக்கும் கௌரி...' – இதுதாம்மா எழுதியிருந்தா... ஆனா இன்னிவரைக்கும் அந்தக் கடுதாசியை எடுத்து படிக்கறப்பெல்லாம், உங்க அம்மாவே என் எதிர்த்தா மாதிரி வந்து நிற்கிறாப்பல இருக்கும்..."

அவர் இதைச் சொல்லி முடிப்பதற்குள், ப்ரீதியின் கன்னங்களில் கண்ணீர் முத்துக்கள் உருண்டோட, மனிதர் பதறியே போய்விட்டார்.

இத்தனை வருடங்களில், மகளின் விழிகளில் தூசு படக்கூட அனுமதித்ததில்லை அவர். மேலும் பல பெண்களைப் போல எடுத்ததெற்க்கெல்லாம் 'பொல பொல'வென அழுகிற ரகமாய்ப் பெண்ணை வளர்த்ததும் இல்லை அவர். சிறு வயது முதலே சொல்லிச் சொல்லி உரமேற்றியிருந்தார் அவளை...

"அசடு மாதிரி அழறதுனால ஒரு பைசாக்குப் பிரயோஜனம் உண்டா... ஒரு பாட்டைக் கேட்டு ரசிச்சு அழலாம்; நல்ல கவிதைல நெஞ்சுருகி அழலாம்; அடுத்தவங்க படற கஷ்டத்தைப் பார்த்து இரக்கப்பட்டு அழலாம்; ஆனா நம்ம மேல நாமே பரிதாபப்பட்டு அழறது இருக்கே... அதை மாதிரி ஒரு சத்ரு வேறு எதுவுமே இல்ல... அழறதுல செலவிடற நேரத்தை ஆக்கபூர்வமா என்ன செய்யலாம்ங்கறதுல செலவிடு... கண்ணீர் விலை மதிக்க முடி

"ஹனிமூன்!'ன்னு தொலைக் காட்சித் தொடர் ஒண்ணு எடுக்க ஆரம்பிச்சீங்களே, இப்ப எவ்வளவு தூரத்துல இருக்கு?"

"ஆரம்பிச்சு ரொம்ப காலம் ஆனதுனாலே சஷ்டியப்த பூர்த்தின்னு பேரை மாத்தி எடுத்திட்டிருக்கேன்."

– வடவள்ளி, ஆர்.எஸ்.லக்ஷ்மி

> **"உ**ங்க ஆன்மிக புத்தகத்துக்கு சிம்ரனும் அத்வைத சாரமும்னு தலைப்பு கொடுத்திருக்கீங்களே, ஏன் குருவே?"
>
> **"கொஞ்சத்துக்குக் கொஞ்சமாவது கவர்ச்சி இல்லாத எந்த விஷயமும் போணியாகாது அப்பனே!"**
>
> **- உ. ராஜாஜி**

யாதது... அதை வேஸ்ட் பண்ணக்கூடாது..."

இப்படி அவரால் வளர்க்கப்பட்ட ப்ரீதி அழுதால் - அதுவும் காதலால் கரைந்து அழுதால் - அவரால் தாங்கிக் கொள்ள முடியுமா? அவர் உண்மையிலேயே அஜய்க்கும் இவளுக்கும் நடுவிலுள்ள சிநேகம் எப்படிப்பட்டது என்பதைத் தெரிந்துக் கொள்ள மெதுவாகக் கேள்விகளால் கொக்கி போடுகிறார்.

"ஏம்மா... பெரிய இடத்துப் பிள்ளை லவ் லெட்டர் எழுதறதையே ஒரு பொழுது போக்கா வச்சிட்டிருப்பானோ...?"

"சேச்சே... என்னப்பா நீங்க... அவருக்கு லஞ்ச் டயத்துல சாப்பிடக் கூட நேரமிருக்காது... அடிக்கடி காஃபியைக் குடிச்சிட்டு வேலையே கதின்னு கிடப்பார்... எங்க ஆபீஸ்ல வயசான, கல்யாணமான லேடீஸ் கூட அஜய்யை ஒரு ஹீரோமாதிரிதான் பார்ப்பாங்க..."

"ஒருவேளை தான் ஹீரோ மாதிரி இருக்கோம்கற கர்வமே அவனுக்கு நிறைய இருக்குமோ..."

"போங்கப்பா... 'சிம்ப்ளிசிடி'ன்னா என்னன்னு அவரைப் பார்த்து தெரிஞ்சுக்கணும்... தன் பர்சுல எவ்வளவு பணம் இருக்கு... கான்ப்ரன்ஸுக்கு என்ன சூட் போட்டுக்கணும்... இப்படி ஆரம்பிச்சு, அவரோட படிச்ச ஸ்கூல் ஃப்ரண்டுக்கு எப்படியாவது ஒரு வேலைவாங்கித் தரணுங்கறதுவரை எல்லாத்தையும் எங்கிட்ட பேசுவார்..."

"அப்படிப்பட்டவன் இன்னும் ஏன் உனக்கு இந்த லெட்டரை போஸ்ட் பண்ணல்ல... அல்லது ஈமெயில் பண்ணல... நீ இதைப் பத்தி ஏதாவது கேட்டியா..?"

அவர் கேட்க, ப்ரீதி சின்னப் பெண் போல தலையாட்டுகிறாள்...

"ம்... கேட்டேனே... எப்படி எழுதறது..? மனசுல இருக்கறதை என்ன சொல்லி விளக்கறதுன்னு புரியாம வார்த்தைகளைத் தேடிட்டு இருக்காராம்... அப்படி தேடி முடிச்சு லெட்டரை ஒரு விதமா வடிவமைச்சுட்டு தானே ஈமெயில் பண்ணிடறதா சொன்னாரு..."

கேதாரியின் முகத்தில் மேகம் விலகி சூரிய வெளிச்சம்...

"அப்ப கவலையை விடு... நாளைக்கு ஆபீசுக்குப் போனதும் உன்னோட மெயில் பாக்ஸைத் திறந்து பாரு... லெட்டர் இருக்கும்..."

அவர் அழுத்தமாகச் சொன்னார்... அவளோ, கவலையுடன் கேட்டாள்...

"அதெப்படி அத்தனை நிச்சயமாய்ச் சொல்ல முடியும்... அந்த லெட்டரே எனக்கில்லாம வேறு யாருக்கோ எழுதப் பட்டதா இருந்தா?"

தன்னை அப்படியே தூக்கி வாஷிங் மிஷினில் போட்டு சுவிட்சைப் போட்டது போல அதிர்ந்தார் கேதாரி... மகளின் முகத்தை ஏறிட்டுப் பார்க்க தைரியமில்லை...

"அப்படியெல்லாம் இருக்காது... உன்னை விட புத்திசாலியான, அழகான ஒருத்தியை அவன் ஆயுசுல பார்த்திருக்க முடியுமா என்ன? உன் மெயில் பாக்ஸுல நிச்சயமாய் இருக்கும்..."

- அழுத்தமாகச் சொல்கிறார் அவர்.

மறுநாள் ப்ரீதி அலுவலகத்துக்குக் கிளம்பியதும் கேதாரி நேராக தனது மனைவியின் புகைப்படத்துக்கு முன் நின்று கண்ணீர் மல்கச் சொல்கிறார்...

"அவ ஆசைப்பட்டது எல்லாத்தையும் என்னாலே செஞ்சு தர முடிஞ்சது கௌரி... இந்த விஷயத்துல நீதான் எனக்கு பக்க பலமாய் இருந்து உதவணும்... இப்ப, நான் செய்யப் போற காரியம், ஒரு தகப்பன் செய்யக் கூடியது இல்லைதான்... ஆனால் ஏதோ ஒரு அசட்டுத் துணிச்சல்ல செய்யறேன்..."

இதைச் சொல்லிவிட்டு அவசரமாய் வீட்டைப் பூட்டிக் கொண்டுக் கிளம்புகிறார் கேதாரி.

(தொடரும்)



# வருஷம் புதுசு

வேண்டும் பொழுதில்
முகிலனுப்பும்படியாகக்
கடலைத் தூண்டவும்

போதும் எனும்போது
முகிலை
உலர் சலவை செய்து
உயரத்தில் தொங்கவிடவும்

சூரிய உருண்டையைச்
சுட்டுவிரலால் தொட்டுப்பார்க்கவும்

ஓசோன் ஓட்டைகளுக்கு
ஒட்டுப் போடவும்

இளமையின் எல்லையை
நீட்டிக்கவும்

உயிர்ப் பிரிதலை
ஒத்தி வைக்கவும்

உள்ளொளி வீசும்
சூரிய மனதை நோக்கி
ஓரடியேனும் எடுத்துவைத்து
அணுகிப் பார்க்கவும்

என
நலம்பல-மீதமிருக்க
இப்போதே ஓய்வெடுக்க
எண்ணினால் எப்படி?
வருஷம் புதுசு!
அறிவே எழு...

— ம. திருவள்ளுவர்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

# உங்கள் சமையல் சுவையானதாக மட்டுமில்லாமல்

## தரமாகவும் இருக்க

## ஆவின் நெய்

AGMARK SPECIAL GRADE

aavin Pure Ghee

ஆவின்

Naturally Nutritious

ஆவின் – தமிழ்நாடு அரசு கூட்டுறவு நிறுவனத்தின் தரமான தயாரிப்பு

Visit us at : www.tn.gov.in / www.chennaionline.com /
www.aaraamthinai.com / www.southindia.com / www.webulagam.com

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka